# தந்திரா

## கூறும் உடல் - உன்னத வாழ்வியல் இரகசியங்கள்

**(Tantra Reveals the Secrets of Body and Ethical Life)**



எஸ்.குருபாதம்

# தந்திரா கூறும்

# உடல் - உன்னத வாழ்வியல் இரகசியங்கள்

## Tantra Reveals the Secrets of Body and Ethical Life

### எஸ். குருபாதம்



**மணிமேகலைப் பிரசுரம்**
தபால் பெட்டி எண் : 1447
7 (ப.எண் 4), தணிகாசலம் சாலை,
தியாகராயநகர், சென்னை – 600 017.
தொலைபேசி : 2434 2926, 2434 6082
மின்அஞ்சல் : manimekalai1@dataone.in
மின் இணையம் : www.tamilvanan.com

# நூல் விவரம் BOOK - DETAIL

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | தந்திரா கூறும் உடல் - உன்னத வாழ்வியல் இரகசியங்கள் |
| Title of the book | : | Tantra Reveals the Secrets of Body and Ethical Life |
| Classification | : | தத்துவவியல் (தந்திரா ஞானம்) Philosophy (Essence of Tantra) |
| ஆசிரியர் | : | **செல்வத்துரை குருபாதம்** |
| Name of Author | : | **Selvadurai Gurupatham** |
| E-mail | : | gurujeya@ymail.com |
| Residence | : | 180 Bonspiel Drive, Toronto, MIE 5K4 Ontario, Canada. |
| Cover Design, Typeset, Pictorial Images & Editing | : | ஜெயஜோதி (ஜெயா) குருபாதம் Jeyajothy(Jeya) Gurupatham (nee Paramsothy) |
| Type set by | : | Niranjana Sutharsan nee Paramanantham |
| Language | : | Tamil |
| Year of Publication | : | 2014 |
| Edition | : | First |
| Copyright reserved | : | Author |
| Paper | : | 70 GSM |
| Book Size | : | Demi Size (14 x 21 Cm.) |
| Point Size | : | 11 Point |
| மொத்த பக்கங்கள் | : | xvi + 212 = 228 பக்கங்கள் |
| No. of Pages | : | xvi + 212 = 228 |
| Price | : | **Rs. 150.00** |
| D.T.P. | : | P.S. Muthu Graphics, Chennai - 15. |
| Printing | : | Script Offset, Chennai - 94 |
| Publisher | : | Manimekalai Prasuram, Chennai - 17 |

**அட்டைப்பட விளக்கம்:**

*தந்திரா பற்றிய ஒரு தோற்ற அமைப்பு*

**Cover page illustration:**

Tantric Posture

# உள்ளே

**பாகம் 2**

**இயல்பாய் இரு!**

**(Be Natural!**

■■

# வாழ்த்துரை

## டாக்டர் கமலி ஸ்ரீபால்



'தந்திரா சாஸ்திரம்' என்பது ரகசியமானதும், சக்தியானதுமான இந்திய சாஸ்திரம். இது சுமார் 7 ஆயிரம் ஆண்டுகள் தொன்மையானது. அப்போதெல்லாம் தந்திரா சாஸ்திர முறையிலேயே ஆன்மிக பயிற்சிகளையும் மேற்கொண்டுள்ளனர். இதனை பல குற்றச்சாட்டுகளை கூறி மூடி, ஒதுக்கிய காலமும் உண்டு. ஊரை விட்டு ஒதுங்கிய சந்நியாசியும், பிரம்மச்சாரியும் மட்டுமே உயர்ந்த நிலையினையும், உயர் சக்தியையும் பெற முடியும் என்பதனை மாற்றியது தந்திரா சாஸ்திரம். ஒரு சாதாரண மனிதனாலும் இயல் வாழ்வினை மேற்கொண்டு இந்த உயர்நிலை, உயர் சக்தியினை அடைய முடியும் என்பதனை வலியுறுத்துவதே தந்திரா சாஸ்திரம். அதன் அடிப்படையே 'Be your self' அதாவது 'நீ நீயாக இரு' என்பதுதான்.

கனடாவைச் சார்ந்த திரு. எஸ். குருபாதம் அவர்கள், இதனை மீண்டும் நிலைநிறுத்த கடும் ஆய்வினை மேற்கொண்டு வெற்றியும் கண்டிருக்கிறார். இவர் எழுதியுள்ள 'தந்திரா கூறும் உடல் - உன்னத வாழ்வியல் இரகசியங்கள்' என்ற நூல் மணிமேகலைப் பிரசுரம் மூலம் வெளியிடப்படுகிறது. இப்புத்தகம் அணிந்துரைக்காக எனக்கு அனுப்பப்பட்டது. முன்னோட்டமாக புரட்டிப் பார்த்த நான், முதல் வேலையாக அன்றே அதனை முழுமையாகப் படித்து முடித்தேன். இப்புத்தகத்தில் ஆசிரியர் கூறி இருக்கும் 'உன் உடல் மீது முதலில் நீ மதிப்பு, மரியாதை, கவுரவம் வை' என்பது இந்த சமுதாயத்திற்கு இன்றைய காலக்கட்டத்தில் அவசியமான ஒன்று. பொதுவில் 'Accept me as what I am' என்று சொல்வார்கள். இதன் பொருள், 'நான் எப்படி இருக்கிறேனோ அப்படியே

என்னை ஏற்றுக்கொள்ளுங்கள்' என்பதாகும். ஆனால் இங்கு ஆசிரியர் கூறுவது 'நீ எப்படி இருக்கின்றாயோ அப்படியே உன்னை நீ ஏற்றுக்கொள்' என்பதாகும்.

வாழ்வே அழகுதான். வழிதவறிச் சென்றாலும் அழகுதான். ஏனெனில், திரும்பி வருதல் அதனால் வலுப்பெறும். இந்த வாழ்க்கையின் அனுபவம்தான் கடவுள். கடவுளைத் தேடி எங்கும் செல்ல வேண்டியதில்லை. 'உன்னுள்ளே உன்னைப் பார்' என்று ஆசிரியர் கூறுகிறார். கட - வுள் என்று சித்தர்கள் கூறியதை இன்றைய வாழ்க்கை முறைக்கு ஏற்றவாறு கூறுகிறார். மனோநல வைத்தியம்தான் தியானம் என்ற இவரது ஆதார விளக்கங்கள் இன்றைய தலைமுறையினரால் கண்டிப்பாக ஏற்றுக் கொள்ளப்படும்.

அன்புதான் முழு சுதந்திரம். அன்பு இல்லையென்றால் ஆதிக்கம் குடி இருக்கும். அடக்கப்பட்ட வாழ்க்கையில் வாழாதீர்கள். முழு சுதந்திரத்தோடு வாழுங்கள் என்ற கருத்து இன்றைய கால மக்களுக்கு அவசியமான அறிவுரை.

பருவம் அடையும் சிறுமிக்கு 'மஞ்சள் நீராட்டு விழா' நடத்துவது தமிழக வழக்கத்தில் இருப்பது. இன்றைய காலக்கட்டத்தில் இம்மாதிரியான விழா தேவைதானா என்று நான் சில சமயங்களில் நினைப்பதுண்டு. ஆசிரியர் இதைப்பற்றி கூறி உள்ள கருத்து இதற்கு ஒரு புதிய கோணத்தினை அளித்தது. அப்பெண்ணுக்குச் செய்யும் அலங்காரங்களும், எடுக்கும் விழாவும், கொடுக்கும் அன்பளிப்புகளும், அந்தச் சிறுமிக்கு ஒரு அந்தஸ்து வழங்கி கவுரவிக்கப்படுகின்றது. அவள், தன் உடலைப் பற்றி அறிவதுடன், ஒரு புதிய பார்வையையும் உளவியல் ரீதியாக பெற்றுக்கொள்கிறாள் என்ற ஆசிரியர் கருத்தும் அங்கீகரிக்க வேண்டிய ஒன்றுதான்.

வாழ்க்கையின் இறுதியில், மரணத்தின் தனிமை உலகத்தில் நுழைகின்றோம். அங்கு எந்த சமுதாயமும் இல்லை. எனவே, வாழும்பொழுதே அந்தத் தனிமை உலகத்தை நமக்குள் சென்று கண்டறிய வேண்டும் என்பதை தந்திரா பாதை காட்டுகிறது என்கிறார். 'தனித்திரு, பசித்திரு, விழித்திரு' என்பதன் அடிப்படை இதுதானோ!

'உங்கள் ஆன்மாதான் உங்கள் வழிகாட்டி' என சாஸ்திரம் கூறுகின்றது. உங்கள் உள்குரலை கேளுங்கள். உங்கள் வழிகாட்டி நீங்கள்தான். உங்கள் உள்ளேயே மகத்தான ஞானம் இருக்கிறது என்கிறது தந்திரா சாஸ்திரம். இரண்டிலும் என்ன வித்தியாசம் உள்ளது? சொல்லப்போனால், தந்திரா முறை அனைவரும் கடைப்பிடிக்க எளிதாக இருக்கின்றது என்றே தோன்றுகின்றது.

மக்கள் பலர் சந்தோஷமாக இல்லாமல், துக்கமாக இருப்பதற்குக் காரணம் எப்போதும் அவர்கள் பிறரைப் பற்றி குறை சொல்லிக்கொண்டே இருப்பதுதான் என குருபாதம் அவர்கள் கூறுவது எத்தனை யதார்த்தமான உண்மை. 'அன்பே சிவம்' என்றனர் சான்றோர். அன்பே வாழ்வின் அடிப்படை என்கிறது தந்திரா சாஸ்திரம்.

'பெண்களை ஒரு போகப் பொருளாக பார்க்கக் கூடாது' - தந்திரா கூறுகிறது என்கிறார் ஆசிரியர். பெண்ணுக்கு வரைவிலக்கணம் கூறுபவர்கள் ஆண்கள்தான். ஆண், என்றும் தன்னை உயர்த்துவதற்காக பெண்ணைப் பற்றிய ஒரு தோற்றத்தை உருவாக்கிக் கொண்டு இருக்கிறான் என்ற ஆசிரியரின் எழுத்துக்கள் ஒவ்வொரு பெண்ணையும் நன்றி கூற வைக்கும்.

எளிமையான நடை, ஆழ்ந்து சிந்திக்க வைக்கும் கருத்துக்கள். மானிடம் மேன்மை பெற ஆங்காங்கே அநேக நல்லோர் பிரதிபலன் கருதாது பல நல்லவைகளை வாரி தெளித்து செல்வர். ஆசிரியர் குருபாதமும் அதில் ஒருவர். வாழ்க பல்லாண்டு.

இக்கருத்துக்களை புத்தக வடிவில் வெளிக்கொண்டு வந்த மணிமேகலைப் பிரசுரத்துக்கு மனமார்ந்த பாராட்டுதல்கள்.

அன்புடன்

கமலி ஸ்ரீபால்

கமலி ஸ்ரீபால்

ஆசிரியர்,
கோகுலம் கதிர்,
15, கண்ணதாசன் சாலை,
சென்னை - 600 017.



# அணிந்துரை

எஸ். குருபாதம் அவர்கள் எழுதிய 'தந்திரா கூறும் உடல் – உன்னத வாழ்வியல் இரகசியங்கள்' என்ற அரிய இந்நூலுக்கு அணிந்துரை வரையும் வாய்ப்புக் கிடைத்தமையிட்டு மகிழ்வெய்துகிறேன். மூன்று பகுதிகளையும், 25 பிரிவுகளையும் கொண்ட இந்நூலில் தந்திரா கூறும் விடயங்களில் – குறிப்பாக உடல் – மனம் சம்பந்தப்பட்ட கருத்துக்கள் தற்காலத்துக்கு உபயோகம் தரும் வகையில் சுருக்கமாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது. கருத்துக்களை தெளிவாகவும், கச்சிதமாகவும் தருகின்ற இந்நூலாசிரியரின் பாங்கு பாராட்டுதற்குரிதாயுள்ளது.

ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றியதோர், வாழ்க்கை நெறியைக் கற்பிக்கும் தந்திரா ஒரு வரலாற்று நூல் என வரலாற்று ஆசான்கள் கண்டுகொண்டுள்ளார்கள். காலவோட்டத்தில் இவ் ஏற்பாடு தொடர்பான நூல்கள் அழிபட்டுப் போயின என்கிற செய்தி அறிவார்வலருக்கு ஒரு துன்பியல் நிகழ்வு எனினும், பொதுவாக தென்னாசிய சிந்தனை மரபில் தோன்றிய சமய மெய்யியல்கள் பலவற்றில் தந்திராவின் கருத்தியல் தாக்கத்தினை இன்றும் உணரக் கூடியதாயுள்ளது. 'இயற்கையோடு இசைந்து இயல்பாய் இரு' என்கிற தாந்திரத் தத்துவத்தின் உயர் நாட்டம், இன்று பலவாய் உலக சிந்தனை ஓட்டங்களில் முதலிடம் வகிக்கிறது.

தந்திரம், மந்திரம், கிரியை, ஞானம் நான்கும் இந்திய சமய மெய்யியல் சிந்தனைகளில், பொதுவாக மனித ஈடேற்றத்தின் பொருட்டாய் பயன்படுத்தப்படுகின்றன. தந்திரா உள்ளபடி உலகையும், உலகிலுள்ளவற்றையும் ஏற்றுக்

கொள்கிறது. எதுவாக இருந்தாலும், எவ்வாறாக இருந்தாலும் அவற்றினை மானிட மேம்பாட்டிற்காக பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதே தந்திராவின் நடுவண் கருத்தாகும். இக் கருத்தமைவை இந்நூலாசிரியர் அத்தியாயங்கள் அனைத் திலுமாய் முறையே கருத்துக்கள், அதனை விளக்கும் சம்பவங்கள், கதைகள் என்றவாறு வெளிக்கொணர்ந்துள்ளார்.

சில ஆரம்ப நிலைப்பட்ட இந்திய சமய மெய்யியல்கள் வாழ்வையும், உலகையும் ஒரு பொருட்டாகவே மதிக்கவில்லை. இவை சுவையானவை என்பதைக் காட்டிலும், சுமையானவை என்றே கண்டுகொண்டேன். இவற்றிலிருந்து ஒதுங்க வேண்டும் என்றும், ஒழிய வேண்டுமென்றும் கற்பித்துக் கொண்டன. ஆனால் இந்திய சிந்தனை மரபில் இறுதி நிலைப்பட்ட மலர்வாக விளங்கும் சைவ சித்தாந்தம் இவற்றின் இருப்பையும், இயல்பையும், இனிமையையும் வரம்பிட்டு ஏற்றுக்கொண்டது. காலத்தால் பிற்பட்ட இத் தத்துவ மரபு நிறையவே தந்திரா கருத்தமைவுகளை உள்வாங்கிக் கொண்டதெனின் தவறில்லை. இத்தகைய கருத்தமைவுக்குச் சான்றாக தந்திரா போற்றி நிற்கும் உடலை திருமந்திரமும் போற்றி நிற்கிறது.

**'உடம்பினை முன்னம் இழுக்கு என்றிருந்தேன்**
**உடம்பினுள்ளே உறுபொருள் கண்டேன்...'**

தந்திரா போற்றி நின்ற உடலும், அதன் உள்ளடங்கிய உயிரும் வைதீக தத்துவங்களுக்கு உயிர்ப்பாயின. தந்திரா முழுமையிலும் இழையோட்டம் போலக் காணப்பெறும் 'அன்பு' எனும் மகாதத்துவம் பின்னர் 'அன்பின் வழியது உயிர்நிலை' என்றவாறாக இந்திய சிந்தனைப் போக்குகள் அனைத்திலுமாய் கரைந்து உறைகிறது. இந்நூலாசிரியரும் அன்பினையே அனைத்துக்குமான நல்லதாக கண்டுகாட்டியுள்ளார்.

பெரும்பாலான இந்திய தத்துவங்களால் பழிக்கப்படும் பாலுணர்ச்சி தந்திரா நெறியில் தொட்டில் கட்டி தாலாட்டப் படுகிறது. தந்திரா இவ் உலக வாழ்வின் செழுமைக்கும் மேலான பெறுபேறுகளுக்குமாய் பாலுணர்ச்சியின் அவசியப்பாடு குறித்து குறிப்பிடுகின்றது. இந்நூல் பாலுணர்ச்சியை எத்தகைய வகையில் பக்குவமாய்

பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்பது குறித்தும் விதந்துரைக்கின்றது. உளவியலின் தந்தை எனப் போற்றப்படும் சிக்மன்ட் பிராய்ட் (Sigmund Freud) வாழ்வியல் ஊக்கம் குறித்துக் குறிப்பிட்ட அனைத்துக் கருத்தமைவுகளும் பாலியலை மையமாகக் கொண்டவை. அவ் அரிய கருத்துக்கள் அனைத்தையும் காலத்தால் முந்திய தந்திரா நெறி கொண்டிருந்தது என்பதை எண்ணும்போது எம் முன்னோர் எமக்களித்த அளப்பரியவை என்பது புலனாகின்றது. இத்தகைய நூல்கள் தரும் அரிய கருத்துக்களை அறிந்துகொள்ளாமலேயே சமகால அத்துமீறல்களுக்குக் காரணமாகின்றன எனவும் கருதலாம். இந்நூலில் பாலியலைப் பக்குவப்படுத்திக் கையாளுதல் எவ்வாறு என்பதை தந்திரா கூறும் வழி என்று ஆசிரியர் தெரியப்படுத்துகிறார்.

இந் நூல் தந்திரா நெறி குறித்த ஓர் ஆரம்ப அறிவினை வழங்குகிறது. மேல் மேலும் தந்திரா நெறி குறித்ததாய் இந் நூலாசிரியர் பல நூல்கள் யாக்க வேண்டும். இறைவன் நீண்ட ஆயுளையும், நிறைந்த செல்வத்தையும் இவர் பணி தொடர வழங்க வேண்டிப் பிரார்த்திப்பதுடன், அறிவு ஆர்வலர்கள் இந்நூலைப் பயின்று இனியும் நூல் எழுத ஆசிரியருக்கு தூண்டிலாய் விளங்க வேண்டுகிறேன்.

**கலாநிதி க. கஜவிந்தன்**
B.A. (Hons)., P.G.D.Y., PGDPC., M.A., M.Phil., Ph.D.
துறைத் தலைவர்
மெய்யியல் / உளவியல் துறை
கலைப்பீடம்
யாழ் பல்கலைக்கழகம்
28.05.2014



## ‘என்’ நூலைப்பற்றி ‘நான்’
## (About my book as an author)

‘தந்திரா’ பற்றி நான் ஓரளவு அறிந்து வைத்திருந்தேன். சுவாமி ஓஷோ அவர்கள் மூலமாக மேலும் தெரிந்து கொண்டேன். Yoga spandakarika, Tantric Quest, Tantric Path to Awakening போன்ற நூல்கள் மூலம் தந்திரா பற்றிய விளக்கத்தை பெற்றுக் கொண்டேன். இந்நூலுக்கு இவைதான் எனது பிரதான ஆய்வு நூல்களுமாகும். Eastern Religions என்ற நூல் தந்திராவைத் தந்திரா பௌத்தம் என்று குறிப்பிடுகிறது. சில நூல்கள் தந்திராவை இந்து மதத்துடனும் தொடர்புபடுத்து கின்றன. மேலும் சில நூல்கள் தந்திரா மதங்களுக்கு அப்பாற்பட்டது என்றும் கூறுகின்றன.

ஒரு குறிப்பிட்ட மதப்பிரிவினரால் தந்திரா தொடர்பான ஏடுகள் எரிக்கப்பட்டன. இந்த ஏடுகள் இற்றைக்கு 5000 ஆண்டுகளுக்கு மேல் பழமை வாய்ந்தவை எனக் கூறப்படு கின்றன. அது மாத்திரமல்ல, தந்திரா துறவிகள், ஞானிகள் கொல்லப்பட்டனர். ‘தந்திரா’ அச்சுறுத்தலுக்கு உள்ளாகியது. காலப்போக்கில் ‘தந்திரா பற்றி யாரும் கதைப்பதற்கே விரும்ப வில்லை. அது மாத்திரமல்ல, அதைப்பற்றி நினைப்பதற்கே அச்சம் கொண்டனர்’. ‘தந்திரா’ பற்றி விளங்கிக்கொள்வதற்குப் பதிலாக எதிராகப் பிரச்சாரம் மேற்கொள்ளப்பட்டது, தந்திரா அசிங்கப்படுத்தப்பட்டது, படிப்படியாக இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது. ஒருவர் ஒன்றைப் புரிந்து கொள்ள முடியாதபோது அதைப் பழிக்க, இழிவாகப் பேச ஆரம்பிக்கிறார். அதன் பின் தன்னளவில் எல்லாம் சரியாகிப் போய்விட்டது என்று நினைக்கிறார். இது தந்திராவுக்கும் நடந்தது. எப்போதெல்லாம் ‘உண்மை’ பிறக்கிறதோ அப்போதெல்லாம் ‘ஆமாம்’ போடுபவர்கள் ஒன்றுசேர்ந்து உண்மை மீது தாவி ஏறி அதன் குரல்வளையை நசுக்கிவிடுவது வழக்கமாகவே உள்ளது.

தந்திரா ஞானத்தைப்பற்றி அறிய, அறிய இது ஒரு வாழ்வியல் வழிகாட்டியாகவே எனக்குத் தோன்றியது. 'தந்திரா' உங்கள் மீது அக்கறை கொள்கிறது!

- இது உடலைப்பற்றித் தெளிவான பார்வை கொண்டது,
- இது வாழ்வில் ஏற்படும் முடிச்சுக்களை அவிழ்க்கிறது,
- இது பல சிக்கல்களை இலகுவாக தீர்க்கிறது,
- இது உன்னத வாழ்வுக்கு வழிகாட்டுகிறது,
- இது வாழ்வியலில் ஏற்படக்கூடிய பல சந்தேகங்களைத் தீர்க்கும் ஒரு 'அகராதி',
- இது உள்ளார்ந்த பேரானந்தத்திற்கு அழைத்துச் செல்கிறது.
- இது ஒரு மானிடவியல் விஞ்ஞானம்.

இது மிக உயர்வில் நகர்வதால் இதைப் புரிந்துகொள்வதில் சிரமம் உண்டு. தந்திரா பற்றிய நூல்கள் மிக அரிதாகவே உள்ளன. அதனால் நான் அறிந்துகொண்ட 'கைமண்' அளவை இந்நூல் மூலம் என் விளக்கத்துக்கேற்ப உங்களுடன் அதன் சாராம்சத்தைப் பகிர்ந்துகொள்ள விரும்புகின்றேன்.

தந்திரா பற்றி மேலோட்டமாக தெரிந்துகொள்ள இந்நூலுக்குள் இன்பச் சுற்றுலா செல்வோமா? வாருங்கள், நாம் எல்லோரும் கைகோர்த்துச் செல்வோம்!

'யாதும் ஊரே யாவரும் கேளிர்'

*மனிதநேயத்துடன்,*

10.05.2014

**எஸ். குருபாதம்**



# 'என்னைப்பற்றி நான்'





மலேஷியாவின் தலைநகரான கோலாலம்பூரில் பிறந்தேன். எனது தந்தை அங்கு புகையிரத இலாகாவில் Section Superintendent ஆகப் பணிபுரிந்தார். அப்போது அங்கு நிலவிய யுத்த அசம்பாவிதங்கள் காரணமாக சிறுபிராயத்திலேயே யாழ்ப்பாணம் சென்று அங்கு வாழ்ந்து, ஆங்கிலம் கற்பிப்பவராகப் பணியை ஆரம்பித்து, பத்திரிகைத் துறையில் ஆர்வம் காரணமாக யாழ்ப்பாணத்திலிருந்து அப்போது வெளிவந்துகொண்டிருந்த ஒரேயொரு தேசியத் தினசரியான (National Daily) 'ஈழநாட்டில்' உதவி ஆசிரியராகப் (Sub-Editor) பணிபுரிந்தேன். பின்பு சவுதி அரேபியா சென்று Yanbu நகரில் உள்ள ஒரு ஸ்தாபனத்தில் நூலகராகவும் (Librarian), அந்த ஸ்தாபனத்தின் செய்தி இதழின் (Bulletin) நிர்வாக ஆசிரியராகவும் (Managing Editor) பணிபுரிந்தேன். பின்பு கனடா (Canada) நாட்டில் ரொறன்றோ (Toronto) மாநகரில் குடியேறி, அங்கு ஒரு சட்ட நிறுவனத்தில் 'Paralegal' ஆகவும், சத்தியப்பிரமாண ஆணையராகவும் (Commissioner of Oaths) கடமையாற்றி தற்போது எழுத்துப் பணியில் ஈடுபட்டுள்ளேன்.

நான் எனது மாணவ பிராயத்திலிருந்து இன்றுவரை ஏராளமான பலதுறை சார்ந்த நூல்கள் (Non fictions) வாசித்து அவற்றிலிருந்து பெற்றுக்கொண்ட அறிவு, சிந்தனை,

அனுபவங்களை ஒருங்கே திரட்டி அவைகளை நூல் வடிவம் ஆக்குகின்றேன்.

யாழ்ப்பாணம் வேம்படி மகளிர் கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றிப் பின்பு கனடாவில் உள்ள ரொறன்றோ மாவட்ட கல்விச் சபையின்கீழ் (Toronto District School Board) ஆசிரியராகப் பணியாற்றிக்கொண்டும், அதிபருக்கான தராதர பாடநெறியைப் (Principal's Qualification Program) பூர்த்தி செய்து தொடர்ந்து கற்பிக்கும் பணியில் இருக்கும் எனது வாழ்க்கைத் துணை ஜெயா (Jeyajothy) அவர்கள் எழுத்துப் பணிக்கு உயிரூட்டமாக உள்ளார்.

'என்னைப்பற்றி நான்' என்ற அறிமுகத்துடன் ஆரம்பித்து 'எங்களைப் பற்றி நாங்கள்' என்ற அறிமுகத்துடன் நிறைவு செய்து இந்நூலை உங்கள் கரங்களில் தவழவிடுகின்றோம்.

வெளிவந்துவிட்ட நூல்கள்:

- மறுபிறப்பு பற்றிய ஆச்சர்யமான தகவல்கள்



- போதிதர்மரைப் பற்றிய அற்புதமான விஷயங்கள்



**வெளிவரும் நிலையிலுள்ள நூல்கள்:**

- குழந்தைகளை வளர்க்காதீர்கள்; வளரவிடுங்கள்
- மனமே மகிழ்ந்திரு
- மதமற்ற மதம்
- பரீட்சையில் பெற்ற புள்ளி நூற்றுக்கு நூறு 100/100
- உலக சமாதானத்தை நோக்கி... (Towards The World's Peace...)

'யாதும் ஊரே யாவரும் கேளிர்'

*மனிதநேயத்துடன்,*

gurujeya@ymail.com
10/05/2014

**எஸ். குருபாதம்**
**ஜெ. குருபாதம்**

■■

## வெளியிடப்பட்ட எனது நூல்கள் :
## Books published :

✓ மறுபிறப்பு பற்றிய ஆச்சரியமான தகவல்கள்
The Astounding Revelations of Rebirth
(Philosophy)

✓ போதிதர்மர் பற்றிய அற்புத விஷயங்கள்
The miraculous adventures of Bodhidharmar
(Biography / Zen Philosophy)

## வெளிவர உள்ள நூல்கள் :
## Books to be published :

■ மதமற்ற மதம்
Religion without Religion
(Philosophy)

■ குழந்தைகளை
வளர்க்காதீர்கள்!
வளரவிடுங்கள்!!
Let the Children Growup, Don't Rear them
(Child Psychology)

■ மனமே மகிழ்ந்திரு
Oh Mind! Be Happy
(Psychology)

■ பரீட்சையில் பெற்ற புள்ளி 100/100
Exam Marks Obtained 100/100
(Educational Psychology)

■ உலக சமாதானத்தை நோக்கி
Towards the World's Peace
(Politics)

■■

### அத்தியாயம் - 1

## தந்திரா பற்றி தெரிந்துகொள்வோமா?

'தந்திரா' ஒரு மதமல்ல. இதற்கு எந்த நம்பிக்கையும் தேவையில்லை. ஒரு இந்து இதனூடாக வேதம் என்ன சொல்லுகிறதென்பதைப் புரிந்துகொள்ளலாம், இதன்மூலம் இஸ்லாமியர் குரானின் ஆழமான அர்த்தங்களை அறிய முடியும், இதேபோல் கிறிஸ்தவர்கள் பைபிளில் சொல்வதை சுலபமாக விளங்கிக்கொள்ளவும், பௌத்தர் தம்மபதத்தின் உள்ளே செல்வதற்கும், சமணர், சென், சீக்கியர், சொறாஸ்திரியர், சியோனிஸ், தாவோ, சின்ரோ, இவர்கள் எல்லோரும் தங்கள் தங்கள் புனித நூல்களுக்குள் செல்வதற்கும் தந்திரா உதவுகிறது. இது எந்த மதத்தையும் கோடிட்டுக் காட்டவில்லை, எந்த மதத்தையும் தொடவேயில்லை, இது ஒவ்வொருவரையும் நிறைவு செய்கிறது. தந்திரா உலகிலுள்ள எல்லோருக்கும் பொதுவானது.

இது குழந்தை, முதியவர், ஆண், பெண், இனம், மதம், மொழி, தேசம் எல்லாம் கடந்தது. தந்திரா மிக உயரத்தில் நகர்வதால் அதைப் புரிந்துகொள்ள முடியாத ஒன்றாக இருந்து விட்டது. புவியீர்ப்பை ஐசக் நியூட்டன் கண்டுபிடித்தபோது யாரும் அதைப் புரிந்துகொள்ள முடியாது இருந்தார்கள், ரைட் சகோதரர்கள் ஆகாய விமானத்தைக் கண்டுபிடித்தபோது பலத்த எதிர்ப்புக் கிளம்பியது. ஆகாயம் தேவ கன்னிகளுக்கும், தேவ தூதுவர்களுக்கும் உரியது என்றனர். ஐன்ஸ்ரைனின் பொதுச் சார்பியல் கோட்பாட்டை அவர் காலத்தில் அவரால் யாருக்கும் விளங்கவைக்க முடியாமல் இருந்ததாம். ஆனால் தந்திரா எந்தக் காலத்திலும் விளங்கிக்கொள்ள முடியாத புதிராகவே இருந்து விட்டது. இல்லை! இல்லை!! விளங்கிக்கொள்ள 'மனம்' தடையாக இருந்துவிட்டது.

இது 'உள்' மன உலகத்தில் சோதிக்கப்படும் ஒரு விஞ்ஞானம். இது ஐயாயிரம் வருடங்களுக்கு முன் ஞானிகள் அறிந்திருந்த மானிடவியல் விஞ்ஞானமாகும். மேலும் தந்திரா ஒரு புராதன கலையும்கூட. திபெத் பகுதியில் இன்றும் சில தந்திராஞானிகள் இருந்து வழி காட்டுகிறார்கள் என அறிகிறேன். 'உடல்மீது மரியாதை, மதிப்பு, கௌரவம், அன்பு செலுத்தும்படியும், வாழ்வை ஆழமாக உணர்ந்து வாழ்ந்தால் தான் ஆனந்தம் கிடைக்கும்' என்கிறது தந்திரா. 'நீ எப்படி இருக்கிறாயோ அப்படியே நீ உன்னை ஏற்றுக்கொள். நீ விழிப்புணர்வுடனும் புரிதலுடனும், அன்புடனும், ஆனந்தத் துடனும் நகர நகர உன்னால் எதையும் தாண்டிச்செல்ல முடியும். நீ அறிய முடியாத புதிர் வேறொன்றும் இல்லை, அது உன் உடலே' என மேலும் விளக்குகிறது தந்திரா. 'நீ யார்?' என்று தந்திரா கேட்பதில்லை, மனிதர்களாக இருந்தால் மட்டும் போதும். வெறும் போதனைகளைப் போதிக்கவில்லை, மாறாக, அது யுக்திகளைக் கொடுக்கிறது. கோடிக்கணக்கான போதனைகள், கோடிக்கணக்கான ஒழுக்கக் கட்டுப்பாடுகள், கோடிக்கணக்கான மத போதனையாளர்கள், கோடிக்கணக்கான மத பூசகர்கள், கோடிக்கணக்கான சிறு சிறு மதத் தலைவர்கள் போன்றவர்களாலே உலகம் நிரம்பி வழிகிறது. இருந்தபோதிலும் கோடிக்கணக்கான ஒழுக்கக்கேடுகளும், வன்முறைகளும், கோடிக்கணக்கான மதப்பூசல்களும் எல்லாம் அசிங்கமாகவே இருக்கின்றன.

'எந்தவிதப் பூசலும், எந்தவித விரோதமும், எந்தவித ஒழுக்கங்களும், எந்தவித விதிமுறைகளும் தேவையில்லை, இயற்கையோடு ஒத்துச்செல்லுங்கள். நீ எப்படியிருந்தாலும் அதைக் கடந்துபோக இயற்கையைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். நீ எதுவாக இருப்பினும் நீ வளர்ந்து உயர்நிலையை அடைய முடியும்' என்கிறது தந்திரா.

தந்திரா என்ற வார்த்தைக்குப் பொருள் யுக்தி, வழி என்பதுதான். ஒருபோதும் தந்திரா ஏன்?' என்ற கேள்வி கேட்பதில்லை. 'எப்படி?' என்பதில் அக்கறை கொள்வதில்லை. 'உண்மையை எப்படி அடைவது என்பதில் அக்கறை கொள்கிறது.' இந்து, கிறிஸ்தவம், இஸ்லாம், பௌத்தம், ஜூடையிஸம் போன்ற எல்லா மதங்களுக்கும் பின்னால்

இருப்பதும் மனிதர்களே, அவர்களது ஆடைகள் மாத்திரம் வித்தியாசப்படுகின்றன. அதே ஆசை, காமம், கோபம், வெறுப்பு, அன்பு, வன்முறை, பொறாமை எல்லோரிடமும் ஒன்றேதான். இயற்கை அழிவுகளில் இந்து, இஸ்லாமியர், கிறிஸ்தவர் என்று வேறுபாடுண்டா? இல்லை. ஒவ்வொரு மதத்தவர்களது வழிபாட்டு முறைகளும், வழிபாட்டு ஸ்தலங்களின் அமைப்புக்களும் மாத்திரம் வித்தியாசப்படுகின்றன. ஆனால் 'உணர்வால்' எல்லோரும் ஒன்றே.

**தந்திரா ஒவ்வொரு தனி மனிதரிடமும் அக்கறை கொள்கிறது. உதாரணமாக கண்பார்வை இல்லாதவர் 'ஒளி' என்பது என்ன என்று கேட்டால் அதற்கு விளக்கம் கொடுக்காது உடனே செயல்முறையில் இறங்கி கண்ணில் சத்திரசிகிச்சை செய்து 'ஒளி'யைப் பார்க்க வைத்து அந்த வினாவிற்கான விடையைக் கிடைக்கச் செய்துவிடுகிறது தந்திரா.**

இங்கிலாந்தில் வாழ்ந்த சர்ச்சைக்குரிய தத்துவ மேதையும், ஆய்வாளருமான பேற்றண்ட் றசல் (Bertrand Russel) தனது 80 வயதில் "எனக்கு சிறு பிராயத்திலேற்பட்ட சந்தேகங்கள் பல, என்றாவது ஒரு நாள் எல்லாத் தத்துவங்களையும் புரிந்து கொள்ளும் அளவுக்கு நான் பக்குவப்படும்போது என் மனதிலுள்ள எல்லாக் கேள்விகளுக்கும் என் வாழ்நாளில் பதில் கிடைத்துவிடும் என நினைத்தேன். ஆனால் எனக்குத் தோன்றிய அதே கேள்விகள் இப்போதும் அதே இடத்திலேயே நிற்கின்றன" என்றார்.

தத்துவம் முடிவில்லாத பல கேள்விகளைத் தொடுக்கும் தேடலாகும், ஆனால் அது கேள்விக்குப் பதிலையும் அதனுடன் பல கேள்விகளையும் உருவாக்கிவிடும். ஆனால் ஒருவர் தந்திராவிற்குள் பிரவேசிக்க கேள்விகள் மறையத் தொடங்கும்.

**எது, எதுவாக இருந்தாலும், என்னவாக இருந்தாலும், எப்படி இருந்தாலும் அவைகளைத் தந்திரா ஒதுக்காது, அவைகளை மாற்றும், அதற்கு முதற்படியாக அவைகளை ஏற்றுக்கொள்ளும் 'எதையும் ஏற்றுக்கொள்கிறது' தந்திரா.**

தந்திரா ஒரு கோட்பாடு அல்ல. ஏனெனில் கோட்பாடு ஒரு வகையான ஒழுங்குமுறைகளைக் கொடுக்கிறது. இந்துக்களுக்கு,

கிறிஸ்தவர்களுக்கு, முஸ்லிம்களுக்கு, பௌத்தர்களுக்கு, சமணர்களுக்கு, யூதர்களுக்கு என ஒவ்வொரு ஒழுங்கு முறைகளை அம்மதங்கள் கொடுக்கின்றன. கோட்பாடு ஒரு வகையான முறைகளைத் திணிக்கிறது. அந்த முறைகளில்தான் மதத்திற்கு மதம் வேறுபடுகிறது. 'தந்திரா' எந்த ஒழுங்கு முறைகளையும் தரவில்லை. மதங்கள் ஒழுங்குமுறைகள் மூலம் கொள்கைகள், கோட்பாடுகள் என்று பலவற்றைத் திணிக்கிறது. தந்திரா எதையும் திணிக்கவில்லை.

தந்திரா ஒவ்வொரு தனி மனிதனின் புரட்சியாகும். சமூகப் புரட்சியோ, அரசியல் புரட்சியோ போன்றதல்ல. புரட்சிகள் அனைத்தும் இறுதியில் அதே புரட்சிக்கு எதிராகவே செயற்படுகின்றன. புரட்சியாளர்கள் அதிகாரத்திற்கு வந்த பின்பு அதே புரட்சிக்கு எதிராகவே மாறிவிடுகிறார்கள். அதிகாரம் தன் பரிணாமத்தைக் காட்டிக்கொண்டேயிருக்கும். இந்த தனி மனிதனின் புரட்சியான 'தந்திரா'வுக்கு ஒரு ஸ்தாபனமோ, அமைப்போ ஒரு இயக்கமோ ஆரம்பிக்க வேண்டியதில்லை. அது ஒவ்வொரு ஆணையும், ஒவ்வொரு பெண்ணையும் நம்புகிறது. அவர்களது தனித்தன்மைக்கு மிகுந்த மதிப்புக் கொடுக்கிறது, அவ்வளவுதான்.

மனிதன் சுதந்திரத்தைக் கண்டும் உரிமைகள் கிடைப்பதை யிட்டும் பயப்படுகிறான். தொடர்ந்தும் சுதந்திரம், உரிமை என்று பேசிக்கொள்ளவே விரும்புகின்றான். தங்கள் மனதின் அடியாளத்தில் சுதந்திரத்தையிட்டும், உரிமையையிட்டும் பயப்படுகிறார்கள். பிரான்ஸ் புரட்சியில் சில சிறைக்கைதிகள் விடுவிக்கப்பட்டபோது அவர்கள் விடுதலையாகி சுதந்திரமாகப் போக மறுத்துவிட்டார்கள். ஏனெனில் சிறையில் உணவு, இருப்பிடம் கிடைக்கிறது. விடுதலை பெற்றால் அவர்கள் தங்களைத்தாங்கள் பொறுப்பு எடுக்க வேண்டும் அல்லவா? அதனால் சிறையிலிருந்து சுதந்திரம், உரிமை என்று பேசிக் கொண்டு இருப்பது அவர்களுக்கு சௌகரியமாக இருந்தது.

'உண்மையை உணருங்கள்' என்கிறது தந்திரா. குடும்பத்தையோ, சமூகத்தையோ துறக்கவேண்டியதில்லை. 'உங்கள் சுதந்திரத் தன்மையில் இருங்கள்' என்கிறது தந்திரா. நீங்கள் சுதந்திரத்தில் இருக்கிறீர்களா? இல்லை. உங்களைச் சுற்றி ஆயிரக்கணக்கான பிணைப்புக்கள் சூழ்நிலைக்கு

அடிமையாகவும் இருக்கின்றீர்கள். அந்த அடிமைத்தனத்தைப் புரிந்துகொண்டால்தான் அதிலேயிருந்து வெளியே வரலாம். உங்களையே சமாதானம் செய்துகொள்ள வேண்டாம். வாழ்க்கையை ஒரு பயம் கலந்த வாழ்க்கையாக்கிவிட்டீர்கள். மகிழ்ச்சி, பேரானந்தம் இவைகளைப் பற்றி அறிந்திருக்கிறோமே யொழிய அவற்றை முற்றாக அனுபவித்ததில்லை.

எவை எல்லாம் இயற்கையாக, இயல்பாக இருக்கின்றனவோ, அவை எல்லாம் அர்த்தம் அற்றதாக உங்களுக்குத் தெரிகிறது. வெளியிலிருந்து திணிக்கப்பட்ட ஒழுங்கு முறைகளால் மனிதன் குழப்பமடைந்திருக்கின்றான். பழக்க வழக்கங்களையும், சட்ட விதிகளையும் சமூகம் மனிதன் மேல் திணித்துக்கொள்கிறது. சமூகம் விரும்புவதை, எதிர்பார்ப்பதை, சொல்வதை நீங்கள் செய்தால் சமூகம் உங்கள் மீது பிரியம்கொள்கிறது. நீங்கள் அதற்குமாறாக நடந்தால் உங்களைத் தூற்றுகிறது, வெறுக்கிறது, கோபம் கொள்கிறது. ஆனால் இங்கு தந்திரா உங்களுக்கு உதவுகிறது. **'நீங்கள் வெறுமனே இயற்கையோடு இசைந்து இயல்பாகச் செயற்படுங்கள்'** என்கிறது.

நீங்கள் உயிரோட்டம் மிக்கவராக இருக்கவேண்டும் என்று தந்திரா விரும்புகிறது. இது உங்களது பிறப்புரிமை. ஓடும் நதியைப்போல, வளரும் மரங்களைப்போல, கண்சிமிட்டும் நட்சத்திரங்கள் போல, குளிர்மை தரும் நிலாவைப்போல, சூரிய, சந்திரனைப்போல உயிரோட்டமுள்ளவராக இருங்கள் என்கிறது. அதாவது இயற்கையாக இருப்பதைப்போல் சௌகரியம் எதுவுமில்லை என்கிறது. **முழுமையான சுதந்திரத்தைக் கொடுப்பது இயற்கைத் தன்மைதான். செயற்கைத்தனம் நிறைந்த சம்பிரதாயங்கள், நடைமுறைகள், கொள்கைகள், கோட்பாடுகள் அனைத்தும் மனிதனை அடிமையாக்குகின்றன.**

52 பாடல்கள் மூலமாகத் தந்திரா விளங்கப்படுத்தப் படுகிறது. ஐயாயிரம் வருடங்களுக்கு முன் வாழ்ந்த முனிவர் வாசுகுப்தா அவர்கள் கைலாய மலையில் தியானத்தில் இருந்தபோது அந்த ஞான நிலையில் உதித்த தந்திராவை அதே நிலையில் இருந்து கூற அவரது சீடனான முனிவர் ஹலற்றா (Kallata) எழுதினாராம். அங்கு மலைக் குன்று ஒன்றில் தந்திரா பற்றிப் பொறிக்கப்பட்டிருப்பதாகக் கருதி அதை இன்றும்

பொதுமக்கள் சென்று வணங்குகிறார்கள் என்று பிரான்சில் வசிக்கும் டானியல் ஓடியர் (Daniel Odier) என்ற ஆன்மீக ஆய்வாளர் யோக ஸ்பன்டகாரிகா (Yoga Spandakarika) என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். அவர் மேலும் Tantric Quest, The Tantric Path To Awakening என்ற நூல்களும் எழுதியுள்ளார். அந்த நூல் ஆசிரியர் திபெத்திய ஆன்மீகத்தைப் பற்றி பிரெஞ்ச் மொழியில் (French Language) தயாரிக்கப்பட இருந்த குறுந்திரைப்படம் தொடர்பாக 1968ஆம் ஆண்டு திபெத் சென்றவர் அங்கு தந்திரா ஞானத்தில் மூழ்கி முத்தெடுப்பவராக மாறி 20 வருடமாக அங்கேயும், காஷ்மீரிலும், மாறி மாறி இருந்து பௌத்தம், சென், சைவசமயம், தந்திரா, ஹதயோகம் இவைகளை அறிந்து அனுபவிக்கும் சீடனாக மாறிவிட்டார். ஐரோப்பிய நாடுகள், கனடா, ஐக்கிய அமெரிக்கா ஆகிய நாடுகளில் கருத்தரங்கு நடத்தி தான் பெற்ற அறிவையும் அனுபவங்களையும் பகிர்ந்துள்ளார்.

'சுயத்தை' (Self) வெறுமையான (Non Self) பரவெளியாக்கி பிரபஞ்சத்துடன் இணைக்கிறது 'தந்திரா.' சைவசமயம், பௌத்தம், கிறிஸ்தவம், இஸ்லாம், தாவோ, சென், சமணம், சூபி, சியோனிஸம் உட்பட அனைத்து மதங்களும் அந்த 'வெறுமையை' (Non Self) நோக்கித்தான் செல்கின்றன.

முற்காலத்தில் சகல மத யோகிகளும் தந்திரா ஞானிகளும் திபெத், காஷ்மீர் போன்ற இடங்களில் ஒன்றாக இணைந்திருந்து தங்கள் அனுபவங்களை ஒரேமுகமாக மக்களுடன் பகிர்ந்திருக்கிறார்கள். பெண் முனிவர்கள், சில தந்திரா பெண் யோகிகள் (யோகினிகள்) இன்றும் அங்கு வாழ்வதாக அறிகிறேன். இந்து மதத்தில் தோன்றிய முதல் முனிவரும் 'பெண்' என சுவாமி விவேகானந்தர் குறிப்பிட்டதாக எனக்கு வாசித்த ஞாபகம் உண்டு.

கி.மு. 11-ஆவது நூற்றாண்டில் திபெத்திலுள்ள 'லாப்' (Lab) மாகாணத்தில் வாழ்ந்த மிகப்பெரும் தந்திரா பெண் ஞானியரான மாசிக் லப்றோன் (Machig Labdron) தனது 99-ஆவது வயதில் 'மகாமுத்திரா'வை (Mahamudra) தனது சீடர்களுக்கு வெளிப்படுத்திய தியான நிலையில் மேலே பறந்து பிரபஞ்சத்துள் மறைந்துவிட்டார். பிரபஞ்சத்துடன் பிரபஞ்ச மாகக் கலந்துவிட்டார். இவர்போன்ற பல தந்திரா ஞானிகள்

திபெத்திலும் காஷ்மீரிலும் இருந்திருக்கிறார்கள், இன்றும் இங்கொன்றும் அங்கொன்றுமாக தந்திரா துறவிகள் இருப்பதாக அறிகிறேன்.

தந்திராவின் நோக்கம் 'உண்மை' எதுவாக இருக்கிறதோ அதை நேரடியாக அணுகுவதுதான். 'தந்திரா' எங்கள் ஒருவொருவருக்குள்ளேயும் உள்ளது. நாங்கள் பிரிந்து இருக்க நினைத்தாலும் அதைவிட்டு எங்களால் பிரியமுடியாது என தந்திரா கூறுகிறது. 'தந்திரா'விடம் கோவிலோ, கொண்டாட்டமோ, சடங்கோ, சம்பிரதாயமோ, பூசைகளோ, பூசாரிகளோ, விசேஷ நூல்களோ எதுவும் இல்லை. 'உண்மையை நோக்கிச் செல்லுங்கள்' என்கிறது. 'உண்மையை நோக்கி' தனியாகத்தான் செல்லமுடியும் என்கிறது. அது ஒவ்வொரு தனி மனிதனையும் சார்ந்திருக்கிறது. 'தந்திரா' ஒவ்வொருவரையும் நம்புகிறது.

ஒரு மனிதனின் கனவில்கூடக் கண்டிராத மிகப்பெரிய வெளிப்பாடு, நோக்கம், பார்வை எல்லாம் தந்திராதான். அதற்கு மதத்தலைவர் என்று யாரும் இல்லாமல் தனிக் கோவில் என்று எதுவும் இல்லாமல் மத ஒழுங்கு முறை என்று எதுவுமில்லாமல் ஒவ்வொருவரது சுதந்திரத்திற்கும் மிகுந்த கௌரவம் கொடுத்து, ஒவ்வொரு தனி மனிதருடைய தனித் தன்மைக்கு மிகுந்த மதிப்புக்கொடுத்தும், சாதாரண ஆணையும் பெண்ணையும் முழுமையாக நம்பக்கூடிய ஒரே மதமற்ற மதம் தந்திராதான்.

தந்திரா ஒவ்வொருவர் மீதும் வைத்திருக்கும் நம்பிக்கை ஆழமானது, முழுமையானது. மதங்கள் ஒவ்வொருவருடைய உடலையும் நம்புகிறதோ, இல்லையோ தந்திரா நம்புகிறது. அது மனிதர்களுக்கும் அவர்களது உடலுக்குமிடையே பிரிவினையை உண்டுபண்ணவில்லை, பகையை ஏற்படுத்த வில்லை, உடலின் புத்திசாலித்தனத்தை அழிக்க முயலவில்லை.

தந்திரா ஒவ்வொருவரது பாலுணர்வு சக்தியையும், உடலையும், புலன்களையும், உணர்வுகளையும், உள்ளத்தையும் மேலான நிலைக்கு மாற்றுகிறது. பாலியல் சக்தியை ஆன்மீக உயர்விற்கு பிரயோகிப்பது எப்படி என்று தந்திரா கூறுகிறது.

**உடல்மீது கொண்ட தவறான கருத்தை, எண்ணங்களை நீக்கி உடலுக்கு முக்கியத்துவம் கொடுக்கிறது. ஆழமான ஆனந்தம் உடலிலிருந்துதான் தோன்றுகிறது என்கிறது. உடலைப்பற்றி ஆழமாகவும், அற்புதமாகவும் கூறும் மிகப் புராதன ஏடு இது. ஒவ்வொருவரையும் அவர்களிற்குள்ளே திருப்பிவிடுகிறது, உடலில் ஊன்றி நிற்கச் செய்கிறது, வாழ்வை ஆழமாய் உணர்ந்து வாழச் செய்கிறது.**

மனதிற்குள் மனக்கோவில் எழுப்பி தன் உடலைப் பூசித்தவர் பூசல நாயனார். 'உடலை முழுமையாக ஏற்றுக்கொள்' என்கிறது தந்திரா. உடலை வித்தியாசமாகப் பாராமல் உடலை முழுமையாக ஏற்று ஆடை எதுவுமின்றி நடமாடித் திரிந்து தன் உடம்பைக் கடந்து அதற்கப்பால் சென்றவர் சமணமத 24-ஆவது தீர்தங்கரரான மகாவீரர் அவர்கள்.

திருமூலரும் உடம்பின் பயனாகிய ஞானத்தைப் பெற்றுவிடவேண்டும் என்கிறார்.

**உடம்பினை முன்னம் இழுக்கு என்றிருந்தேன்**
**உடம்பினுள்ளே உறுபொருள் கண்டேன்**
**உடம்பினுள்ளே உத்தமன் கோயில் கொண்டான் என்று**
**உடம்பினை யான் இருந்தோம்புகின்றேனே.**

*- திருமூலர்*

'முன்னே உடம்பைக் குற்றமுடையதென்று எண்ணியிருந்தேன். ஆனால் இந்த உடம்புக்குள்ளே ஆன்மாவோடு நீக்கமற விளங்குகின்ற சிறந்த பொருளான சிவத்தைக் கண்டேன். இவ்வுடம்பினுள்ளே இறைவன் கோவிலாகக் கொண்டு எழுந்தருளியிருக்கின்றான் என்று அறிந்து யான் உடம்பினைப் பாதுகாத்துக் கொண்டு இருக்கின்றேன். உடம்பு சிவனுறையும் ஆலயம் ஆதலால் அதனைப் பாதுகாக்க வேண்டும்' என்கிறார் திருமூலர் அவர்கள். உடம்பைப் புனிதமாகக் கருதியவர் அவர்.

சிவனும், பார்வதியும் உடலால் இணைந்து பிரபஞ்ச இருப்புடன் கலந்திருக்கும் நிலையிலிருந்து தோன்றியதே 'தந்திரா' என திபெத்திய சில ஞானிகள் குறிப்பிட்டுள்ளார்கள்.

இந்து ஆலயங்களிலிருக்கும் சிவலிங்க வடிவம் 'தந்திரா' தத்துவத்தின் அடிப்படையை விளக்குவதாகக் கூறப்படுகிறது.

## 'தந்திரா'வின் வெளிப்பாடு

1. 'நீ எப்படி இருக்கிறாயோ அப்படியே உன்னை ஏற்றுக் கொள். நீ சக்தி மிக்க அறிய முடியாத ஒரு புதிர். அந்த சக்தியோடு அன்புடனும், புரிதலுடனும் நகர உன்னுள் விழிப்புணர்வு அதிகரிக்கும்.'

2. 'உன் உடம்பே ஆலயம், உன் உடலை மதி.'

3. 'செக்ஸ், செக்ஸ் உடன் நின்றுவிடாமல் அது அன்பாக மாறவேண்டும், அன்பும் அன்பாக நின்றுவிடக் கூடாது. அன்பாக இருக்கும்போது மட்டுமே ஆணும், பெண்ணும் காணாமல் போய்விடுகிறார்கள். அப்போது அவர்கள் தங்களை அறியாமலேயே தியான முறையில் ஈடுபட்டுள்ளதால் எழும் பரவசமே இது. ஒருவர் ஒருவருள் தங்களை அறியாமலே கரைந்து போவதால்தான் இந்த பரவசம் நிகழ்கிறது. அந்தப் பரவச நிலையில் தன்னுணர்வைத் தொலைத்து விடுகிறார்கள். ஆனால் முழுத் தன்னுணர்வோடு இந்த பரவசநிலை ஏற்படுமானால் அது ஞானநிலையாக மாறிவிடும்.'

4. பாலுணர்வை இயற்கை என்கிறது தந்திரா. தந்திரா என்றால் செக்ஸ், பாலுணர்வு என்று அர்த்தமல்ல. தியான நிலையை எட்ட இந்த இயல்பான செக்ஸ் அன்பாக மாற வேண்டும். 'எப்போதும் அன்பாகவே இரு, அந்த நிலை ஞானத்தின் சிகரமாக மாறிவிடும்' என்கிறது.

5. தந்திரா ஒரு மதமல்ல. தந்திராவிற்கென்று எந்தவித நம்பிக்கையும் தேவையில்லை. இதுவே இதன் அழகு. எந்த மதக்காரரும், எந்த நாட்டவரும், எந்த இனத்தவரும் தந்திராவைக் கடைப்பிடிக்க முடியும். தந்திரா ஒவ்வொருவரையும் நிறைவு செய்கிறது. எவர் ஒருவர் எங்கே இருந்தாலும் அவரவர் இருக்கும் இடத்திலேயே அவர்களைப் பூரணப்படுத்துகிறது. ஒவ்வொருவரும் தேர்ந்தெடுத்த பாதை எதுவாக இருந்தாலும் தந்திரா உதவி புரிகிறது. தந்திரா ஒரு மானிடவியல் விஞ்ஞானம்.

6. விஞ்ஞானம் எந்தளவு உயர்ந்ததோ அந்தளவு பொதுமக்கள் அதைப் புரிந்துகொள்ளும் சாத்தியமும் குறைவாகவே உள்ளது. ஐன்ஸ்ரைன் கண்டுபிடித்த பொது சார்பியல் கோட்பாட்டை அன்று அவருக்கே யாருக்கும் புரிய வைப்பதே கடினமாக இருந்ததாம். அப்போது இதைப் புரிந்துகொண்டவர்கள் உலகத்திலேயே ஆகப் பன்னிரண்டு பேர்கள்தானாம். ஏனெனில் இது மிக உயரத்தில் நகர்கிறது. இதைப் புரிந்துகொள்ள கணித, பௌதீக அறிவும் சில நுணுக்கங்களும் பயிற்சியும் தேவை. ஆனால் தந்திராவுக்கு எந்தப் பயிற்சியும் உதவ முடியாது. ஒருவருக்குள் ஏற்படக்கூடிய மாற்றம் மட்டுமே உதவ முடியும்.

7. தந்திரா எவருக்கும் உரியதல்ல. ஐன்ஸ்ரீன் பொதுச் சார்பியல் கோட்பாட்டைக் கண்டறிந்ததால் அது யூத மதத்தைச் சார்நதது அல்ல. றேடியோவையும், ரெலிவிஷனையும் கிறிஸ்தவ மதத்தைச் சார்ந்தவர்கள் கண்டுபிடித்ததால் அவை கிறிஸ்தவமதத்தைச் சார்ந்ததல்ல. விஞ்ஞானம் ஒரு இனத்துக்கோ மதத்துக்கோ அல்ல என்பது போலவே தந்திராவும். தந்திராவை அறிய நீ ஒரு மனிதனாக இருப்பது போதும். நீ எங்கே இருந்தாலும் எப்படி இருந்தாலும் நீ அப்படியே ஏற்றுக்கொள்ளப் படுகிறாய். பல மதப்பிரச்சாரகர்கள் நீங்கள் பாவிகள் என்றே உங்களை நினைக்கச் செய்கிறார்கள். ஆனால் தந்திரா உங்களை உயர்வாகவே பார்க்கிறது.

8. தந்திரா சொல்கிறது: முதலில் மனதை மாற்று, பிறகு மனதிலிருந்து மனமற்ற நிலைக்குச் செல். உனக்குப் பொருந்தும் ஏதாவது ஒரு முறையைத் தேர்ந்து எடு. உனக்குப் பொருத்தமானது எது என்று தெரிந்துகொள்வது ஒன்றும் உனக்குச் சிரமம் இல்லையே! அதுவே உன் பாதை, அந்தப் பாதையில் செல்!

9. நீ என்னவாக இருப்பினும், எப்படி இருப்பினும், எதுவாக இருப்பினும், எங்கே இருப்பினும், நீ உன்னை முழுமை யாக ஏற்றுக்கொள், இதுதான் அடிப்படை. முழுமையாக உன்னை நீ ஏற்றுக்கொள்வதன் மூலம் மட்டுமே வளர முடியும். அப்போது உன் சக்திகளை நீ கண்டறிவது சுலபம், அவற்றை முழுமையாகப் பயன்படுத்து. நீ பல

**பரிமாணங்கள் கொண்ட சக்திகளுடைய மாபெரும் புதிர் என்பதை நீ தெரிந்துகொள் என தந்திரா கூறுகிறது.**

*10.* நீ ஒவ்வொரு ஆழமான நுண்ணுணர்வோடும், விழிப் புணர்வோடும் புரிதலோடும், அன்போடும் செல். அப்போது ஒவ்வொரு ஆசையும் அவற்றைக் கடந்து செல்வதற்கான பாதையாகும்.

*11.* உன்னை நீ ஏற்றுக்கொள்வதன் மூலம் நீ ஒன்றாகிறாய் (Oneness). நீ எப்படி இருக்கிறாய் என்பதில் மட்டும் விழிப்புணர்வு கொள்.

*12.* உன் வெகுளித்தனம் இயல்பானது, அங்கே திணிப்பு, நிர்ப்பந்தம், போலி, நடிப்பு எதுவுமே இல்லை. வெகுளித்தனத்தில் எதுவும் திணிக்கப்படாமல் இயல்பாகவே இருக்கிறது.

*13.* நிஜம் எளிமையானது, நிஜம் சிக்கலாகத் தெரியாது, சிக்கலானது தீர்ந்துவிட்டால் அது சுலபமாகிவிடுகிறது. முதலில் தெரிந்துகொள்வது கடினமாகிவிடுகிறது. ஏனெனில் அதற்குக் காரணம் உன் மனம்தான். அதன் நிஜம் அல்ல. உன் மனமே சிரமத்தை உண்டுபண்ணுகிறது.

*14.* **உனக்குள் 'உள்ளிருக்கும்' உன்னை நம்பு.** எல்லோரும் நல்லவராகவே பிறக்கிறார்கள். அந்த நல்ல தன்மை உனது இயற்கை. உனக்கு இயற்கையான வளர்ச்சியே தேவை, உனக்குள் திணிக்கப்படும் எதுவும் தேவையில்லை, உன்னில் மையம்கொள். தந்திரா எவருக்குள்ளும் குற்ற உணர்வை ஏற்படுத்தாமல் ஒவ்வொருவரையும் முழுமையாக ஏற்றுக்கொள்கிறது, மனிதன் ஒரு பிரிக்கமுடியாத ஓர் உயிரியக்கம் என்பதை உணர்த்துகிறது. உயிரியக்க முழுமையின் உச்சம் மனிதனே! என்கிறது.

ஒரு அரசன் தனக்குத் 'தந்திரா' பற்றி விளக்கும்படி சகாறா (Sahara) முனிவரிடம் வேண்டி நிற்க அந்த முனிவர் விளக்கத் தொடங்கினார். அவை பின்வரும் அத்தியாயங்களில் பிரதி பலிப்பதைக் காணலாம்.

■■

### அத்தியாயம் - 2

## யார் இந்த சஹாறா (Sahara) முனிவர்?

இவர் ஒரு புத்த துறவியாக வாழ்ந்தவர். இவர் கல்வியறிவில் சிறந்தவராக இருந்தார். புத்த சந்நியாசிகளுக்கே உரித்தான கட்டுப்பாடுகள், ஒழுக்க நியதிகளென அதன் வழியிலே தன் வாழ்க்கையை நடத்தினார்.

சஹாறாவின் இயற்பெயர் இராகுல். உபநிடதங்களையும், வேதங்களையும் நன்கு கற்றுத் தேர்ந்திருந்தார். இவரது குடும்பம் வேதங்கள், ஆகமங்கள், உபநிடதங்கள் அனைத்திலும் விற்பன்னர்களாக இருந்தார்கள். இவர் சிறீகீர்த்தி என்னும் ஆசானிடம் மாணவனாகக் கற்கச் சென்றார். 'நீ இதுவரை கற்றுக்கொண்டவைகள் மற்றும் நீ அறிந்துகொண்ட வேதங்கள், உபநிடதங்கள் அனைத்தையும் மறந்துவிடு' என்றார். சஹாறாவிற்கு அது அதிர்ச்சியாகவிருந்தது. அனைத்தையும் மறப்பதென்பது மிகவும் சிரமமாகவிருந்தது. ஆசான் சிறீகீர்த்தியின் முன்னால் அவர் அமர்ந்திருந்த போதெல்லாம் தான் கற்றவைகள், அறிந்தவைகள் அனைத்தையும் மறக்கத் தொடங்கினார், காலப்போக்கில் வெறுமையானார்.

ஒரு நாள் தெரு ஓரத்தில் ஒரு பெண் அம்பு செய்து கொண்டிருப்பதைக் கண்டார். அவள் அம்பு செய்யும் விதத்தைப் பார்த்துக்கொண்டே நின்றார். அப்பெண் வலது பக்கமோ, இடது பக்கமோ திரும்பாமல் அம்பு செய்வதிலே முழுமையாக ஈடுபட்டுக்கொண்டிருந்ததால் அவ்விடத்தால் போய்வருவோரையோ நிற்பவர்களையோ எவரையும் அப்பெண் கண்டுகொள்ளவில்லை. அருகாமையில் நின்ற சகாறாவையும் கண்டுகொள்ளவில்லை. அவளது அருகாமையில் நிற்கும்பொழுது ஏதோ அபூர்வமான ஒன்று தன்னுள்

ஊடுருவியதை உணர்ந்தார். செய்து முடித்த அம்பை நேராகப்பிடித்து அம்பின் முனையை ஒரு கண்ணை மூடிக் கொண்டு மறு கண்ணால் உற்று நோக்கினாள். அச்செயலை உற்று நோக்கிக்கொண்டிருந்த சஹாறாவிற்கு இது ஒரு குறியீடாகத் தெரிந்தது. அப்பெண் இவரைப் பாராமலே தன் கடமையில் ஈடுபட்டுக் கொண்டிருந்தாள். அப்பெண்ணைப் பார்த்து 'நீ அம்பு செய்கிற தொழிலா செய்கிறாய்?' என வினவினார். இதைக் கேட்டதும் அப்பெண் உரக்கச் சிரித்தாள். அவரைத் திரும்பிப் பார்க்காமலே அம்பைச் சரிசெய்துகொண்டு கூறினாள்: 'நீ ஒரு முட்டாள் மனிதன், நீ வேதங்களை, உபநிடதங்களை, ஆகமங்களை, சாஸ்திரங்களை எல்லாம் மறந்தாய். இப்போது புத்த போதனைகளைக் கற்கிறாய். உன்னுடைய நோக்கம் என்ன? நீ ஒரு முட்டாள் மனிதன்தானே!' என்று கூறிக்கொண்டே மீண்டும் உரக்கச் சிரித்தாள். சஹாறா அதிர்ச்சியடைந்தார். அப்பெண் இவரைப் பாராது தொடர்ந்தும் தன் கடமையில் ஈடுபட்டாள்.

சஹாறா சமூகத்தில் உயர்ந்தவர், கற்றவர், அரச சபையில் அங்கம் வகித்தவர். இப்பெண் சமூகத்தினால் ஒதுக்கப்பட்டவள், கல்வி கற்காதவள், எழுத வாசிக்கத் தெரியாதவள், அக்கால நாகரிகமும் தெரியாதவள். ஆனால் இவள் ஒரு ஞானப்பெண் என்பதை உள்ளூர உணர்ந்தார் சஹாறா. இவரது தலையில் ஒரு தட்டுத்தட்டியது போல் இப்பெண் கூறியவை இருந்தன. அப்பெண் கூறியதில் உயிரோட்டம் இருந்தது. ஏற்பட்ட திகைப்பிலிருந்து மீண்டு அவள் முன்னிலையில் எதுவும் பேசாது நின்றார். 'நீ பௌத்தத்தை புத்தகங்களில் தேடுகிறாய், நடைமுறைகளில் அவற்றைப் புரிந்துகொள்ள முடியும், புத்தகங்களில் தேடி உன் காலத்தை வீணாக்காதே' என்று எந்தப் பக்கமும் பாராமல் அம்பைத் தன் முகத்திற்கு நடுவாக, நேராக நோக்கிப் பார்த்தபடி கூறினாள்.

புத்தர் கூறிய 'நடுவாக இருத்தல்' என்ற சொல்லின் அர்த்தத்தை இப்பொழுது புரிந்துகொண்டார். இப்பெண் வலது பக்கமோ இடது பக்கமோ பாராமல் தனக்கு 'நடுவை' மட்டுமே மையமாக வைத்துக்கொண்டு தொடர்ந்தும் தன் அம்புகட்டும் வேலையில் முழுமையாக ஈடுபட்டுக் கொண்டேயிருந்தாள். தன்னைக் கவனித்துக்கொண்டிருக்கும் சஹாறாவை அவள் இன்னும் பார்க்கவில்லை. ஒவ்வொரு செயலுக்குள்ளும்

ஆழமாகப் புதைந்திருப்பதை வெளிக்கொணர்வதற்கு முழுமை யான ஈடுபாடு தேவை என்பதையும் அதன்மூலம் ‘தியானத்தையும்’ புரிந்துகொண்டார். இப்பெண்ணின் நடவடிக்கைகள் ஊடாக ‘சத்தியத்தை’க் கண்டார். அப்பெண் இவரைத் திடீரென்று ‘சஹாறா’ என்று அழைத்தாள். ஆனால் அவருடைய பெயர் இராகுல். ‘சகா’ என்றால் அம்பு, ‘றா(ரா)’ என்றால் ஏவியவன். எனவே ‘அம்பு ஏவியவன்’ என இவரது இப்புதிய பெயர் அர்த்தம் கொடுக்கிறது. சஹாறா என்று அழைத்த அந்தக் கணமே அந்தப் பெண்ணின் செயலில் உள்ள முக்கியத்துவத்தை, அந்த உருவகத்தை, அந்தச் சைகைகளை அடையாளம் கண்டுகொண்டார். அந்தப் பெண் அவருக்கு எதை உணர்த்த முயற்சித்தாளோ அதை அவர் கண்டு கொள்ளவும், உணர்ந்துகொள்ளவும் சரியாக இருந்தது. அப்பெண்ணை தன் குருவாக ஏற்றுக்கொண்டு சீடனாக மாறி காலப்போக்கில் அப்பெண் முன்னிலையில் ஞானமடைந்து மிகப்பெரும் தந்திரா (Tantra) ஞானியானார்.

**இப்பெண் மிகப்பெரும் தந்திரா ஞானி (Tantric Sage). அக்காலத்தில் ஆண் ஆதிக்கமில்லாத ஒரேயொரு மார்க்கம் ‘தந்திரா’தான். பெண் ரிஷிகள், பெண் யோகிகள், பெண் ஞானிகள், பெண் மகான்கள் நிறையவே தந்திரா மார்க்கத்தில் இருந்தார்கள். ‘பெண்ணில் இருந்து ஆண் பிறக்கிறான், ஒரு சீடனும் பெண்ணில் இருந்தே பிறக்கிறார்’ என்கிறது தந்திரா.**

அநேகமான ஆண் யோகிகள், ஞானிகள், மகான்கள் எல்லாம் பெண் போன்ற மென்மையானவர்களாகவும் பெண் குணங்களான அன்பு, கருணை கொண்டவர்களாகவும் இருந்ததால் யோகிகள், ஞானிகள், மகான்களது படங்கள் வரையும்போது பெண் முகச்சாயலில் வரையப்படுகின்றன. **புத்தர், மகாவீரர், இயேசு போன்ற மகான்களை மக்கள் அன்பாக அரவணைக்கும் தாயைப்போலப் பார்க்கிறார்கள். அதனாலே பெண் சாயலிலே அவர்களது உருவங்கள் வரையப் படுகின்றன.** சிலைகள் அவ்வாறே அமைக்கப்படுகின்றன. இவர்கள் எல்லாம் ஒரு தந்தையை விட ஒரு தாயைப்போல் அன்பாகவும், கருணை கொண்டவர்களாகவும் வாழ்ந்து காட்டியவர்கள். **பொதுவாக மகான்கள் தங்கள் சீடர்களை தங்கள் கருவறையில் வைத்திருப்பது போல் வைத்திருக்**

**கிறார்கள். உரிய நேரம் வந்ததும் ஞானம் அடைந்த சீடர்களாக அவர்களைப் பிரசவிக்கிறார்கள்.**

அப்பெண் முனிவர் அவருக்குத் தந்திராவை விளக்கினார். அம் முனிவர் இவரை முழுமையாக மாற்றமடையச் செய்து விட்டார். அப்பெண் துறவி அவரது கேள்விகளுக்குப் பதிலளித்து அவரது எல்லாத் தன்மையையும் அகற்றிவிட்டார். சஹாறா முனிவரை அவரது சுதந்திரத்திலிருக்கும்படி செய்துவிட்டார். எவ்வித இறந்த காலமும் எதிர்காலமும் இன்றி கணத்திற்குக் கணம் இயற்கையோடு இயல்பாக வாழச் செய்துவிட்டார். அதனால் பார்ப்பவர்களிற்கு அவர் முற்றிலும் வேறு ஆளாகத் தெரிந்தார். இந்நிலையில் அவரைப் பார்க்கும் சாதாரண ஜனங்கள் அவர் தங்களை ஏமாற்றிவிட்டார் என்றும், அவர் தனது தெய்வீகத் தன்மையிலிருந்து கீழே விழுந்து விட்டார் என்றும் நினைக்கத் தொடங்கிவிட்டார்கள். ஏன் இவர் இப்படி மாறி விட்டார் என மக்கள் ஆச்சரியப் பட்டார்கள். அவர் அந்த நாட்டு மக்களுக்கு சிறந்த அறிவு ஞானத்தை வழங்குவார் என்று மக்கள் எதிர்பார்த்தார்கள். ஆனால் இப்போது இவர் ஒரு வித்தியாசமான ஆளாக இருக்கிறாரே என்று ஆச்சரியத்துடன் பார்த்தனர்.

இவர் சிற்றின்பத்திலும், புலனின்பத்திலும் மிகவும் ஈடுபட்டுவிட்டார் என்றும், இவரது துறவு உண்மையானதில்லை என்றும் மக்கள் பரவலாகப் பேசத் தொடங்கிவிட்டார்கள். இதைப்போல ஆயிரக்கணக்கான கதைகள் அவரைப்பற்றிப் பரவியிருந்தன. சஹாறா முனிவரைப்பற்றி மக்கள் இழிவாகப் பேசுவதைக் கேட்டு அந்நாட்டு அரசன் வருத்தமடைந்தார். அந்த அரசனுக்கு ஆன்மிகத்தை முதலில் எடுத்துரைத்தவர் சஹாறா முனிவர்தான். அரசன் அவர்மீது மிக்க மரியாதையும், மதிப்பும் உடையவர். அரசனும் தன் நாட்டு மக்களைப் போலவே சாதாரண உலகத்தில்தான் இருந்தார். அதனால் வதந்திகளைப் பெரிதாக எடுத்தார். அரசனுக்கு சுயத்தைப் (Self) பற்றியோ, உண்மையைப் பற்றியோ எந்த நுண்ணிய ஆழ்ந்த அறிவுமில்லை. தன் நாட்டில் முனிவர் சஹாறாவை மக்கள் அவதூறாகப் பேசுவதை அறிந்து அரசன் முனிவரைச் சந்தித்து அதுபற்றி அவரிடம் கேட்டார். சஹாறா முனிவர் அந்த அரசனிடம் ‘‘ஒரு தடவை அந்தப் பேரின்ப நிலையை

அறிந்துகொண்டால், அந்த உண்மையை அனுபவித்து விட்டால், நீ அந்தக் கதைகளையெல்லாம் மறந்துவிடுவாய்.'' அதைப்போல "இந்த ஒழுக்கம், வித்யா ஞானம், மதிப்புப் போன்றவைகளையும் மறந்துவிடுவாய்." 'உண்மையான' அந்த வாழ்க்கையோடு தொடர்புகொள்ளாவிட்டால் இப்படியே நீ வாழ்ந்து மடியலாம். வாழ்வு ஒரு புரியாத புதிர்தான், அது ஒரு மாபெரும் குழப்பம். அது மிகவும் புதுமையைப் படைக்கும் ஒரு தெய்வீகக் குழப்பம்தான். ஆகவே அது எல்லாவற்றிலும் குழப்பமாகவே தான் இருக்கிறது. எனக்கு என்ன நிகழ்ந்தது என்று என்னால் சொல்ல முடியவில்லை. ஆனால் என்னால் ஒன்றை மட்டும் சொல்லமுடியும். நீங்கள் ஒரே ஒரு தடவை 'அதை' அனுபவித்துவிட்டால் 'அது' உங்களிடம் ஒரு பெரிய மாற்றத்தை ஏற்படுத்திவிடும். என்னிடம் எந்தத் தத்துவமு மில்லை. 'அந்த உண்மையை' நான் வெறுமனே அனுபவித் தேன். அந்த அனுபத்தை உங்களோடு பகிர்ந்துகொள்வது முடியவே முடியாது. நீங்கள் உங்களிடம் நிலைப்படுத்தப்பட்ட அனைத்துக் கொள்கையிலிருந்தும் முதலில் வெளியே வரவேண்டும். நீங்கள் என்னோடு சேர்ந்து அந்த அறியாதவற்றை நோக்கிச் செல்ல வேண்டும்.

**அந்த மகிழ்ச்சியை அனுபவிக்கக்கூடிய 'மனக்கண் தேவை', இயல்பான திறந்த மனம் தேவை, எந்தவித தத்துவங்கள், மதங்கள், மதவேதங்கள், கொள்கைகள், கோட்பாடுகள், அடுக்குகளாக, தட்டுகளாக, திரைகளாக இருந்துகொண்டு மறைக்கலாம். முதலில் இந்த அடுக்குகளை, தட்டுகளை, திரைகளை அகற்றவேண்டும். கண்களினால் அதைப் பார்க்க முடியாது, காதுகளால் அதைக் கேட்கமுடியாது, கைகளால் அதைத் தடவி உணர முடியாது, எண்ணங்கள் குறுக்கிடாமல் 'அது' உங்களை வேறு எங்கேயும் இழுக்காமல், எதையும் ஆராயச்சி செய்யாமல் நீங்கள் இதுவரை எதையும் பார்த்திருக்கிறீர்களா? நீங்கள் உட்காரும்பொழுது, நடக்கும்பொழுது, பேசும்பொழுது, பார்க்கும்பொழுது, கேட்கும் போது, நகரும்போது, உணரும்போது உண்மையோடிருங்கள். எந்தவித குறுக்கீடுமில்லாத, எதிலும் பற்றில்லாத அந்த உண்மையோடு இருக்க முயலுங்கள். 'அந்தக்' கதவுகள் மெல்ல மெல்லத் திறக்க ஆரம்பிக்கும். சில கணங்கள்**

உங்களை நோக்கி வரும். அந்தச் சில கணங்கள் உங்கள் மனதைச் சார்ந்ததில்லை, அந்த ‘உண்மை’ நிலையின் மனமற்றதோற்றம், அது வார்த்தைகளற்ற தோற்றம். ‘இவைகள் தான் தந்திராவில் குதிப்பதற்கு உங்களைத் தயார்ப்படுத்தும்’ என்று சஹாறா கூற அரசன் தனக்கு ‘தந்திரா’வின் வழியைக் காட்டும்படி வேண்டி நிற்க சஹாறா கூறத் தொடங்குகிறார்.



## அத்தியாயம் - 3

# சுவாமி

தந்திராவின் சூத்திரங்களை சஹாறா முனிவர் அரசனுக்கு விளக்கிக் கூறும்போது ‘‘யார் ஒருவன் தான் தெய்வீக அனுபவங்களை அடைந்துவிட்டேன் என்று கூறினால் அது பொய் என்றும் ஒரு மயக்கத்தில் தங்களையே ஏமாற்றிக் கொள்கிறார்கள் என்பதை அறிந்துகொள்ளுங்கள்’’ என்று சொல்கிறார். ஒரு உண்மையான ஆன்மிக மனிதன் தனக்கு ஆன்மிக அனுபவம் இருப்பதை ஏற்றுக்கொள்ளமாட்டார். உண்மைகளை வார்த்தைகளால் வெளியிட முடியாது அதை அனுபவிக்கத்தான் முடியும். அதை அடையக்கூடிய வழிகளைப்பற்றி மட்டும் பேசலாம், அதனால்தான் புத்தர் அமைதியாக உட்கார்ந்துவிட்டார். அந்தப் பேரியக்க உண்மையைக் கூறுங்கள் என்றால் அமைதியாக உட்கார்ந்து இருப்பார். எப்படி அறிந்துகொண்டீர்கள் என்றால் புன்முறுவலுடன் இருந்துவிடுவார். இதனால் அவருக்குத் தெரியாதென்று பலர் நினைத்துக் கொண்டார்கள். உண்மையில் அந்த அனுபவங்களை பெற்றிருந்ததால்தான் அதை வார்த்தைகளால் கூற முடியாது என்பதால்தான் அமைதி காத்தார். “புத்தரிடம் நீங்கள் கடவுளை எப்படி அறிந்து கொண்டீர்கள் என்று கேட்பார்கள்” பதிலாகப் புன்முறுவல் பூப்பார். அதனால்தான் சஹாறா “யார் ஒருவர் தான் அந்த தெய்வீக அனுபவங்களை அடைந்துவிட்டேன் என்று கூறினால் அது பொய் என்றும் அவர் ஒரு மயக்கத்தில் தன்னை ஏமாற்றிக்கொள்கிறார் என்றும் புரிந்துகொள்ளுங்கள்’ என்று சொல்கிறார்.

உள்ஒளியைக் கண்டேன், குண்டலினி எழுந்து விட்டது, சக்கரங்கள் திறக்கின்றன, கடவுளைக் கண்டேன் எனக்

கூறுபவர்களுக்காக P.D. Ouspenski என்பவர் ஒரு சொல்லை உருவாக்கினார். இதை அவர் கற்பனை நோய் Imaginazione என்கிறார்.

தங்களை சுவாமி என்றும், அவதாரம் என்றும் கூறுபவர்கள் எப்பொழுதும் சர்ச்சையில்தான் இருப்பார்கள். கடவுள் இருக்கிறார் என்று நிரூபிக்கவே விரும்புவார்கள். தர்க்கம் என்பது இரண்டு பக்கமும் கூரான ஒரு கத்தி போன்றது. தர்க்கத்தினுடைய வித்தியாசமான அழகு என்னவென்றால் அந்தச் சர்ச்சையால் 'ஆம்' என்று நிரூபிக்கவும் முடியும், அதே சர்ச்சையால் 'இல்லை' என்று நிரூபிக்கவும் முடியும். எப்பவும் ஒரு நிரூபணம் அதை மறுக்கக்கூடிய தன்மையிலும் இருக்கும்.

இன்றிருக்கும் மிகப் பெரிய சர்ச்சைகளில் ஒன்று இந்த உலகத்தைப் படைத்தவர் ஒருவர் இருக்கத்தானே வேண்டும் என்பதே! ஒரு ஸ்தாபகர் இல்லாமல் உலகம் எப்படி உண்டாகும்? இந்த உலகத்தை உண்டாக்கியவர் யார்? என்ற வாதமும், கடவுள் இருக்கிறாரா? என்ற வாதமும் அதே போன்ற வாதம் தான். படைத்தவரைப் படைத்தவர் யார்? கடவுளை யாரும் படைக்கவில்லை என்றும், இந்த உலகத்தையும் யாரும் படைக்கவில்லை என்றும், சர்ச்சை போய்க்கொண்டே இருக்கும். தர்க்கத்திற்கு முடிவேயில்லை. இந்த உலகத்தை யாரும் உண்டாக்கவில்லை என்று ஏன் கருதக்கூடாது? எல்லாம் அப்படி இருந்தன என்று ஏன் கருதக்கூடாது? இத்தகைய விவாதங்கள் எங்கேயும் அழைத்துச் செல்லாது.

தத்துவ மேதை பேட்டன் றசல் (Bertrand Russell) 'மதங்களின் எந்தவிதக் கோட்பாடுகளும், நடைமுறைகளும் மக்களை இறுக்கமாக்கக் கூடாது' எனக் கூறுகிறார். மக்கள் தளர்வாகவும், நெகிழ்வாகவும், இயல்பாகவும் வாழவேண்டும். சகல மதங்களும் மக்களுக்கு அச்சத்தையும், பீதியையும் ஊட்டுகின்றன. திருமணபந்தத்தை மீறும் ஆண், பெண், தொடர்புகள்பற்றி அதிகம் கூறும் மதங்கள், இலஞ்சம் பெறுபவர்கள் பற்றியும், மக்கள் விரோதச் செயல்களில் ஈடுபடுபவர்கள் பற்றியும், பதவித் துஷ்பிரயோகம் செய்பவர்கள் பற்றியும், அரசியல்வாதிகளைப் பற்றியும் அக்கறை கொள்வதில்லை என்கிறார். அவர் சகல மதங்களையும் ஆய்வு

செய்து தன் கருத்தை வெளியிட்டுள்ளார். இந்துக்கள் பசு மாட்டிற்குக் கொடுக்கும் முக்கியத்துவத்தினளவு ஒரு இந்து விதவைப் பெண்ணின் மறுமணத்திற்குக் கொடுப்பதில்லை எனவும் ஒரு இடத்தில் குறிப்பிடுகிறார். "நான் ஏன் கிறிஸ்தவர் இல்லை" (Why I am not a Christian) என்ற ஒரு நூலை 1957ஆம் ஆண்டு வெளியிட்டார். அந்த நூல் மிகவும் நியாயமான பல விசாரணைகளை, விளக்கங்களை உள்ளடக்கியது. பல மதபீடங்களின் கண்டனத்திற்கும் உள்ளானது. அந்த நூல் வெளியாகி 57 வருடங்கள் கடந்தபோதும் இன்றுவரை அவரது கருத்துக்கு எவரும் பதில் கூறவில்லை. கண்டனம் தெரிவித்த மதபீடங்களும் பதில் கூறவில்லை. மக்கள் தெளிவாகவிருக்க வேண்டும் என்ற அக்கறை அந்நூலில் புலப்படுகின்றது. மக்களுக்கு ஒரு வகையில் விழிப்புணர்வைத் தூண்டுகின்ற நூலாக அது அமைகின்றது.

கடவுள் 'இருக்கிறார்', 'இல்லை' என்ற விவாதங்கள் இன்றுவரை யாரையும் திருப்திப்படுத்த முடியாமல் தோல்வியில்தான் முடிந்துகொண்டிருக்கின்றன. எப்பொழுதும் கேள்வி கேட்கும் மனதைத் திருப்திப்படுத்த முடியாது. 'இருக்கிறார்', 'இல்லை' என்ற விவாதம் எதையும் விசேடமாகச் சாதிக்கப் போவதில்லை. எவர் ஒருவர் தன்னைப் பகுத்தறிவாளர் என்று கூறுகிறாரோ அதில் பகுத்தறிவு என்பது இல்லையே! பகுத்தறிவு என்பது ஒரு உள்ளுணர்வு. "மதம் என்பது அனுபவித்தலில் (Experiencing) உணரும் அனுபவமாகும்," அது மிகவும் உயிரோட்டமுள்ளது. அந்த அனுபவத்தினை தந்திரா நம்புகிறது. சஹாறா "ஒருவர் தன்னுடைய 'உள்' தன்மையை 'உள்' உண்மை நிலையை அறிந்துகொண்டால் அதை அனுபவிப்பதைத் தவிர வேறு எந்த அத்தாட்சியும் தேவையில்லை" என்று அரசனுக்கு விளக்கினார்.

**சஹாறா, ''நம்பிக்கை என்பது உண்மையில்லை. உண்மை நம்பிக்கையாகாது. 'உண்மை' என்பது அனுபவித்தல்தான்'' என்கிறார்.**

"உண்மை" என்பது நம்பிக்கை இல்லாமலே வேலை செய்யும். அதற்கு நம்பிக்கை எதுவுமே தேவையில்லை. நம்பிக்கையின் மூலம் "பொய்" வேலை செய்யும், பொய்மைக்கும் நம்பிக்கை தேவை. நம்பினால் அது

ஒருவருடைய மனதை தகுந்த மாதிரி மாற்றி வேலை செய்யக்கூடிய சூழ்நிலையை உருவாக்குகிறது.

**தந்திராவின் நான்கு முத்திரைகளை சஹாறா கூறுகின்றார்.**

### 1) கர்ம முத்திரா (Karma Mudra)

ஒருவருடைய இருத்தலில் (Being) இது மிகவும் வெளியே இருக்கிறது. வெளி உலகத்துச் செயல்களைப்போல இது வெளித் தன்மையாக இருக்கிறது. அன்பு செலுத்துதல், உதவுதல் இவையெல்லாம் மனம் சார்ந்தது. செயலில் முழுமையாக இருந்தால், பிரக்ஞையாக இருந்தால் இந்த முதலாவது பூட்டு உடைபடுகிறது. எந்தச் செயலைச் செய்தாலும் முழுமையாக ஈடுபடுதல் அல்லது முழுமையாக பிரக்ஞையாக செயல்படுவதன் மூலம் அதை அடையலாம். கோபப்பட்டால் அதில் முழுமை யாக இருங்கள் எனவும், இந்த முழுமையான கோபத்திலிருந்து நிறைவைக் கற்றுக்கொள்ளலாம் என்கிறது. அதே நிலையிலிருக்க கோபம் தணிந்து முற்றாக மறைந்துவிடும். மேலும் கோபப்படுவதற்கு எதுவும் இல்லை என்ற புரிதல் தோன்றி பின்பு அது தானாக விலகிவிடும் என்கிறது.

முற்றிலும் புரிந்துகொள்ளாதவைகள்தான் ஒருவரைக் கவ்விக்கொள்ளும். எதுவாகவிருந்தாலும் சரியாகப் புரிந்து கொண்டால் அதைச் சுலபமாக நீக்கிவிடலாம். எதைச் செய்தாலும் முழுமையாகவும், பிரக்ஞையாகவும், ஜாக்கிரதை உணர்வுடனும் இருக்க இந்த முதல் பூட்டு திறக்கும் என்கிறது.

தந்திரா மிகவும் விஞ்ஞானபூர்வமானது. உங்களது செயல்களில் உணர்வுடன் இருங்கள் என்றுதான் கூறுகிறது.

### 2) ஞான முத்திரா (Gnana Mudra)

விஷய ஞானம் என்பது சற்று ஆழமானது, ஒருவர் செய்வதை இன்னொருவர் பார்க்கலாம். ஆனால் ஒருவர் அறிந்ததை பிறர் பார்க்க முடியாது. அறிந்தவை உள்ளே உள்ளது. செயல்களைப் பார்க்கலாம், விஷய ஞானத்தைப் பார்க்க முடியாது. உண்மையென உணர்ந்தால் அதை ஆழமாக அறிந்துகொள்ள ஆரம்பிக்கவேண்டும். உண்மையிலே அறிந்து கொள்ளாததை நம்புவதை நிறுத்திக்கொள்ள வேண்டும்

என்கிறது. உதாரணம்: கடவுள் இருக்கிறாரா என்று கேட்டால் பொதுவாக எல்லோரும் இருக்கிறார் என்று பதில் கூறுகிறார்கள். ஆனால் அவர்களுக்கு நிஜத்தில் தெரியாது, 'தெரியாது' என்றால் நேர்மையானவராக இருக்கிறார். எவைகளை அறிந்திருக்கிறாரோ அவைகளை மட்டும் சொல்லுதல் அதேபோல் அறிந்ததை மட்டும் உள்ளுணர்வுடன் நம்புதலுமாகும். அறியாததை நம்பிக் கொண்டிருந்தால் இந்த இரண்டாவது முத்திரை உடைபடாது என்கிறது தந்திரா.

உண்மையான விஷய ஞானத்திற்கு எதிரி இந்த பொய்யான விஷய ஞானம்தான். நம்புங்கள் பின்பு எல்லாம் தெரியவரும் என்றுதான் கூறுகிறது, 'முதலில் அறிந்து கொள்ளுங்கள் நம்பிக்கை தானே வரும்' என்று தந்திரா சொல்கிறது. இது ஆதாரபூர்வமான நம்பிக்கை. அறியாதவற்றை விட்டுவிட்டு அறிந்தவைகளை மட்டும் நம்புவதால் இந்த இரண்டாவது பூட்டும் உடைக்கப்படும் என்கிறது.

### 3) சமய முத்திரா (Samaya Mudra)

சமய (Time) என்பதை காலம் என்று அழைக்கலாம். பொதுவாகக் காலத்தை நிகழ்காலம், இறந்தகாலம், எதிர்காலம் என்று மூன்று வகைகளாகப் பிரிக்கிறார்கள். ஆனால் தந்திராவில், இப்பொழுது உள்ள நிகழ்காலம் மட்டும்தான் உண்மையான காலமாகக் கருதுகிறது. இறந்தகாலம் என்பது முடிந்துவிட்டது, எதிர்காலம் என்பது இன்னும் நிகழவே இல்லை என்று கூறுகிறது. இறந்த காலம் பழைய ஞாபகங்களிலே இருக்க வேண்டும். எதிர்காலம் கனவுகளில் இருக்க வேண்டும். இரண்டுமே பொய்தான், இப்பொழுது இங்கே இருத்தல்தான் உண்மையானது. இப்பொழுது இங்கே நிகழ்காலத்தில் இருந்தால் இந்த மூன்றாவது முத்திரை உடைக்கப்படுகிறது.

செயல்களில் முழுமையாக இருக்க முதல் முத்திரை உடைக்கப்படுகிறது, அறிந்ததில் நேர்மையாக இருக்க இரண்டாவது முத்திரை உடைக்கப்படுகிறது, இந்தக் கணத்தில் இப்பொழுது இங்கே இருக்க மூன்றாவது பூட்டும் உடைக்கப்படுகிறது.

**4) மஹா முத்திரா** (Maha Mudra)

மஹா முத்திரா என்பது உள்ளடக்கிய பரவெளி (Space) இதை இடம் என்றும் அழைக்கலாம். பரவெளி என்பது ஒருவருடைய மிக உள்ளடங்கிய மையம். ஒருவருடைய இந்த உள்ளடங்கிய மையத்தில்தான் ஒன்றுமற்ற (Emptiness/non-self) பரந்த ஆகாயம் இருக்கிறது. உள்ளடக்கிய 'உண்மை' நிலையை அறிந்துகொள்ள ஒருவர் தன்னுள் மிக ஆழமாகச் செல்ல வேண்டும்.

இந்த நான்கு முத்திரைகளும் உடைக்கப்பட்டால் தெளிவு ஏற்படும். அந்தச் சுத்தப் பரவெளியை அடையாமல் எந்தத் தெளிவும் ஏற்படாது. முதலில் செயல், அடுத்து அறிதல், அடுத்தது காலம், அடுத்தது இடம் (பரவெளி).

**கற்றுக்கொள்பவராக ஆகுங்கள், அதாவது வாழ்க்கையிட மிருந்து கற்றுக் கொள்பவராக ஆகுங்கள். வாழ்க்கைதான் ஒருவருடைய ஆசிரியர். வாழ்க்கையிலிருந்து கற்றுக்கொள்ளா விட்டால் வேறு எங்கேயிருந்து கற்றுக்கொள்வது. வாழ்க்கை கற்றுக்கொடுக்காவிட்டால் வேறு யார் கற்றுத்தர முடியும்.**

இந்தப் பிரபஞ்சம் ஒரு பல்கலைக்கழகம். ஒவ்வொரு வெற்றி, தோல்வி, ஏமாற்றம், அன்பு, வெறுப்பு, கோபம், மகிழ்ச்சி, துக்கம், துயரம், பேரானந்தம் எல்லாவற்றிலிருந்தும் கற்றல் நடைபெறுகிறது. மேலும் மேலும் கற்றுக்கொள்ள பிரக்ஞை நிலை வளரும். அதிகமாக அறிய அறிய இந்தப் பிரபஞ்சத்தின் இரகசியமும் அதிகமாகிக்கொண்டே செல்லும். அதிகமாகக் கற்க கற்க குறைவாக அறிந்துகொண்டதாக உணர்வு ஏற்படும். ஒன்றை அறிந்துகொண்டபின் அடுத்த புதிய கதவு திறக்க ஆரம்பிக்கிறது. அறிந்துகொள்ள அறிந்துகொள்ள இந்தப் பிரபஞ்சத்தின் இரகசியமும் அதிகரித்துக்கொண்டே போகும்.

இவைகளை அனுபவித்தவர் நிசப்தமாகிவிடுவார். அத்தகையவர் தனக்குள் இவை இருப்பதையே தெரியாத நிலையில் இருப்பார். எவர் ஒருவர் இவைகளைத் தனக்குத் தெரியும் என்கிறாரோ அவர் உண்மையில் உண்மையில்லாதவ ராகிறார்.

சுவாமி என்பவர் தான் சுவாமி என்பதை அறியார். மக்கள் அத்தகையவர் முன்னிலையில்:

'உண்மையை' உணர்ந்தனர்,

'உண்மையை' அனுபவித்தனர்,

'உண்மையை' அடைந்தனர்,

மக்களுக்குள் ஏதோ ஒன்று ஊடுருவியது மக்கள் தங்களை அறியாமல் அவர்களை 'சுவாமி' என்றனர்.



## அத்தியாயம் - 4

# ஒன்றும் அற்ற நிலை
# (Emptiness / Nothingness)

நீங்கள் அறியாததைப்பற்றி நினைக்க முடியாது, மனதில் பதிந்துள்ளவைகளைத்தான் மீண்டும் மீண்டும் நினைவிற்குக் கொண்டுவர முடியும். பழைய எண்ணங்களிலிருந்துதான் புதியவற்றை உருவாக்க முடியும் ஆனால் 'உண்மையை' கண்டுபிடிக்க முடியாது. அறிவு பெற்ற மனம் 'உண்மையை' விளக்குகிறது, தந்திரா அறிவுக் கூர்மைக்கு வழிகாட்டுகிறது, அறிவு பெறுவதற்கு அல்ல, அது எந்தக் கேள்விக்கும் பதில் அளிப்பது இல்லை. தந்திரா 'உண்மையை உண்மையாகப்' பார்க்கச் செய்து அதனைச் சுற்றியுள்ள இருட்டை அது நீக்க முயல்கிறது.

தந்திரா எண்ணங்களிற்கு அப்பால் செல்கிறது, அது அன்பையும், காதலையும் போற்றுகிறது. ஏனெனில் அந்த முடிவான உண்மை நிலைக்கு அந்த அன்புநிலை (Love orgasm) ஒரு அடையாளமாகவே இருக்கிறது. அந்தக் கணத்தில் உள்ள அன்புநிலையில் நீங்கள் உங்கள் 'மனதை' இழக்கிறீர்கள். சாதாரண மனிதனுக்கு ஏற்படும் அந்த 'மனமற்றநிலை' அப்பொழுது மாத்திரம்தான் உண்டாகிறது. அந்த உண்மையை உணருவதற்கு சாதாரண மனிதனுக்கு இது ஒன்றே சாத்திய மாகிறது. ஆனால் அது முடிவான உண்மைநிலை அன்று. அது உண்மையோடு தொடர்புகொள்ள ஒரு சந்தர்ப்பத்தை யளிக்கிறது. மனிதனுடைய 'உண்மை'த் தன்மை ஒரு புரியாத புதிர். எந்தப் பதிலாலும் அதை விளக்க முடியாது. ஏனென்றால் அது கேள்வியே இல்லை. அதை யாராலும் தீர்க்கமுடியாது, உணரத்தான் முடியும். பிரச்சினைகள் எப்போதும் அறிவோடு கூடிய மனதினால் உண்டாக்கப்படுவதால், அதைத்

தீர்க்கமுடியும். புரியாத புதிரை மனம் உண்டாக்கவில்லை. புரியாத புதிர் உயிர்த்தன்மையானது.

**'மனம் என்பது மனிதனால் உண்டாக்கப்பட்டது, அது செயற்கைதான், இந்தப் புரியாத புதிரை, தெரியாத தன்மையை, உண்மையை உண்மையாகத் தெரிந்துகொள்ள வேண்டுமென்றால் முதலில் மனதை விட வேண்டும்' என்கிறது தந்திரா. தந்திரா ஒரு தத்துவம் அல்ல முழுக்க முழுக்க ஒரு உயிர்த் தன்மையானது.** தத்துவவாதிகள் (ideologists) துக்கம், கவலை, சோர்வு, மன இறுக்கம், அடக்குதல் போன்ற அதிகமான எதிர்விளைவுகளைப் (Negative) பற்றித்தான் பேசுகிறார்கள். 'குன்றை' மலையாக்குவதுதான் தத்துவம். ஆனால் தந்திரா நேர் விளைவுகளான (Positive) அழகுத்தன்மை, ஆனந்தம், மகிழ்ச்சி என்பவற்றை மட்டும்தான் எடுத்துக்கொள்கிறது. 5000 வருடங்களாக மனிதன் ஒவ்வொன்றைப் பற்றியும் தத்துவார்த்த மாக அலசி ஆராய்ந்திருக்கிறான். சிந்தனை செய்திருக்கிறான், ஆனால் எந்த மிகச்சிறிய கேள்வியைக்கூடத் தீர்த்துவைக்க முடியவில்லை. 'தத்துவம்' எதற்கும் விடை காணமுடியாது எனத் தெரிந்தும் இன்றும் தத்துவவாதங்கள் தொடர்ந்துகொண்டுதான் இருக்கிறது. ஏன்? அது ஒரு பொழுதுபோக்காகி விட்டது. முடிவில் எந்த விடையும் கொடுக்க வேண்டியதில்லை. அது மிக மலிவானது, அதற்கு எந்த ஈடுபாடும் தேவையில்லை. அதனால்தான் மனிதன் அதை விடமாட்டேன் என்கிறான்.

இயல்பான தன்மையுடையவர்களிற்கு மட்டும் தந்திரா பொருந்தி வருகிறது. கண்களால் இயல்பாகப் பார்க்கக்கூடிய அளவிற்கு, காதுகளால் இயல்பாகக் கேட்கக்கூடிய அளவிற்கு அவைகளுடைய இயல்பான நுண்மையான உணர்வை இழக்காமல் இருங்கள். இவ்வியல்பான தன்மையைத்தான் ஜீசஸ் மீண்டும் மீண்டும் தன் சீடர்களிடம் 'கண்களையுடையவர்கள் அதைப் பார்க்கட்டும், காதுகளையுடையவர்கள் அதைக் கேட்கட்டும்' என்று கூறினார். காது கேளாதவர்களிடமோ, கண் தெரியாதவர்களிடமோ அப்படிச் சொல்லவில்லை. இந்த உலகத்தை எந்த அளவுக்குப் பார்க்கமுடியுமோ, எந்த அளவிற்குக் கேட்கமுடியுமோ அவர்களை நோக்கித்தான் கூறுகிறார். எதற்காக ஜீசஸ் உங்களுக்குக் கண்களிருந்தால் என்று கூறினார்? ஏன் 'இருந்தால்' என்று கூறவேண்டும்? கண்கள்

உடையவர்களாக இருந்தும் பார்க்கும் சக்தியைப் பெறவில்லை, அந்த 'இயல்புத் தன்மையை'ப் பொறுத்தவரையில் பார்க்கும் சக்தி இல்லாதவர்கள்தான். மனம் குறுக்கிடாமல், வார்த்தைகள் இல்லாமல் ஒன்றைப் பார்க்க முடியுமா? ஒரு பூவைப் பார்க்கும் போது உங்களது மனம் இது என்ன பூவாகவிருக்கும் என்று ஆராயக்கூடாது, இது அழகான பூ என்ற வார்த்தை உங்களுக்கு வரக்கூடாது, நீங்கள் பார்த்த கேள்விப்பட்ட பூக்கள் வரிசையாக உங்கள் முன் நிற்கக்கூடாது, உங்கள் 'மொழியால்' வார்த்தை களால் அசுத்தப்படுத்தாமல் வெறுமனே பார்க்கவேண்டும். எந்தவித எண்ணமும் தோன்றக்கூடாது, எந்தவித கற்பனைகளும் ஓடக்கூடாது.

ஒரு சில கணங்கள்கூட வார்த்தைகள் இல்லாமல் இருக்கமுடியுமா? மொழியில்லாமல், கற்பனை இல்லாமல், எந்தவித எண்ணங்களும் இல்லாமல் எதைப் பார்த்தாலும் வெறுமையாகத் தெரியக்கூடிய நிலையில்தான் 'மனக்கண்' ஏற்படும். ஒரு மரத்தைப் பார்க்கும்போது இது என்ன மரம், ஏன் இப்படி இருக்கிறது அல்லது மரத்தின் பெயரோ அல்லது இந்த மரத்தை முன்பு எங்கேயோ பார்த்த ஞாபகம் போன்ற எதுவும் மனதில் எதுவித விசாரணையுமில்லாமல், கண்ணால் ஆராயாமல், மனதை அங்கு கொண்டு வராமல், அதைப் பார்த்து எந்தத் தீர்ப்பும் வழங்காமல் வெறுமனே நீங்கள்தான் உங்களுக்குச் சாட்சியாக இருந்து பாருங்கள். 'தீர்ப்பு, முடிவு, எண்ணம்' என்று வரும்போது பழைய அனுபவம்தான் அதனுடன் சேர்ந்து வரும். அப்போது நிகழ்காலத்தில் உள்ள அந்தக் கணம் தவறிவிடும்.

மனம் சேர்ந்தே இருக்கும். நல்லதோ, கெட்டதோ, அறிவுள்ளதோ, அறிவற்றதோ, அறிந்ததோ, அறியாததோ அது அங்கேயே இருக்கிறது. மகிழ்ச்சியை தவிர்க்காதீர்கள், திறந்த மனதோடு வரவேற்கும் தன்மையோடு அணுகி உங்களுடைய தாக்கிக் கொள்ளுங்கள். 'எங்கெல்லாம் மகிழ்ச்சி இருக்கிறதோ அங்கே 'கடவுள்' இருக்கிறார்' - இதுதான் தந்திராவின் செய்தி. உடல்நிலை சம்பந்தப்பட்ட மகிழ்ச்சி (Pleasure), மனம் சம்பந்தப்பட்ட மகிழ்ச்சி (Happy), ஆன்மிகம் சம்பந்தப்பட்ட மகிழ்ச்சி (Bliss), உண்மை நிலையில் ஏற்படும் பேரானந்தம் (Joy). மகிழ்ச்சி உடல் வழியாக வெளிப்பட்டால் அது 'இன்பம்', மகிழ்ச்சி மனம் வழியாக வெளிப்பட்டால் அது 'ஆனந்தம்',

மகிழ்ச்சி மனமற்று, மற்றும் உடலற்று ஏற்படுமானால் அது 'பேரானந்தம்.' பேரானந்தம்தான் அந்த 'உண்மை.' நீங்கள் காதலிக்கும் உங்கள் காதலியையோ அல்லது காதலனையோ கைகளால் முதன்முதலில் தொடும்போது அல்லது மிகுந்த அன்பு நிலையில் தொடும்போது உடலில் ஒரு புத்துணர்ச்சி ஏற்படும். அதற்கு முன்பு அப்படி ஒரு நிலை இருந்ததில்லை. அந்நிலை ஏற்படும்போது 'கடவுள் உடல் வழியாக வருகிறார், ஒரு அருமையான இசையைக் கேட்டு மிகவும் சந்தோச நிலை ஏற்படும்போது 'கடவுள்' மனம் வழியாக வெளிப்படுகிறார் போன்ற கருத்தைக் கூறுகிறது 'தந்திரா.'

**இன்பத்தை அடையுங்கள் என்கிறது 'தந்திரா.' நீங்கள் 'களிப்பை' அடைவதற்கு தயங்குகிறீர்கள். ஆனால் துன்பப்படு வதற்கு தயாராக இருக்கிறீர்கள், துன்பப்படுவதற்கு தயாராக இருக்கும் அளவிற்கு இன்பம் அடைவதற்குத் தயாராக இல்லை... ஏன்? இன்பம் ஏற்படும்போது நீங்கள் உங்களையே அதில் தொலைத்து விடுகிறீர்கள், இன்ப நிலையிலிருக்கும் போது அங்கு அகங்காரம் மறைந்துவிடுகிறது. துன்ப நிலையிலிருக்கும் போது நீங்கள் அதில் முழுமையாக இருக்கிறீர்கள். இன்பத்திலிருக்கும்போது உங்களை 'இழந்து' விடுகிறீர்கள். எந்த அளவிற்கு அகங்காரம் இருக்கிறதோ அந்த அளவிற்கு துன்பமும், துயரமும் இருக்கும். அப்போது உங்களைச் சுற்றி மகிழ்ச்சி அற்ற சூழ்நிலையை ஏற்படுத்து கிறீர்கள். இன்ப நிலைகளை துன்ப நிலைகளாக வலுக்கட்டாய மாக மாற்றுகிறீர்கள்.**

அகங்காரமற்று இருந்தால் 'சொர்க்கம்' உங்களை வந்தடையும், சொர்க்கம் என்பது எங்கேயோ உள்ள அற்புத உலகமல்ல. நீங்கள் நிறைந்த அகங்காரத்தோடு இருந்தால் அதுவே நரகம். 'நரகம்' என்றால் பூமிக்குக் கீழே அதிக தூரத்தில் இருக்கும் உலகமல்ல. 'சொர்க்கம்' என்பது எங்கேயோ பூமிக்கு மேலே ஆகாயத்தில் இருக்கும் உலகமுமல்ல. அகங்கார மற்றிருந்தால் அதுவே 'சொர்க்கநிலை.' ஒவ்வொருவரும் இருக்கும் நிலையைத்தான் 'சொர்க்கம்' என்றும் 'நரகம்' என்றும் பிரித்துக் கூறப்படுகிறது.

அகங்காரத்தால் மகிழ்ச்சியை ஏற்படுத்த முடியாது. மகிழ்ச்சி அதனுடைய செயற்பாடில்லை. '**ஒரேயொரு தடவை நீங்கள்**

ஒருசிலகணம் பேரானந்தத்திலிருந்தால் அது உங்களிடம் பெருத்த மாற்றத்தை ஏற்படுத்தும்' என்று சஹாறா அந்த அரசனுக்கு எடுத்துரைக்கிறார். நீங்கள் என்ன உயிர்த் தன்மையில் இருக்கிறீர்கள் என்றும், என்ன மாதிரியான வாழ்க்கையை வாழ்ந்துகொண்டிருக்கிறீர்கள் என்றும் அந்த ஒரு சில கணநேரம் உங்களுக்குத் தெளிவுபடுத்தும். எந்த மனம் உண்மைத் தன்மையைப் பற்றியும் உண்மை நிலையற்ற தன்மையையும் அனுபவரீதியாக உணர்ந்து கொள்கிறதோ அந்த மனமே செழுமை நிறைந்ததாகும். தத்துவத்தால், கோட்பாடு களால், கொள்கைகளால் செழுமையடையாது.

**உலகில் ஒரேயொரு வளம்தான் இருக்கிறது - அதுவே 'உண்மை.'**

**உலகில் ஒரேயொரு வறுமைதான் இருக்கிறது - அதுவே 'பொய்.'**

**உண்மையை அறியாத நிலையில் பொய், கற்பனை, கனவு இவைகளில்தான் வாழ வேண்டும்.**

ஜனங்கள் வீடுகள், கார்கள், மதங்கள், அதிகாரம், புகழ், பணம், இவைகளின் பின்னே ஏன் ஓடுகிறார்கள்? இவைகளின் பின்னால் மக்கள் ஓடவில்லை, உண்மையில் அவர்கள் தங்களிடமிருந்து தாங்களே விலகி ஓடுகிறார்கள். பார்க்கும் எல்லாப் பொருட்களிலும் ஆனந்தப்படுங்கள், ஆசைப் படாதீர்கள், உலகின் பல நாடுகளில் 'சுவாமி'யார்கள் அங்கீகாரம், புகழ், லட்சோபலட்ச பண வருமானங்கள், சொகுசுப் பிரயாணம், சொகுசு ஹொட்டல், பழரசம், உல்லாச வாழ்க்கை, சொகுசுக் கார்கள் இவைகள் மேல் பிரியங் கொள்கிறார்கள்... ஏன்? அவர்கள் தங்களிடமிருந்து தாங்கள் தப்பிச் செல்லவே முயற்சி செய்கிறார்கள். அவர்கள் எல்லாம் தங்களைக் கண்டு தாங்களே பயப்படுகிறார்கள், தங்களைப் பற்றித் தங்களிடம் மிகுந்த பயம் இருக்கிறது. தங்களைப் பார்க்கும்போது 'தங்கள் உள்ளே தாங்கள் உருவாக்கிய தங்களை' அங்கே காணவில்லை என்பதைக் கண்டு அதிர்ச்சியடைகிறார்கள். இதனால் தங்களைவிட்டு ஓடுகிறார்கள், தங்களைவிட்டு என்பது தங்கள் உயிர்த் தன்மையிலிருந்து (Being) இருப்பு நிலையிலிருந்து ஓடுகிறார்கள்.

தந்திரா கூறுகிறது: ‘உங்களிடமிருந்து விலகி ஓடாதீர்கள், உங்களுடனே நட்பாக இருங்கள். அப்போது உண்மையை நோக்கி உங்களால் செல்ல முடியும்.’ சாதாரண பொதுமக்கள் தங்களைத் தவிர்த்து ஓடுவதற்கு வேறு எதுவும் கிடைக்கவில்லை, அவர்கள் தங்களைத் தவிர வேறு எதனிடமிருந்தும் தப்பிக்க முயற்சி செய்யவில்லை. அதனால் ‘ஆடம்பரப் பொருட்கள் மீது’ ஆசை கொள்கிறார்கள். தங்களைக் கண்டு தாங்களே பயப்படாதவர்களால் மட்டுமே எப்பொழுதும் ஆனந்தமாக இருக்கமுடியும்.

சஹாறா சொல்கிறார்: ‘ஒரு நாத்திகரதும் ஒரு சாதாரண மனிதரதும் செயற்பாட்டிற்கு இடையில் வெளிப் பார்வையில் மேலோட்டமாகப் பார்க்கையில் இருவருடைய செய்கையும் ஒரே மாதிரித்தான் தெரியும். ஆனால், அவர்களிற்குள் ஏற்படும் வித்தியாசம் மிகமுக்கியமானது’ என்கிறார். ஒரு சாதாரண மனிதன் ஒரு பெண்ணின் கையைப் பிடித்துக்கொள்ளும்போது தான் தன்னிடமிருந்து தப்பிச் செல்லவே நினைக்கிறான். அவன் தன்னை மறக்க அவளிடம் தன்னை இழக்கத் தயாராக இருக்கிறான், அப்பெண்ணை ஒரு கருவியாகப் பார்க்கிறார். அப்படி ஒரு கண நேரமாவது ஓய்வாக இருக்கலாம் என நினைக்கிறார். உண்மையை உணர்ந்தவர் ஒரு பெண்ணின் கையைப் பிடித்துக்கொண்டு இருக்கிறார். அவர் எங்கேயும், எதனிடமிருந்தும், எதை நோக்கியும் ஓட முயற்சிக்கவில்லை. அவரிடம் தப்பி ஓடுவதற்கு எதுவுமே இல்லை. தன்னிடமுள்ள அரிய பொக்கிஷத்தை ‘ஞானத்தை’ அவளுடன் பகிர்ந்து கொள்ளவே அப்படிச் செய்கிறார். “வெளியிலிருந்து ஒருவர் அவரைப் பார்க்கும்போது ‘ஆசைகளை’ நோக்கி ஓடும் சாதாரணமானவர்களைப் போலத்தான் வாழ்க்கை இன்பங்களை அனுபவிப்பவராகவே தோன்றும். ஆனால் அவர்கள் அப்படி யில்லை” என்கிறார் சஹாறா.

மேலும் பின்வருமாறு கூறுகிறார்: “நான் ஆசைகளை நோக்கியும், செல்வங்களின் பின் ஓடுவதாகவும் நீங்கள் கருதுவது கற்பனையே. அப்படி ஓடுவதற்கு எனக்கு எதுவுமே இல்லை. உணவிலிருந்து கடவுள்வரை, உடலுறவு இன்பத்திலிருந்து சமாதி நிலை வரை எல்லாவற்றையும் ஒரே தன்மையில் ஆனந்தமாகக் கருதுமளவிற்கு உள்ளுணர்வு உண்மை நிலையை

அடைந்துள்ளது" என்கிறார். எல்லா மதங்களும் நாம் வாழும் இந்த உலகத்தை துறந்துவிடுங்கள் என்கிறது. அவை ஒரு பொய்யான கற்பனை நிறைந்த வேறு உலகத்தைக் காட்டிக் கொண்டிருக்கின்றன. கடவுள் வாழும் உலகம் வேண்டுமா? என்கின்றன, கடவுளுக்குப் பயப்படுங்கள் என கடவுளை இந்த உலகத்தின் எதிர்ப்பாளராகவே சித்திரிக்கின்றன.

**தந்திரா இந்த உலகம் 'இது'வாகவும் 'அது'வாகவும் இருக்கிறது என்கிறது. அதாவது எல்லாவற்றையும் தன்னுள்ளே கொண்டதாக இருக்கிறது என்கிறது. நாம் வாழும் உலகம் ஒரு பூரண உலகம் என்கிறது தந்திரா. இந்த உலகமே உங்களுடையதுதான், நீங்கள் ஆனந்தமாக இருக்கும் அதே சமயத்தில் அதைத் தாண்டியும் செல்லமுடியும். அதை அனுபவிக்கலாம் என்கிறது தந்திரா.**

இந்த உலகத்தை முழுமையாக ஏற்ற ஒன்று தந்திராதான். மதங்கள் எல்லாம் 'மேலோகம்', 'தேவலோகம்', 'சொர்க்க லோகம்', 'மேலேயுள்ள தெய்வீக உலகம்' என்று கூறி கண்முன்னே உள்ள வாழும் இந்த உலகத்தை நிராகரிக்கின்றன. இதனால் வாழ்க்கையை உண்மையாகப் புரிந்துகொள்ளும் ஆற்றலை மழுங்கடிக்கின்றன. 'நீங்கள் எங்கே இருக்கிறீர்களோ அங்கேயே முழுமையாக இருங்கள்', **வாழும்போதே உலகம் ஒருவரை முழுமையாக்குகிறது, முழுமையான நோக்கம் கொண்டது என்கிறது தந்திரா.** உலகத்தை இறைவன் படைத்தார் என்றால் இந்த உலகம் இறைவனையும் உட்படுத்தியதுதான், கடவுள்தான் மனிதரைப் படைத்தார் என்றால் மனிதரின் உடலையும், காம உணர்வையும் கடவுள் தான் படைத்தார், எப்படி 'காம உணர்வு' கடவுளிற்கும் தெய்வீகத்திற்கும் விரோதமாக முடியும்? நீங்கள் கடவுளின் படைப்பிற்கு எதிராகவிருந்தால், நீங்கள் கடவுளுக்கு எதிராக இருக்கிறீர்கள் என்ற அர்த்தம் அதனுள் மறைந்துள்ளது.

'மேலோகத்தை' தேர்ந்தெடுங்கள் என்று மதங்கள் வலியுறுத்துவதன் மூலம் அவை ஒருவித ஆசையில் மக்களை மூழ்கடிக்கின்றன. அந்த 'தேர்ந்தெடுத்தல் அதுவா அல்லது இதுவா' என்பதால் நாம் வாழும் இந்த உலகம் வெறும் உலகமாகவே இருக்கிறது. 'சொர்க்கம்' என்ற மாற்றத்தை இந்த

உலகம் அடையாமலே இருக்கிறது. காரணம் 'சொர்க்கத்தை' வேறு எங்கேயோ காட்டுகின்றது. அந்த 'சொர்க்கத்தை' அடைய இந்த உலகத்தைத் துறக்க வேண்டும் என மதங்கள் கூறுகின்றன. அதாவது 'குடும்பம்', 'நண்பர்கள்', 'உறவினர்கள்' அன்போடு இருக்கும் அனைத்தையும் துறக்க வேண்டும். சுருக்கமாகக் கூறினால் நீங்கள் வாழக்கூடாது. 'வாழ்க்கை' மறுக்கப்படுகிறது. 'விபரீதமான எண்ணங்கள் உடையவராகி வாழ்க்கையைப் புரிந்துகொள்ளும் ஆற்றலை இழக்கிறீர்கள். உங்களுக்கு நீங்களே மென்மையான வன்முறையாளர்களாக மாறுகிறீர்கள். மெல்ல மெல்ல வாழ்வின் உயிர்த்தன்மை விஷமாக்கப்படுகிறது. பிறருடைய 'துன்பத்தில்' இன்பம் காணுபவராகி ஒரு வித்தியாசமான மாறுபட்ட மனநிலையை உடையவராகிறீர்கள். 'மதமாற்றம்' சுலபமாக வேர்விடுகிறது. 'சொர்க்கத்தை' விரைவில் காட்டுவார்கள் என்ற எதிர்பார்ப்பு வலுவடைகிறது. அதற்கான 'பாதைகளை', 'சலுகைகளை' சொர்க்கத்தைக் காட்டுபவர்கள் அமைத்துத் தருவார்கள். அப்பாதையின் மூலம் இந்த உலகத்தை விட்டு வேறு எங்கேயோ செல்லலாம். 'சுயசிந்தனை' உள்ளவர்கள் இந்த ஆன்மிக ஆக்கிரமிப்பில் அடிபட்டுப்போக மாட்டார்கள். அவர்கள் கற்பாறையாக இருந்தாலும் சரி, புற்றரையாக இருந்தாலும் சரி எல்லாவற்றிலும் களிப்போடு இருப்பார்கள். அவர்களால் இயற்கையை இயற்கையாக ஏற்றுக் களிப்பிலிருக்க முடியும்.

ஒரு தோட்டக்காரன் லட்சக்கணக்கான மரங்களைத் தன் தோட்டத்தில் வளர்க்கிறான். ஆனால் ஒரேயொரு மரந்தான் பூக்கிறது என எடுத்துக்கொள்வோம், அந்த ஒரேயொரு மரந்தான் தோட்டக்காரனிடமிருந்து தப்பிவிட்டது. மற்றைய மரங்கள் அனைத்தும் அவனது கண்காணிப்பில் இருந்ததால் அவை தங்கள் சுய சிந்தனையில் வளர முடியவில்லை. அந்தத் தோட்டக்காரன் அந்த மரங்களின் 'சுயசிந்தனையை', 'தைரியத்தை' எடுத்துவிட்டார். பெரும்பாலான மக்கள் இதேபோல் வளர்ச்சியில்லாமல் இருக்கிறார்கள். சுயசிந்தனை அழிக்கப்பட்டுவிடுகிறது. மதங்களின் பிடியில் சிக்குண்டு வளர்ச்சியற்று இருக்கிறார்கள். எல்லா மனிதர்களும் 'உண்மையை' அறியக்கூடிய நிலையில்தான் இயல்பாகவே இருக்கிறார்கள்.

தந்திரா, 'நீங்கள் எங்கே இருக்கிறீர்களோ அங்கேயே முழுமையாக இருங்கள்' அங்கே 'அனுபவத்தால்' கடவுளை உணரலாம் என்கிறது. நீங்கள் வாழும் உலகத்தை விட்டு வேறு ஒரு உலகத்தைத் தேடவில்லை, பாதை காட்டவில்லை, உருவாக்கவில்லை, இந்த உலகத்திற்கு எதிராகவோ, இந்த உலகத்தை நிராகரிக்கவோ இல்லை. 'தந்திரா' மிக்க புதுமையான, மிகவும் முழுமையான ஒரு மதமற்ற மதத்தினை அறிமுகப்படுத்துகிறது. அது வாழ்க்கையை மதமாகப் பார்க்கிறது. கடவுளின் படைப்புக்களே அனைத்தும் என்று கூறிக்கொண்டு இனத்தால், மொழியால், நிறத்தால், பிரதேசத்தால் வேறுபட்டு அந்தப் படைப்புகளிற்கே எதிராக இருந்தால் அவர்கள் 'கடவுளுக்கு' எதிராக இருக்கிறார்கள் அல்லவா.

அரசனது கேள்வியொன்றிற்கு சஹாறா விளக்குகிறார்: 'உடலால் ஏற்படும் சந்தோஷங்கள் அனைத்தும் 'சக்தி'யை வெளியே கொணர்ந்தும், புலன் இன்பங்கள் பிற பொருட்களை சார்ந்தும் இருக்கின்றன. ஆனால் பேரின்ப (Joy) 'சக்தியை' உள்ளே செலுத்துவதால் பேரின்பத்திற்கு நீங்களே போதும் வேறு யாரும் தேவையில்லை. புலன் இன்பங்களிற்குப் பிறரும், பிற பொருட்களும் தேவை. கடவுளை உணர்ந்து அறிந்து கொண்டால் நீங்கள் எங்கே நடந்தாலும் ஒரு புனித பூமியில்தான் நடக்கிறீர்கள் என்பதை உங்களால் உணர்ந்து கொள்ள முடியும். உங்கள் சந்திப்பில் எல்லா உறவுகளையும் சந்திப்பீர்கள். சக்தி எதுவும் வெளியே செல்லாதபோது உங்களுக்குள்ளே வெறுமனே இருக்கும்போது 'அது' நிகழ்கிறது. இப்போது உங்களிடம் எந்தக் குறிக்கோளும் இல்லை, ஆசையும் இல்லை, எதிர்காலம், இறந்தகாலம் எதுவுமில்லை. இப்போது இங்கே வெறுமனே முழுமையாக இருக்கிறீர்கள். உடல் ரீதியாகவும், மன ரீதியாகவும் மறைந்துவிட்டீர்கள். 'சக்தி' மேல் நோக்கிப் பாய்கிறது' என்கிறார்.

மேலும் பாசத்தோடு வாழ்ந்தாலும் சரி, வாழாவிட்டாலும் சரி அவைகளில் எந்த வேற்றுமையும் இல்லை, 'மையத்தில்' வெறுமை நிலையில்தான் இருக்கிறது. பாவிகள் என்பதும், சந்நியாசிகள் என்பதும் மனத்தால் ஏற்பட்டதே தவிர வேறல்ல நல்லது, கெட்டது என்பதற்கும் மனம்தான் காரணம்.

'மக்கள் சொல்வதைக் கேட்டுக் குழம்ப வேண்டாம். நல்ல மனிதர், கெட்ட மனிதர், ஒழுக்கமானவர், ஒழுக்கமற்றவர், மதிக்கப்பட்டாலும், தூற்றப்பட்டாலும் அவை ஒன்றுமற்ற நிலையில் (Nothingnes) எல்லாமே வெறுமையானவையாக இருக்கும். என்மேல் செலுத்தும் எண்ணங்கள் ஒன்றுமற்ற நிலையில்தான் இருக்கின்றன என்பது எனக்குத் தெரியும் என்று அரசனுக்குக் கூறினார் சஹாறா முனிவர். சரி, தவறு என்று எல்லாவற்றிலிருந்தும் விடுதலையடைந்தால் நல்லது, கெட்டது என்பவற்றிலும் விடுதலையடைந்தால் பந்த, பாசங்கள், உணர்வு என்று எல்லாவற்றிலிருந்தும் நீங்கள் விடுதலை அடைந்தவ ராவீர்கள் என சஹாறா விளக்குகிறார். 'பற்று' என்பது தானே நிகழாது. அது வெறும் நம்பிக்கைதான். அதை ஒருவர் எண்ணங்கள் வழியாகத்தான் உண்டு பண்ணுகிறார்.

பற்றோ, பற்றற்ற தன்மையோ என்னிடம் ஏற்படவில்லை. எது நிகழ்ந்தாலும் அதைச் சாட்சியாக நின்று பார்க்கிறேன், நான் அவற்றை அப்படியே அனுமதிக்கிறேன். 'இப்படித்தான்' இருக்க வேண்டும் 'இப்படி இருக்கக் கூடாது' என்று எந்த ஒழுக்க நியதிகளோ, கட்டுப்பாடுகளோ என்னுள் ஏற்படுத்திக் கொள்ளவில்லை. நான் அப்போதைக்கப்போது, கணத்துக்குக் கணம் வாழ்ந்துகொண்டிருக்கிறேன். இப்படித்தான் நடக்க வேண்டுமென்று எதைப் பார்த்தும் நான் கூறுவதில்லை, செய்யவேண்டும், செய்யக் கூடாது என்ற திட்டம் இல்லை, துக்கமில்லை, சோர்வு இல்லை. 'சரி' என்ற எண்ணம் இல்லாதபோது 'தவறு' என்ற எண்ணம் எப்படி ஏற்பட முடியும்? 'சரி' என்ற கட்டுப்பாடு இல்லாமல் 'தவறு' என்பது எப்படி ஏற்படும்? என மேலும் அரசனுக்கு விளக்கினார். எதுவும் ஒருவனைப் பாதிக்காதபோது எப்படி ஒருவன் பிணைப்பில் கட்டுண்டிருக்க முடியும்? என வினாவினார் சஹாறா.

இவ்வாறே 'தந்திரா' கேள்வியுடனே தன்னை நிறைவு செய்கிறது. எந்த மத ஏடும் கேள்விக் குறியோடு முடிந்திருக்க வில்லை. ஆனால் அனேக மத ஏடுகள் ஆரம்பத்தில் கேள்வியோடுதான் ஆரம்பித்து இறுதியில் விடையோடுதான் முடிவு பெறும். ஆனால் தந்திரா கேள்வியோடு நிறை வடைகிறது.

## ஒரு நிகழ்வு

வேதம் தோன்றிய காலத்தில் வாழ்ந்த 'உதலக்கா' (Udallaka) என்ற ஞானியின் மகன் சுவத்கேது (Swetketu) ஒரு குருவிடம் குருகுலவாசம் முடிந்து வீடு திரும்பினார். மகனைப் பார்த்ததும் தந்தை கவலையுற்றார். மகனிடம் தான் படித்து பட்டத்துடன் வந்திருக்கும் அகங்காரம் இருப்பதை தந்தை அவதானித்தார். அக்காலத்தில் கல்வியின் நோக்கம் அகங்காரத்தை முற்றிலும் ஒழிப்பதற்காகவே அமைந்திருந்தது. சுவத்கேது தந்தையிடம் ஏன் கவலையாக இருக்கிறீர்கள்? நான் கற்கக்கூடிய அனைத்தையும் கற்று வந்திருக்கின்றேன். வேதம், தத்துவம், கணக்கு, வான சாஸ்திரம், பிரபஞ்ச அறிவு, கலைகள் என்று கூறிக்கொண்டே போனார். ஏடுகளில் சொல்லப்பட்டிருப்பவை அனைத்தையும் குருமூலம் கற்று வந்திருக்கிறேன் என ஒரு சாதாரண மாணவன் எப்படித் தன்னைப் பற்றி நினைத்துக்கொண்டு இருப்பானோ அப்படித்தான் இவரும் நினைத்துக்கொண்டு இருக்கிறார் என்பதை உணர்ந்த தந்தை நீ 'அதை'க் கற்றுக்கொண்டு வந்தாயா? என்றார்.

மகன் : குரு சொல்லித் தந்த அனைத்தையும் கற்றுள்ளேன்.

தந்தை : அங்கே பார் மரங்கள் நிற்கின்றன, அந்த மரங்கள் எதிலிருந்து வந்தன? என்றார்.

மகன் : விதையிலிருந்து என்றார்.

தந்தை : போய் மரத்தின் விதையொன்றைக் கொண்டுவா என்றார்.

மகன் : மரத்தின் விதையொன்றைக் கொண்டு வந்தார்.

தந்தை : அந்தப் பெரிய மரம் இந்தச் சிறிய விதையிலிருந்தா என்றார்? இந்த விதையை உடைத்து இந்தப் பெரிய மரம், அதில் எங்கே இருந்து வந்தது என்பதைப் பார் என்றார்.

மகன் : அந்த விதையை உடைத்தான், அதற்குள் எதுவுமில்லை வெறுமை என்றார்.

*தந்தை* : *எதிலிருந்து அந்தப் பெரிய மரம் வந்ததோ அந்த வெறுமையை (Emptiness) உன்னால் பார்க்க முடிகிறதா?*

*மகன்* : *வெறுமையை எப்படிப் பார்க்கமுடியும்?*

*தந்தை* : அந்த வெறுமையிலிருந்து, கண்ணுக்குப் புலப்படாத, புரிந்துகொள்ள முடியாத ஒன்றிலிருந்துதான் எல்லாமே வந்திருக்கின்றன. ஒரு நாள் எல்லாம் மறைந்து வெறுமைக்குள் செல்ல வேண்டியதுதான். நீ திரும்பிச் சென்று அந்த வெறுமையைக் கற்றுக் கொண்டு வா, எல்லாவற்றையும் அதிலிருந்துதான் ஒருவன் கற்க வேண்டும். எது ஆரம்பமோ அதுவே முடிவுமாகும். அந்த ஆதார நிலையைப் பற்றி கற்றுக்கொண்டு வா, இப்போது படித்தவை அனைத்தும் உன்னுடைய ஞாபகத்தின் விளைவு, நீ கற்ற அனைத்தும் இந்த வெளியுலகத்தைப் பற்றித்தான், அறிதலைக் கற்று வா (Knowing), அந்த மனமற்ற நிலையைக் கற்று வா, நீ உன்னுடைய உள் மையத்தைப் பற்றி எதுவுமே கற்றுக்கொண்டு வரவில்லை என்றார்.

*தந்திராவில் நான்கு படிகள் இருக்கின்றன.*

முதல்படி 'வெறுமையைக் கற்பது.' வெறுமை நிலையில் எந்தப் பொருளும் இல்லை. விதை முற்றிப் பூமியில் விழுகிறது. அந்த மரம் மறுபடியும் வெறுமை நிலை அடைகிறது. இதுதான் உயிர்த் தன்மையின் வட்டம். அதாவது வெறுமையிலிருந்து வெறுமைக்கு. இதற்கிடையில்தான் வெறும் எண்ணங்கள், வெறும் கற்பனைகள் இவைகள் தவிர எதுவும் இல்லை என்று ஞானிகள் கூறுகிறார்கள். மனமற்ற நிலைதான் (No mind) எல்லாவற்றிற்கும் ஆரம்பமும் முடிவும் ஆகும். அந்த மனமற்ற நிலையிலிருந்துதான் ஆரம்பமற்ற நிலை தந்திராவின் கூற்றுப்படி உருவாகிறது. இந்த ஆரம்பமற்ற நிலையிலிருந்துதான் ஞாபகமற்ற நிலை அல்லது 'இந்த ஞாபகமற்ற நிலையில் இருந்துதான்' 'ஞாபகம்' ஏற்படுகிறது என்கிறது தந்திரா.

**முதல் நிலை மனமற்ற நிலை:** எல்லாம் உள்ளடக்கிய நிலை.

**இரண்டாவது நிலை ஆரம்பமற்ற நிலை** (Unorigination): தன்னை வெளிப்படுத்திக் காட்டவில்லை, வெளிப்படுத்தத் தயாராக இருக்கிறது. முதல் நிலை தூக்கநிலை. இரண்டாவது நிலை எதுவும் நிகழவில்லை ஆனால் நிகழ்வதற்குத் தயாராக இருக்கிறது. எந்த நேரத்தில் எதுவும் நிகழலாம்.

**மூன்றாவது நிலை ஞாபகமற்ற நிலை** (Non memory): குழந்தை பிறந்துவிட்டது. குழந்தைக்குள் இந்த உலகம் வந்துவிட்டது. ஆனால் அதைப் பற்றிய அறிவு குழந்தைக்கு இன்னும் ஏற்படவில்லை. குழந்தை பிறந்த முதல் நாள் மெல்ல மெல்லக் கண்ணைத் திறந்து இந்தப் பச்சைநிற மரங்களைப் பார்க்கலாம். ஆனால் அது பச்சை நிறத்தில் இருக்கிறது என்பதைப் புரிந்துகொள்ள முடியாது. எந்த எண்ணம் எதுவும் இல்லாமல் பார்க்கிறது. அந்த நிலை அப்போதுதான் தோன்றியிருக்கிறது. சில மாதம்வரை குழந்தைகள் பார்க்கும், கேட்கும், உடலில் தொடுவதை உணரும், ருசிக்கும். ஆனால் அதைப் புரிந்துகொள்ள முடியாது, ஏனென்றால் குழந்தைக்கு இன்னும் ஞாபகமே ஏற்படவில்லை. அதனால்தான் ஒருவரால் தனது ஆரம்ப வாழ்வை நினைவிற்குள் கொண்டுவர முடியவில்லை. வயதான ஒருவர் ஞாபகப்படுத்த விரும்பினால் ஐந்து வயது வரை செல்லலாம். இன்னும் கொஞ்சம் முயன்றால் நான்கு வயது வரை செல்லலாம். மேலும் கஷ்டப்பட்டு முயன்றால் மூன்று வயதுவரை செல்லக்கூடியதாக இருக்கும். அதற்கு அப்பால் நம்மால் நம்மை ஞாபகப்படுத்த முடியாது. ஏன்? அப்போது நாம் வாழ்வின் புதிய தன்மையில் இருக்கிறோம். அதற்கு முன்பு அந்த நிலையில் இருந்ததே கிடையாது. அந்த மூன்று வயதில்தான் நாம் நம் வாழ்வின் முழுமையான நிலையில் இருக்கிறோம். ஏன் அந்த ஞாபகம் ஏற்படவில்லை? ஏன் அதில் நம்மால் உள்ளே செல்ல முடியவில்லை? ஏனென்றால் அறிந்துகொள்ளுதல் என்பது அப்பொழுது அங்கே இல்லை, பதிவுகள் மட்டும் மூளையில் இருக்கிறது, ஆனால் அதை அறிந்துகொள்ளுதல் அங்கே நிகழவில்லை. 'தந்திரா' இந்த நிலையை ஞாபகமற்ற நிலை என்று கூறுகிறது. நீங்கள் பார்க்கிறீர்கள், அதனால் உங்களிடம் எந்த விடய ஞானமும் ஏற்படவில்லை, நீங்கள் எதையும் சேகரிக்கவில்லை, நீங்கள் அப்பொழுது கணத்திற்குக் கணம் வாழ்ந்துகொண்டிருக்கிறீர்கள்,

நீங்கள் ஒரு கணத்திலிருந்து அடுத்த கணத்திற்கு அந்த முதல் கணத்தின் ஞாபகம் ஏதும் இல்லாமல் செல்கிறீர்கள், உங்களிடம் எந்த இறந்த காலமும் கிடையாது.

ஒவ்வொரு கணமும் மிகவும் புதிய நிலையில் எழுகிறது, ஆகவேதான் குழந்தைகள் ஒவ்வொரு கணமும் மிகுந்த உயிர்த் தன்மையில் அப்போது மலர்ந்தது போல புத்தம் புதிய தன்மையில் இருக்கின்றன. அதனுடைய அந்த வாழ்க்கை, மகிழ்ச்சியும், ஆனந்தமும், அதிசயமும் நிறைந்ததாக இருக்கிறது. சிறிய பொருள்கூட அவைகளை மிகவும் மகிழ்ச்சியாக இருக்க உதவி செய்கின்றன, சிறிய நிகழ்ச்சிகூட பேரானந்தத்திற்குக் கொண்டு செல்கின்றன. குழந்தைகள் தொடர்ந்து ஆச்சரியத்தில் இருக்கின்றன. ஒரு பூனை குறுக்கே சென்றாலும் அதைப் பார்த்து அதிசயப்படுகிறது. ஒவ்வொன்றும் அவர்களை அதிசயத்தில் ஆழ்த்துகிறது. அது அதனுடைய உள் உலகத்தில் வாழ்கிறது. அப்போது வெளியிலுள்ள அனைத்தும் பிரகாசமாகத் தென்படுகிறது. அதனுடைய கண்கள் மிகவும் தெளிவாக இருக்கின்றன. அதனுடைய பிரதிபலிப்பும் மிகச் சரியாக இருக்கிறது. இதுதான் ஞாபகமற்ற நிலை. இந்த நிலை மூன்றாவது நிலையாகும்.

**நான்காவது நிலை ஞாபகம் அல்லது மனத்தின் நிலையாகும்:** மனமற்ற நிலை என்பது 'நிர்வாண', மீண்டும் குழந்தைப் பருவத்திற்குச் செல்ல வேண்டுமென்றால் அந்த ஆரம்ப கள்ளங் கபடமற்ற அந்த நிலைக்குச் செல்ல வேண்டுமென்றால், பின்னோக்கி உள்ளே செல்ல வேண்டும். ஒவ்வொரு படியாக கீழே இறங்கிச் சென்று அந்த முதல் படியை அடைய வேண்டும். ஞாபக நிலையை ஞாபகமற்ற நிலைக்கு மாற்ற வேண்டும். **தியான முறைகள் அனைத்தும் மனத்தையும், எண்ணங்களையும் அழிப்பதற்காகவே அதாவது ஞாபக நிலையிலிருந்து ஞாபகமற்ற நிலைக்கு கீழே இறங்கி வருவதற்காகவே.**

1-ஆவது நிலை (கர்ம முத்திரா) செயல் நிலை.

2-ஆவது நிலை (ஞான முத்திரா) விஷயஞான நிலை.

3-ஆவது நிலை (சமய முத்திரா) சுத்தமான சமயம் என்ற நிலை.

4-ஆவது நிலை (மஹா முத்திரா) மிகப் பெரிய நிலை.

அதாவது பரவெளி நிலை (Space). இவை ஒவ்வொன்றும் ஒன்றுக்கொன்று சம்மந்தமுடையது.

**முதலாவது நிலை கர்ம முத்திரா** என்பது ஞாபகம் பற்றியது தான். ஒரு செயலைச் செய்ய வேண்டும் என்று நினைத்தால் அது ஞாபகத்தைத் தவிர வேறல்ல. உண்மையில் செயல் (projection) என்பது மனதின் கனவுதான். கர்ம முத்திரா என்பது வெறும் ஞாபகம்தான். நீங்கள் எப்பொழுது உங்கள் ஞாபகத்தை விடுகிறீர்களோ அப்பொழுது நீங்கள் செயலுக்கு அப்பால் செல்கிறீர்கள். பிறகு செயல்கள் இயல்பாகவே நடக்கின்றன.

மரங்கள் தாங்கள் வளர்வதற்கு முயற்சிகள் செய்வதில்லை. வளர்தல் அதன்மூலமாக நடக்கிறது. அதற்காக அது எந்த முயற்சியும் செய்வதில்லை. மலர்கள் தானே மலர்கின்றன, ஆறு தானே ஓடுகிறது, நட்சத்திரங்கள் தானே நகர்கின்றன. எந்த முயற்சியும் இவைகளில் இல்லை. செயல் தானே நடக்கிறது. அங்கு செய்பவர் என்று யாரும் இல்லை.

**இரண்டாவது நிலை ஞான முத்திரா:** ஞான முத்திரா அதாவது அறிந்துகொள்ளும் நிலை, நீங்கள் வெறுமனே கவனிக்கிறீர்கள். வெறுமனே அறிந்து கொள்கிறீர்கள். ஆனால் எதையும் மனத்தாலும், உடலாலும் செய்வதில்லை.

**மூன்றாவது நிலை சமய முத்திரா:** கொஞ்சம் கொஞ்சமாக அறிபவனும் மறைகிறான். ஏனென்றால் அங்கு அறிந்து கொள்வதற்கு ஒன்றுமில்லை. செயல் மறைகிறது. விஷயஞானம் மறைகிறது. செய்வதற்கும் ஒன்றுமில்லை, அறிந்துகொள்வதற்கும் ஒன்றுமில்லை. நீங்கள் மட்டும் சாதாரண நிலையில் இருக்கிறீர்கள். எல்லாம் மறைந்துவிட்டன. 'நீங்கள்' மட்டும் இருக்கிறீர்கள். நீங்கள் செய்பவனாகவும் இல்லை, அறிந்து கொள்பவனாகவுமில்லை.

**நான்காவது நிலை மஹா முத்திரா:** அதாவது எல்லையில்லாப் பரவெளி, நீங்களும் மறைந்துவிடுகிறீர்கள். நீங்கள் என்றால் உங்கள் மனம்தான், அங்கு ஒருவிதமான அமைதி.

**ஒரு நிகழ்வு:**

ஒரு பெண் ஒரு நாள் புகழ்பெற்ற ஓவியர் பிக்காஸோவை சந்தித்து அவரது ஓவியங்களைப் பற்றி புகழ்ந்துகொண்டிருந்தார். தொடர்ந்து பேசும்போது சொன்னார்: தன் நண்பரின் வீட்டில் பிக்காசோவின் புகைப்படத்தைப் பார்த்ததாகவும் அந்தப் படம் தத்ரூபமாக உயிரோடிருப்பது போல் இருந்ததால், தான் அதற்கு முத்தம் கொடுத்தேன் என்றார். பிக்காஸோ அந்தப் படம் திருப்பி முத்தம் கொடுத்ததா? என்றார். அப்பெண்மணி என்ன சொல்கிறீர்கள் படம் திருப்பி முத்தம் கொடுக்குமா? என்றார்.

ஒரு படம் அசலைப்போல் இருப்பதால் அது உண்மையாகிவிடாது. அது வெறும் தாள், இது பொய்தான், இதைத்தான் தந்திரா 'வியங்காரிக்கா' என்று அழைக்கிறது. உண்மைபோல் தெரியும் உண்மையற்ற நிலையை உண்மை யென்றே கூறியவர்களும் உண்டு. ஞாபகமற்ற நிலையை ஒரு 'குரு'வின் முன்னால்தான் தெரிந்துகொள்ளலாம். அல்லது தியானத்தில் உணர்ந்துகொள்ளலாம்.

மனநலம் குன்றியவர்களுக்கு அவர்களுடைய எண்ணங்களோ ஞாபகங்களோ ஒரு பெரும் சுமைகளாக மாறி தாங்களே அதிலிருந்து மீண்டு வர முடியாத நிலையில் உள்ள போது சிகிச்சை அளிக்கப்படுகிறது. மின்சார அதிர்ச்சி (Electric shock) மூலமாகவோ வேறு சில சிகிச்சை மூலமாகவோ அவர்களின் மூளையின் அலைவரிசைகளில் அதிர்ச்சி ஏற்படுத்தப் படுகிறது. சில விநாடிகள் நிலை குலைந்து குழம்பிப் போய்விடுகிறார்கள். அந்த நொடியில் அவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதே அவர்களிற்கு மறந்து போய் விடுகிறது. மீண்டும் சுய நினைவிற்கு வரும்போது அந்த எண்ணங்களை மீண்டும் அவர்கள் அடைவதில்லை. இந்த அதிர்ச்சி வைத்தியம் ஓரளவு உதவி செய்கிறது. இந்த மின்சார அதிர்ச்சிகள் உண்மையான செயலைச் செய்வதில்லை. அது ஒரு புகைப்படம் போலத்தான், உண்மை இல்லை.

'மனமற்ற நிலை'தான் உயர்வான நிலை, இதுதான் ஆன்மிக வளர்ச்சி. இதைத்தான் 'சகஸ்ரா' என்பது. (இந்தக் கட்டத்தில் ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரை மலர் தலையில் மலர்கிறது.) இதுதான் மேலான நிலை. இதற்கு மேல் எதுவுமே

இல்லை. இதுதான் 'நிர்வாண', இதைத்தான் 'சுமம் போனம்' (Summam Bonam) என்று புத்தர் அழைக்கிறார்.

வாழ்க்கையில் பல இலட்சம் கனவுகளைக் காண்கிறோம். கனவுகள் என்று தெரிந்தும் மீண்டும் மீண்டும் கனவுகளைக் காண்கிறோம். ஒவ்வொரு முறையும் கனவு காணும் நேரத்தில் உண்மை என்று நம்புகிறோம். அது உண்மைத் தோற்றமளிக் கிறது. இன்றிரவு மீண்டும் கனவு காணத்தான் போகிறீர்கள். மீண்டும் அந்தக் கணத்தில் உண்மை என்று நம்பத்தான் போகிறீர்கள். வழமைபோல் மீண்டும் காலையில் பொய் என்று உணர்கிறீர்கள். ஆனால் பிரக்ஞை அற்ற மனம் மீண்டும் உறக்கத்தில் கனவுகளை ஏற்படுத்துகிறது. அது வெறும் கற்பனைதான், தோற்றந்தான் என்று தெரிந்தும் மீண்டும் மீண்டும் அதற்குப் பலியாகிறீர்கள். ஏன் உறக்கத்தில் அந்தக் கனவுகளைக் காணும்போது கனவுகளிலேயே அதைப் பொய் என்று உணர முடியவில்லை? எது அப்படி உணரவிடாமல் தடுக்கிறது? கனவுகள் தான் என்று உணர்ந்தாலும் அவைகளில் அனுபவப்பட்டாலும் அது உண்மையில்லை என்று திரும்பத் திரும்ப உணர்ந்து கொண்டாலும் அனுபவப்பட்டாலும் அதைத் தவிர்க்க முடியவில்லை. உறுதியாக அவை உண்மையில்லை என்று நம்புகிறீர்கள்.

தந்திரா ஒரு புதிய முறையை அறிமுகப்படுத்துகிறது. நீங்கள் விழித்துக் கொண்டு இருக்கும்போது பகல் பொழுதில் இந்த உலகமே கனவு என்று எண்ணுங்கள், இசை கேட்கும் போது, படிக்கும்போது, வேலை செய்யும்போது, குடும்பம், உறவு, சகலதையும் கனவு என்று எண்ணுங்கள். விழிப்பு நிலையில் அப்படி நினைப்பது சுலபம். கனவு காணும்போது அப்படி நினைக்க முடிவதில்லை. ஏனெனில் தூங்கிக்கொண்டிருக் கிறீர்கள். உங்களது பிரக்ஞையான மனம் தூங்கிக்கொண்டிருக் கிறது. கடவுளும் கனவுதான், இவர் பேசுவதும் கனவுதான், மற்றும் இந்த மரங்கள், மலர்கள், பறவைகள் பாடுவது எல்லாமே கனவுதான் என்று நினைக்கமுடியும். இப்படித் தொடர்ந்து மூன்று மாதங்கள் நினையுங்கள். நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். ஒரு நாள் உங்கள் கனவுகளிலேயே அது கனவுதான் என்று விளங்கிக்கொள்வீர்கள்.

*பயிற்சியினால் உண்மையான மரம்கூடக் கனவாகத் தெரியும்போது கனவில் வரும் மரம் மாத்திரம் எப்படி உண்மையாகத் தெரியும்? தந்திரா என்ன சொல்கிறதென்றால் நீங்கள் உண்மையாகப் பார்க்கும் மரங்கூடக் கனவு தான், அது உண்மையில்லை.*

**அப்படியென்றால் தந்திரா எதை உண்மையானதென்று கூறுகிறது? 'எது' எப்பொழுதும் நிலையாக உள்ளதோ அதுதான் உண்மை என்று அது கூறுகிறது. எவைகளெல்லாம் வந்து, செல்கின்றனவோ, தோன்றி மறைகிறதோ அவைகளெல்லாம் உண்மையில்லை. தந்திராவின்படி பொய் என்பது இதுதான். தற்காலிகமாக இருப்பவை எல்லாம் உண்மையானது அல்ல என்றும், சாசுவதமாக இருப்பவை உண்மையான 'உண்மை' எனவும் கூறுகிறது.**

*மனிதர்களே ஒரு நீண்ட கனவுதான். வாழ்க்கை என்ற கனவு சில வருடங்கள் நீடிக்கலாம் அதாவது 70, 80, 90, 100 வருடங்கள் என்று. ஆனால் இந்தக் கால வேற்றுமை அவை களுடைய அடிப்படைத் தன்மையில் எந்த வேற்றுமையையும் ஏற்படுத்தவில்லை. ஒரு மணி நேரக் கனவும் 100 வருட வாழ்க்கையும் கனவு போலத்தான். மரங்கள் சில வருடங்களுக்கு முன்பு இருந்ததில்லை. அதைப்போல இன்னும் சில வருடங்களுக்குப் பிறகும் இருக்கப்போவதில்லை.*

*இந்தப் பூமியில் எத்தனை மக்கள் வாழ்ந்து மடிந்திருக் கிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியுமா? இப்போது அவர்களெல்லாம் எங்கே? இப்போது அவர்கள் இல்லை யென்றால், அது எந்த விதத்தில் வித்தியாசப்படுகிறது? அவர்கள் உயிரோடிருப்பதற்கும், இப்போது உயிரோடில்லாமல் இருப்பதற்கும் என்ன பெருத்த வேறுபாடு? எல்லாம் மறைந்துவிட்டன.* **எவைகளெல்லாம் தோன்றி மறைகிறதோ, அவைகள் எல்லாம் கனவுதான். தந்திரா வழங்கிய மிகச் சிறந்த முறை இதுதான் என்கிறார் சஹாறா.**

**இப்பொழுது வாழ்வே கனவு என்றால் இதில் மறுப்பதற்கோ, ஏற்றுக்கொள்வதற்கோ என்ன இருக்கிறது? எதுவுமில்லை. அதைப்பற்றிக் கவலைப்படுவதற்கு எதுவுமே இல்லை. நீங்கள் அதை உண்மையென்று நம்புவதால்தான்,**

**நீங்கள் மிகவும் கவலைப்படுகிறீர்கள், மிகவும் இறுக்கமாக இருக்கிறீர்கள். இதை ஆழ்ந்து புரிந்துகொள்ள வேண்டும்.**

நீங்கள் ஏழையாகவோ, பணக்காரராகவோ இருப்பதனால் அதில் (கனவில்) எந்த வேறுபாடும் இல்லை. அதைப்போல உங்கள் அழகிற்கும், அவலட்சணத்திற்கும் எந்த வேறுபாடும் இல்லை. நீங்கள் மதிக்கப்படுகிறீர்களோ அல்லது இழிவு படுத்தப்படுகிறீர்களோ அதிலும் எந்த வேற்றுமையும் இல்லை. இந்த உலகமே பொய், வாழ்க்கையே பொய், கனவு, மாயை என்று இருக்கும்போது நீங்கள் தேர்ந்தெடுப்பதற்கும், நிராகரிப்பதற்கும் என்ன இருக்கிறது? ஆகவே ஏற்றுக் கொள்வதையும், மறுப்பதையும் விட்டுவிடுங்கள். ஒருவன் எதிலும் மிகவும் ஈடுபடாமல், எதிலும் மன இறுக்கம் கொள்ளாமல் உங்கள் உண்மையை 'இருப்பு நிலையிலிருந்து' அகற்றாமல் வெறும் சுத்த உயிர்த் தன்மையாக இருந்து, தன்னை நிலைப்படுத்திக்கொண்டால் அதுதான் உண்மையான வாழ்க்கை.

நீங்கள் 'சம்காரா' அல்லது 'நிர்வாணா'வை ஏற்றுக் கொண்டாலும் சரி, நிராகரித்தாலும் சரி அது உங்களிடம் எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தாது. நீங்கள் எல்லாம் கனவுகள் தான் என்று தீர்க்கமாக அறிந்துகொண்டால் நீங்கள் இந்தக் கனவுலகில் எந்தவிதத் தொந்தரவோ, கவலையோ, இறுக்கமோ கொள்ளாமல் நிம்மதியாக வாழலாம். இதிலேதான் வாழ்க்கைத் தத்துவம் அடங்கியிருக்கிறது.

எதற்காக சஹாறா முனிவர் இவைகளை ஒரு அரசனிடம் எடுத்துச்சொல்ல வேண்டும். அரண்மனையும் ஒரு கனவுதான், சுடுகாடும் ஒரு கனவுதான். அழகிய அரசியும் ஒன்றேதான், தெருவில் பிச்சையெடுக்கும் பெண்ணும் ஒன்றேதான். இதில் என்ன வேற்றுமையைக் காண்கிறீர்கள்? என்பதைத்தான் அரசனுக்கு விளக்கினார். ஒரு பிச்சைக்காரன் கனவில் அரசனாக வாழ்ந்திருந்தால் அவன் காலையில் விழித்து எழுந்த பிறகு மகிழ்ச்சியாக இருக்கமுடியுமா? அதைப்போல ஒரு அரசன் பிச்சைக்காரனாகக் கனவில் இருந்தால் காலையில் துன்பத்தில் தான் இருப்பாரா? சஹாறா மேலும் விளக்குகிறார்: எனக் குள்ளேயும் கனவு எனக்கு வெளியிலும் கனவுதான், இந்தக்

கனவுகளில் எனக்கு எந்த வித்தியாசமும் தெரியவில்லை. நான் மனமற்ற நிலையில் இருக்கிறேன். மக்கள் என்னை மதித்தாலும், இகழ்ந்தாலும், ஞானியென்றாலும், கிறுக்கனென்றாலும், புத்தி பேதலித்தவன் என்று கருதினாலும் சரி எனக்கு எல்லாம் ஒன்றேதான்.

யாருடைய அபிப்பிராயமும், யாருடைய கருத்தும், யாருடைய தீர்மானமும் எதுவும் செய்யாது. வெற்றியோ, தோல்வியோ, போற்றலோ, தூற்றலோ, வாழ்வோ, சாவோ எல்லாம் ஒன்றேதான். இதுதான் வேற்றுமையற்ற நிலை என்பது. எல்லாவற்றையும் இழந்துவிட்டேன் ஒன்றைத் தவிர, அதுதான் என்னுடைய இயல்பான தன்மை, சுயதன்மை. சஹாரா நீங்கள் காணும் இந்த உலகம் ஒரு காலத்தில் இருந்ததில்லை. ஆனால் அது நிரந்தரமாக இருப்பதுபோல உங்களுக்குத் தோற்றமளிக்கிறது. எங்கிருந்தோதான் தோன்றியது, அதைப்போல அது எங்கேயோ மறைந்துவிடும். அலைகள் தோன்றி மறைவதுபோல இந்த உலகம் தோன்றி மறைகிறது. உங்களால் அந்த அலையைப் பிடிக்க முடியாது. அது ஒரு எண்ண அலையைப் போலத்தான் எந்த ஒழுங்குமுறையும் கிடையாது. நல்லது எது? கெட்டது எது? யாருக்கும் தெரியாது. யார் நான்? யார் மாயை? ஒருவருக்கும் தெரியாது. எது புண்ணியம்? எது பாவம்? எந்த ஒழுங்குமுறையுமில்லை, எதுவும் எந்த வித்தியாசத்திலும் இல்லை. உண்மை எது? உண்மையற்றது எது? என்று பார்க்காதீர்கள், அதைப் புரிந்துவிடுங்கள் என்று சஹாறா சொல்கிறார்.

எதிலும் உங்கள் மனதைக் கொண்டு செல்லாதீர்கள். அதை வெறுமனே பாருங்கள், கேளுங்கள், உணருங்கள், உங்களுடைய மனதை அதில் சேர்க்க வேண்டாம். எதிர்கொள்ளுங்கள், ஆனால் எண்ணங்களின் மூலமாக அல்ல, எந்த ஆராய்ச்சியோ, தர்க்கமோ தேவையில்லை. அமைதியாக எண்ணமற்று அணுகுங்கள். அதைப்பற்றி எதையும் எண்ண வேண்டாம். நீங்கள் ஒரு சிந்தனையாக மாறவேண்டாம். கனவும், கனவு காண்பவரும் மறைய அங்கு வெறும் மனமற்ற நிலை (No Mind)தான் இருக்கும். இந்த மனமற்ற நிலைதான் இந்தப் பிரபஞ்சத்தின் ஆரம்பநிலை.

உதலாக்கா தன் மகனிடம் “நீ அதைப்பற்றி கற்று வந்திருக்கிறாயா? அதைப் பற்றிக் கற்றிருந்தால் நீ எல்லா வற்றையும் கற்றவனாவாய், அதைப் பற்றிக் கற்க மறந்தால் எல்லாவற்றையும் மறந்தவனாவாய். ‘அந்த’ ஒன்றை அடைந்திருக்கிறாயா? என்று கேட்கிறார்.

மகன் ‘அதை’ப்பற்றி என்னுடைய குரு பேசியதே இல்லை. உதலாக் ‘அப்படியென்றால் நீ கற்று வந்தவை அனைத்தும் வெறும் குப்பைகள்.’ ஆகவே திரும்பிச் செல் என்றார். வரவேற்பு ஏற்பாடுகள் அனைத்தும் நிறுத்தப்பட்டன மகனைத் திருப்பி அனுப்பினார் தந்தை.

சுவத்கேது தன் குருவிடம் திரும்பிச் சென்று கேட்டார் “என்னுடைய தகப்பனார் கூறிய அந்த ‘அதை’ப்பற்றி நீங்கள் ஏன் எனக்குக் கற்பிக்கவில்லை? குரு கூறினார்: அந்த ‘அதை’ யாரும் கற்றுத் தர முடியாது. ஏனெனில் நான் அதைக் கற்றுக்கொள்ளவில்லை. நீதான் ‘அதை’க் கற்றுக்கொள்ள வேண்டும். ஒரு சரியான சூழ்நிலையை என்னால் அமைத்துக் கொடுக்கமுடியும் என்றார்.

**நிகழ்வு:**

இந்த ஆச்சிரமத்திலுள்ள சுமார் 400 மாடுகளைக் கூட்டிக்கொண்டு அந்த அடர்ந்த காட்டுக்குள் எவ்வளவு தூரம் உள்ளே செல்ல முடியுமோ அவ்வளவு தூரம் செல்லவும், அங்கே எந்த வேறு மனிதர்களும் இருக்கக்கூடாது. வேறு யாரும் வெளியிலிருந்து சுலபமாக உங்களை அடையக்கூடாது. இந்த 400 மாடுகள் 1000 மாடுகளாகப் பெருகிய பிறகுதான் திரும்பிவர வேண்டும். இதற்கு பல வருடங்கள் ஆகலாம். எந்த மனிதரையும் நீ பார்க்கக்கூடாது. உனது குடும்பம், உனது உற்றார், உறவினர்கள், நண்பர்கள் எல்லாம் இந்த மாடுகள் தான். நீ இந்த மாடுகளுடன்தான் உரையாட வேண்டும் என்று கூறி அவனை மாடுகளுடன் காட்டிற்கு அனுப்பினார்.

அதைப் போலவே சுவத்கேது அந்த 400 மாடுகளுடன் யாருமே தன்னைப் பார்க்க முடியாத அந்தக் காட்டில் பல ஆண்டுகள் வாழ்ந்தான். தனக்குத் தெரிந்த வேதங்களை ஓதினான். மாடுகளிற்கு அதைப்பற்றி என்ன கவலை?

அவைகளிற்குத் தேவை புற்றரை அவ்வளவுதான், வானவில்லைப் பற்றிப் பேசினான். அதைக் கேட்க அங்கு யாருமே இல்லை, மாடுகள் தொடர்ந்து மேய்ந்த வண்ணம் இருந்தன. மாடுகளுக்கும் வானவில்லிற்கும் என்ன சம்பந்தம்? ஏன் எதுவுமே இல்லை. பல வழிகளில் பேச முயன்றான் முடியவில்லை, களைப்படைந்து விட்டான். நாளடைவில் பேசுவதை நிறுத்திவிட்டான். வருடங்கள் பல ஓடிவிட்டன. பல விடயங்களை மறக்கத் தொடங்கிவிட்டான். தான் கற்றவை அனைத்தும் மறந்துவிட்டான். ஏன் தன்னையே மறந்து விட்டான்! தன்னைத் தொலைத்து விட்டான், தான் எங்கே இருக்கிறேன், ஏன் வந்தேன் எதுவும் ஞாபகத்தில் இல்லை. மாட்டின் எண்ணிக்கையை மறந்துவிட்டான். மாடுகளுடன் தான் ஏன் அங்கே இருக்கிறேன் என்பதுவும் புரியவில்லை. மாடுகளின் எண்ணிக்கை 1000 ஆகிப் பெருகிவிட்டது. கூட்டிப் பார்க்கும் கணக்கும் மறந்துவிட்டான். அவைகள் மாடுகள் தான் என்பதும் அவனுக்குத் தெரியவில்லை. முற்றும் முழுதாக வெறுமையான ஆளாக இருக்கிறான். மாடுகள் 1000 எண்ணிக்கையானதும் அவைகள் காட்டிலிருந்து ஆச்சிரமத்திற்கு நடக்கலாயின. சுவத்கேதுவிற்கு எதுவும் விளங்கவில்லை, எதுவுமே புரியாத நிலையில், எதுவுமே தெரியாத நிலையில், எதுவுமே அறியாத நிலையில், எங்கே செல்கிறேன் என்பதையும் உணர முடியாத நிலையில் தன்னை அறியாமலே அந்த மாடுகள் பின்னால் சென்றான். மாடுகள் திரும்பி வருவதை குரு கண்டார். குரு தன் சீடர்களுடன் ஆச்சிரமத்திற்கு வெளியே வந்து காத்து நின்றார். அதோ 1001 மாடுகள் வருகின்றன 'என்று' மகிழ்ச்சியாகக் குரு சொன்னார். சீடர்கள் இல்லை 1000 மாடுகள்தான் என்றனர். அதற்குக் குரு 'சுவத்கேதுவும் அவைகளுடன் வருகிறான்' என்றார். குரு 'அவன் மறைந்துவிட்டான் இப்போது அவன் இல்லை' என்றார்.

இதுதான் மனமற்ற நிலை. கீழைநாட்டின் ஆன்மிக இலக்கு இதுதான். நீங்கள் இல்லாத நிலை (வெகுளிநிலை), நீங்கள் நீங்களாக இருக்கும் நிலை. இந்த இறப்பைப் பற்றியும், வாழ்வைப் பற்றியும், பொய்யும் அகங்காரமும் மறையும் நிலையைப் பற்றியும், எது நிலையானதோ அந்த உண்மையை அறிந்துகொள்ளுதல், அறிந்து உணர்ந்துகொள்ளுதல் இவைகளை 'ஞானம்' என்று அழைக்கிறோம். இதைத்தான் சஹாறா 'தானாக

*இருத்தல்' (Self Being) என்றும் 'எண்ணத்துக்கும், மனதுக்கும் அப்பால் இருப்பது' என்றும் அழைக்கிறார்.*

**தந்திரா என்றால் விரிவடைதல் என்று அர்த்தம், அந்த நிலையில் அந்த முடிவான நிலையை நோக்கி விரிவடை கிறீர்கள், உங்களுடைய எல்லைகளும் அந்த உயிர்த்தன்மை யின் எல்லைகளும் வெவ்வேறாக இல்லை, அவைகள் ஒன்றாகி விடுகின்றன. இந்தப் பிரபஞ்சமும் நீங்களும் ஒன்றாகிவிட்டால் சொந்தவீட்டை அடைந்து விட்டீர்கள் என்று அர்த்தம். நீங்கள் எல்லாமாகிவிட்ட பிறகு நீங்கள் எல்லா வற்றிலும் கலந்து ஒன்றான பிறகு நீங்கள் இந்தப் பிரபஞ்சம் போல அவ்வளவு பரந்து இருக்கும்போது அதாவது உங்களிடம் எல்லாம் இருக்கும்போது இந்தப் பூமி உங்களுக்குள் தோன்றிப் பின் மறைவதும் நீங்கள் மலர்ந்து விரிவடைந்து இந்தப் பிரபஞ்சமாகிவிட்டால் உங்கள் சொந்த வீட்டை அடைந்து விட்டீர்கள். இதுதான் தந்திராவின் இலக்கு எனலாம்.**

**ஒரு கதை:**

**மோசஸ் கடவுளைச் சந்தித்தபோது சில செய்திகளை மக்களுக்கு எடுத்துச் சொல்லும்படி கடவுள் கட்டளையிட்டார். அதற்கு மோசஸ், ''ஐயா தயவு செய்து உங்கள் பெயரைச் சொல்லுங்கள், இந்தச் செய்தியை என்னிடம் கொடுத்தது யார் என்று மக்கள் கேட்பார்கள்'' என்றாராம். அதற்குக் கடவுள் ''நான் நானாக இருக்கிறேன்''** (I am that I am) / (I am my own person) **மக்களிடம் சென்று ''நான் நானாக இருப்பதுதான்'' அப்படிச் சொன்னதாகச் சொல்லவும். ''நான் நானாக இருப்பதிலிருந்துதான் அந்தச் செய்தி வந்தது என்று கூறவும்'' என்றார்.**

*கடவுளுக்கு எந்தப் பெயரும் கிடையாது. கடவுள் ஆணா? அல்லது பெண்ணா? அப்படி எதுவும் இல்லை. ஒன்றுமற்ற நிலை உயிர்த் தன்மையாக (Being) இயங்கிக்கொண்டே இருக்கிறது என்பதுதான் பொருளாகிறது. சூஃபிகளிடம் (Sufi) ஒரு புனித நூல் இருக்கிறது. அதன் பெயர் "நூல்கள் எல்லாம் அடங்கிய நூல்'' (The Book of the books) என்று பெயர், அந்நூலில் எந்த வார்த்தைகளும் இல்லை. உலகில் ஒரு வார்த்தைகூட எந்தவிதச் சொற்களோ, எழுத்தோ, வசனமோ*

இல்லாத மதநூல் இது ஒன்றுதான். வெறும் வெற்றுத் தாள்கள். அதைப் பல நூற்றாண்டுகளாக ஒரு மறை ஞானியிடமிருந்து அடுத்த ஞானிக்கு பொக்கிஷம்போல் கொடுக்கப்பட்டு வந்திருக்கிறது. கடைசியில் வந்த குரு அதை ஒரு சீடனிடம் கொடுக்க அது மிக்க மரியாதையுடன் பாதுகாக்கப்பட்டு வருகிறது. அதுதான் மத நூல்களிலேயே முடிவான நூல் என்று கருதப்படுகிறது. எந்த எழுத்தும் இல்லாத ஒரு மத நூல் இதுதான். இந்த நூல்கள் எல்லாம் அடங்கிய நூல் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. இதைப் படிக்க முடியுமா? இதை மேலை நாடுகளில் அச்சிட்டு வெளியிட முயற்சி செய்தார்கள். எந்த வெளியீட்டாளரும் வெளியிட முன்வரவில்லை. காரணம் அச்சடிக்க அதில் வார்த்தைகள் இல்லை. அது ஒரு வெறும் வெற்றுப் புத்தகம்தான்.

மனித மனம் வெள்ளைத் தாளில் கறுப்பு மையால் எழுதப்பட்ட வார்த்தைகளைத்தான் புரிந்துகொள்ளும், எண்ணங்களைத்தான் வெள்ளைத் தாளில் செய்திகளாக எழுதப்படுகிறது. எண்ணங்கள் எல்லாம் மறைந்த பிறகு நீங்கள் ‘நூல்கள் எல்லாம் அடங்கிய நூலாகிறீர்கள்’ - அதாவது ஒன்றும் அற்ற நிலை (Emptiness) அதுதான். தெய்விக நிலை என்கிறது அந்த மதம். தந்திராவும் ஒன்றுமற்ற அந்த நிலையை எல்லாம் கடந்த நிலையாகவே கொள்கிறது.



## அத்தியாயம் - 5

# உங்களுடைய உலகத்தின் மையம் நீங்கள்தான்!

**'புத்திக்கூர்மையுடன் இருங்கள்' - தந்திரா**

புத்திக்கூர்மை என்பது வாழ்க்கையோடு மிகவும் சம்பந்தப்பட்ட இயற்கையான தன்மை. எப்படி நெருப்பு இயல்பாகச் சுடுமோ, எப்படிக் காற்று வீசுமோ, எப்படி நீர் கீழ்நோக்கிச் செல்லுமோ அதைப் போலத்தான் வாழ்வும் புத்திக் கூர்மையை ஒட்டி நிற்கிறது. புத்திக்கூர்மை என்பது ஒருவர் தன் முயற்சியால் அடைந்ததில்லை. புத்திக்கூர்மையோடுதான் மனிதர்கள் பிறக்கிறார்கள். பறவைகள், மிருகங்கள், எல்லாம் அவைகளுக்குத் தேவையான அளவு புத்திக்கூர்மையோடுதான் தோன்றுகின்றன. ஏன் மரங்கள்கூட அதன் தன்மையில் புத்திக்கூர்மையோடுதான் இருக்கின்றன. இந்தப் பிரபஞ்சமே புத்திக்கூர்மையோடுதான் அமைந்திருக்கிறது. அந்த புத்திக் கூர்மை எல்லா இடத்திலேயும் பரவலாக மறைத்து வைக்கப் பட்ட நிலையில் உள்ளது. அதைப் பார்க்கும் கண்களைப் பெற்றால் அதை எங்கும் காணலாம்.

*'வாழ்வு' புத்திக்கூர்மை மயமாகவே இருக்கிறது. மனிதனைத் தவிர வேறு எங்கேயும் அறிவற்ற நிலை இல்லை. முட்டாள் தனமான பறவைகளைப் பார்த்திருக்கிறீர்களா? முட்டாள் தனமான மிருகங்கள் என்று கேள்விப்பட்டு இருக்கிறீர்களா? முட்டாள்தனமான மரங்கள் என்று அறிந்திருக்கிறீர்களா? ஆனால் மனிதருக்குத்தான் இந்த முட்டாள் தன்மைகள் நிகழ்கின்றன. மனிதருக்குள் மனிதருடைய புத்திக் கூர்மை அசுத்தப்பட்டிருக்கிறது, சிதைக்கப்பட்டிருக்கிறது.*

மனிதனை தனியாக, இயற்கையோடு, இயற்கையாக, விட்டுவிட்டால் அந்த இயற்கைத் தன்மை மனிதனது புத்திக்கூர்மைக்கு களமாகிவிடும். மனித வாழ்வில் மதவாதிகள், அரசியல்வாதிகள், அரசாங்கம், சட்டம், சமூகம் என்று எந்தக் குறுக்கீடும் செய்ய அவர்களை அல்லது அவைகளை அனுமதிக்காமல் விட்டால் எல்லாமே ஒழுங்காக நடைபெறும்.

மனிதர்கள் நாடும் தியானம் 'ஒரு மனநல வைத்தியம் தான்', தியானம் (Meditation) என்ற ஆங்கில வார்த்தையும் மருந்து (Medication) என்ற ஆங்கில வார்த்தையும் ஒரே பொருளில் இருந்துதான் தோன்றியுள்ளன போலும். உள்ளத்துக்கு Meditation போல உடலிற்கு Medication. அதாவது தியானத்திற்கு மருத்துவ குணம் உண்டு என்ற அர்த்தமாக இதை எடுத்துக்கொள்ளலாம் அல்லவா!

ஒவ்வொரு குழந்தையும் புத்திக்கூர்மையோடுதான் பிறக்கிறது. மிகத் திறந்த மனநிலையில் சுத்தமாகவிருக்கிறது. கற்பித்தல் என்ற பெயரில் பல வழிகளில் பயத்தை ஏற்படுத்துகிறோம். மற்றவர்களைப் பார்த்து நடிக்க அதற்குக் கற்றுக் கொடுக்கிறோம். அந்தப் பயமற்ற பிஞ்சுமனதில் பயத்தை ஏற்படுத்துகிறோம். குழந்தையின் இயல்பான புத்திக்கூர்மையை அழிக்கிறோம். மக்கள் மீது திணிக்கப்பட்ட புத்திக்கூர்மையின் மேல் மதவாதிகள், பூசாரிகள், பாதிரியார்கள், இமாம், ராபியா, அரசியல்வாதிகள், தலைவர்கள், வியாபாரிகள், விடுதலை இயக்கங்கள், சமூக அமைப்புக்கள் போன்றன சுலபமாக சவாரி செய்ய முடிகிறது. இதனால் இந்த உலகத்தை உண்மையாகப் பார்க்க முடிவதில்லை. பாடசாலை, கல்லூரி, பல்கலைக்கழகம் போன்றவைகளால் திணிக்கப்பட்ட கருத்துக்களோடுதான் இந்த உலகத்தை பார்க்கிறோம். பெற்றோர்களும், உறவினர்களும் 'நாங்கள் சொல்வதுபோல நட, கேள்விகள் எதுவும் கேட்காதே' என்று சிறுபிராயத்திலேயே அடக்கிவிடுகிறார்கள். எல்லாப் பக்கத்தாலும் புத்திக்கூர்மை மழுங்கடிக்கப்படுகிறது. சரித்திரப் பாடத்தை மனப்பாடம் செய்கிறீர்கள். மனிதர்கள் மனிதனிற்குச் செய்த முட்டாள் தனமான காரியங்களையும், கொடுமை களையும் அதில் அறிந்து கொள்கிறீர்கள். அத்தகைய கொடூரங்கள் செய்த மனிதர்களது புத்திக்கூர்மை என்ன வாயிற்று?

புத்திக்கூர்மை என்பது நீங்கள் உங்களையே நம்புவதுதான். புத்திக்கூர்மை என்பது தீரமிக்கது, புதுமையை நோக்கிச் செல்வது, அந்தக் கணத்தில் வாழ்வது, அது ஒருக்காலும் எதிர்காலத்தைப்பற்றிக் கவலைப்படாது. அது இறந்த காலத்தைப்பற்றி நினைப்பதே இல்லை, ஏனென்றால் இறந்தகாலம் என்பது முடிந்து போனது. எதிர்காலம் என்பது இன்னும் ஆரம்பிக்கவே இல்லை. எதிர்காலத்தைப் பற்றிய எண்ணம் நிகழ்காலத்தைத் தவறவிடும். இறந்தகால எண்ணம் நிகழ்காலத்தைத் தடுக்கும். இந்தக் கணத்தில் நிகழும் வாழ்வை முழுமையாக வாழ்வதிலும் கொண்டாடுவதிலும்தான் உள்ளது. அது 'தானே' வந்து உங்களை அடையும். அதற்காக நீங்கள் எதுவும் செய்யத் தேவையில்லை, நாளைய கொண்டாட்டம் எங்கிருந்து வருகிறது? இன்றைய கொண்டாட்டத்திலிருந்து தான் வருகிறது. இந்த இன்றைய இந்தக் கணநிமிட வாழ்க்கை யிலிருந்துதான் வளரவேண்டும். ஒரு புத்திக் கூர்மையுள்ளவர் சொர்க்கத்தைப் பற்றியும், நரகத்தைப்பற்றியும் கவலைப்பட மாட்டார், கடவுளைப் பற்றியும் எண்ணமாட்டார். புத்திக்கூர்மை யுள்ளவர் புத்திக்கூர்மையோடு இப்பொழுது இங்கே வாழ்ந்து கொண்டிருப்பார். கடவுள், சொர்க்கம், நிர்வாணா எல்லாம் தானே வந்து அப்படியானவரை அடையும்.

புத்திக்கூர்மை இயற்கையாகவே எதிர்க்கும் தன்மை படைத்தது. புத்திக்கூர்மை தனி மனிதனுக்குரியது. சமூகம் மக்களை பல நகல் பிரதிகளாக (Carbon copies) செய்து வைத்திருக்கிறது. அவர்களுடைய தனித்தன்மை அழிக்கப் படுகிறது. முட்டாள்தனமாக இருக்கத் தயாராக்கப்பட்டு இருக்கிறார்கள். ஒருவர் தன்னைத் தலைவராக மாற்ற அதற்கு முதற்படியாக அவர் மக்களை ஆமாம் போடுபவர்களாகவும், துதி பாடுபவர்களாகவும், கேள்வி கேளாதவர்களாகவும் இருக்கக் கூடிய மனதைக் கொண்டவர்களாக மாற்ற வேண்டும். அவர்களது புத்தித் திறனை அழிக்கவேண்டும், மக்களை உலுப்ப வேண்டும், பயத்தில் ஆழ்த்தவேண்டும், அவர்களது தைரியத்தை, தன்னம்பிக்கையை ஒழிக்கவேண்டும்.

புத்திக்கூர்மையோடு மக்களிருந்தால் தலைவரது முட்டாள்தனங்களை மக்கள் கண்டுபிடித்து விடுவார்கள். மக்களைப் பீதியில் வாழச்செய்தால் தலைவருக்குத் தலை

வணங்குவார்கள். தலைவருக்குத் தெரியாத காரணங்களை மக்கள் கூறி நியாயப்படுத்திக் கொள்வார்கள். அந்த மாயையை தலைவருக்குக் கவசமாக்கி மக்கள் சமர்ப்பித்துவிடுவார்கள்.

நீங்கள் புத்திக்கூர்மையோடிருந்தால் உங்களுடைய பிரச்சினையை நீங்களே தீர்த்துக்கொள்ளலாம். உங்களுடைய பிரச்சினைகளைவிட உங்களது புத்தித்திறன் மிகப் பெரியது. அது உங்களது வெகுமதி, ஒருவருடைய புத்தித்திறனை அழிக்க வேண்டுமென்றால் முதலில் பயத்தை ஆழமாக ஏற்படுத்த வேண்டும். இந்தப் பயத்தால்தான் போலிச் சாமியார்களிடம் போய் மக்கள் விழுகிறார்கள். தாங்கள் விழப்போகும் நரகக்குழியிலிருந்து சாமியார் காப்பாற்றுவார் என்று முழுமையாகச் சரணாகதி அடைவார்கள். போலிச்சாமியார்கள் இல்லாமல் இவர்களால் வாழவே முடியாது. போலிச் சாமியார்கள் தங்கள் பக்கம் மக்களை வைத்துக்கொள்ள தந்திரமாக எதிர்மறையானவைகளைக் (Negativism) கூறிக் கொள்வார்கள்.

பெற்றோர்கள் பிள்ளைகளைத் தங்கள் வசம் தங்களுக்கு ஏற்றாற்போல் வைத்திருக்க பல வழிகளில் பயம் ஊட்டு கிறார்கள். அதே நேரத்தில் பிள்ளையின் விழிப்புணர்வையும் மழுங்கடிக்கிறார்கள்.

**ஒரு கதை:**

இரண்டு நண்பர்கள் வேலையில்லாதிருந்தனர். அவர்களுக்கு ஒரு யோசனை தோன்றியது. இவர்களுள் ஒருவன் ஊருக்குள் சென்று வீடுகளுக்குக் கல் எறிவான். மூர்க்கத்தனமான முனியொன்று ஊரில் உலவுவதாக அவர்களே கதை பரப்பி விட்டார்கள். ஒருவன் நடுநிசியில் கல்லெறிய, அடுத்தவன் முனியை அடக்குவதற்கு தன்னிடம் கலை இருக்கிறதென்று பூசைகள் செய்தான். பூசைகள் செய்த பின்பு வீட்டிற்கு கல்லெறி இல்லை. கல்லெறிவதும், முனியை அகற்றுவதும் அவர்களது வேலையானது. வருமானம் அதிகரித்தது. வசூலில் இருவரும் பங்குபோட்டுக் கொண்டார்கள். எறிவதும் சீர்செய்வதும் அவர்கள்தான். மக்களின் பயத்தை தங்களது மூலதனமாகப் பாவித்துக்கொண்டார்கள். நாம் புத்திக் கூர்மையுடன் இந்தச் செயலை விளங்கிக்கொள்ள வேண்டும்.

நாளை நடப்பது யாருக்குத் தெரியும்? யாருக்கும் தெரியாத நாளை பற்றிய பாதுகாப்பு நினைப்பு எப்போதும் ஒருவித பயத்திலேயே வாழ்க்கையை நகர்த்தச் செய்கிறது. அந்தப் பயத்தை நீக்கவே முடியாது. ஒருவித உள்நடுக்கத்துடன் தான் நாளையை எதிர்பார்க்கிறீர்கள். அதனால் இந்தக் கணத்தையும் இன்றைய வாழ்க்கையையும் தவற விடுகிறீர்கள். இந்த நிமிடம், இந்தக் கணம், இப்போது நடக்கிற வாழ்க்கைதான் உண்மையானது.

இந்தச் சமூகம் ஏதோ ஒரு வகையில் ஏதோ காரணத் திற்காக மனிதனிற்குப் பெரிய தீங்கை ஏற்படுத்தியிருக்கிறது. உங்களை எப்பொழுதும் அடிமைத்தனத்திலும் ஒருவித பயத்திலும், பேராசையுடனும், திருப்தியற்ற நிலையிலும், போட்டியிடும் தன்மையிலும், அன்பற்ற நிலையிலும், எப்பொழுதும் கோபத்துடனும், வெறுப்போடும், கோழைத் தனத்திலும் வைத்திருக்கவே அது ஆசைப்படுகிறது. சமூகத்தின் அடையாளமான இந்த விஷய ஞானிகளால் இந்த உலகத்திற்கு அபாயம்தான்.

தற்போது அநேகமானோர் தங்களது ஆர்வத்திற்கும், ஆற்றலிற்கும் தொடர்பில்லாத வேலைகளில் இருக்கிறார்கள். இதுதான் உலகத்திலுள்ள பல பிரச்சனைகளிற்குக் காரணம். இந்த உலகத்திற்கு எல்லோரது சேவைகளும் தேவையாக உள்ளது. தற்போது பெரும்பாலானோர் தங்களது புத்திசாலித் தனத்திலும் திறமையிலும் இருக்கவில்லை. அதனால்தான் இந்த உலகம் முட்டாள்தனத்தில் இருக்கிறது.

பிரக்ஞையாக இருக்கும் மனிதர்கள் தங்கள் பதவிகளை, வேலைகளை சேவையாகச் செய்வார்கள். பதவியை, உத்தி யோகத்தை தங்களுடைய தகுதியாக்கிக்கொள்ள மாட்டார்கள். பதவியைத் தங்கள் தகுதியாக்குபவர்கள் பதவியில்லாத நிலையில் அல்லது இளைப்பாறியபின் ஏதோ ஒன்றை இழந்த நிலையில் வாழ்வார்கள். அவர்கள் தாங்களே சில வேலைகளை உண்டாக்கிக் கொள்வார்கள். அவர்களது கௌரவமே அதில்தான் தங்கியுள்ளது. சிலர் மன அழுத்தத்திற்கும் உள்ளாகிறார்கள். இத்தகையவர்கள் மனநல ஆலோசனை பெற்று தங்களை இலேசாக்கிக்கொள்ள வேண்டும்.

ஒருவர் தனது உண்மையை உணராது தொண்டு செய்ய முடியாது. இந்த சேவைகளில் குழப்பம், ஊழல் யாரால் ஏற்படுகிறது? தங்கள் உண்மையை உணராது தொண்டு செய்ய ஆரம்பிப்பதே இதற்குக் காரணம். இனம், மொழி, சாதி என்று பேதம் பார்க்கும் ஒருவர் புத்தரிடம் சென்று பிறருக்கு எவ்வாறு தொண்டு செய்வது என்று கேட்டார். புத்தர் எதுவும் கூறாமல் அமைதியாக இருந்தார். ஏன் எதுவும் கூறாமல் இருக்கிறீர்கள் என வினவியபோது புத்தர் நீங்கள் மகிழ்ச்சியாக இல்லாத போது எப்படி சேவை செய்ய முடியும்? உங்களிடம் இல்லாத ஒன்றை பிறரோடு எவ்வாறு பகிர்ந்து கொள்ள முடியும்? என்று கேட்டார். **தந்திரா 'நீங்கள் மகிழ்ச்சியாக இருங்கள், மகிழ்ச்சியாக்குவது யாருடைய வேலையும் இல்லை. ஒருவரது 'இருப்பே' பிறருக்கு உதவிதான். சேவை செய்யவேண்டும் என்று சேவை செய்யத் தேவையில்லை' என்று கூறுகிறது.**

**சேவை செய்வதற்காக பாதிக்கப்பட்டவர்கள் தேவையில்லை.**

**கருணையான பார்வைக்காகப் பிச்சைக்கரர்கள் தேவையில்லை.**

**உதவி செய்வதற்காக இழப்புகள் தேவையில்லை.**

**'ஒருவரது இருப்பே சேவையாகவும், கருணையாகவும், உதவியாகவும், அன்பாகவும் இருக்கவேண்டும், அவர் முழுமையால் நிரம்பி வழிந்தால் அது பிறரை அடையும்போது கொடையாகும்' என்கிறது தந்திரா.**

**உதாரணம்:** நாம் மரத்துக்கு அருகாமையில் அமர்ந்தால் நாம் மரத்துக்கு உதவி செய்கிறோம். மரத்தை விழிப்படையச் செய்துவிட்டோம். ஏனெனில் மரத்திற்கு உயிரும் உணர்வும் உண்டு. எந்தவித முயற்சியும் இல்லாத சேவை இதுவாகும். செடிகள், கொடிகள், மரங்களிற்கும் அன்பும் கருணையும் தேவை. இவையும் சேவைதான். ஒருவரிலிருந்து பரவும் நல்லெண்ணங்களும் மகிழ்ச்சியும் மரங்களுக்கு உணர்வூட்டும். அன்பாக நடத்தலும், நல்லெண்ணங்களை வெளியிடுதலும் கூட சேவைதான். எனது படைப்பான 'மறுபிறப்பு பற்றிய ஆச்சரியமான தகவல்கள்' என்ற நூலில் இதைப் பற்றிய

மேலதிக விவரம் உண்டு என்பதை இங்கு குறிப்பிட விரும்புகின்றேன்.

மற்றவர்களிற்கு ஏற்றாற்போல் நடிப்பதில் ஆபத்து இல்லை. ஆனால் உங்கள் உயிர்த்தன்மையை (being) மட்டும் உணர்ந்து செயல்புரிவதில் ஆபத்து உண்டு. உங்கள் சுய உணர்வில் (self - awareness) நீங்கள் இயங்கும்போது உங்கள் நிலைப்பாட்டால் சமூகத்திற்கும் உங்களுக்கும் ஒத்துப்போகாது. நீங்கள் தனிமையாக்கப்படுவீர்கள். ஆபத்துக்களாலும், கஷ்டங்களாலும், சூழப்பட்டவர்களிடம்தான் உண்மையான வாழ்க்கை நிகழ்கிறது. காரணம் சுயவிழிப்பு அங்கு அவசியமாகிறது. அதனால் சவால்களை எதிர்கொண்டு வாழ்கிறார்கள். எவர் ஒருவர் நியாயத்துடனும், மனித நேயத்துடனும், தீரத்துடனும், புதுமையுடனும், மிகுந்த தைரியத்துடனும் எதையும் சந்திக்கத் தயாராக உள்ளவர்களிடம்தான் வாழ்க்கை நிகழ்கிறது. பயம்காட்டிக் கொண்டு வாழ்பவர்களிடம் அது நிகழவே நிகழாது. வாழ்பவர் பயம் ஊட்டமாட்டார். தானும் வாழ்ந்து பிறரையும் வாழவைப்பார். பயம் ஊட்டுபவர் தானும் வாழாமல் தன்னுடன் சேர்ந்தவர்களையும் வாழ விடமாட்டார்.

உயிர்த்தன்மையை நம்புவது என்பது உங்களையே நீங்கள் நம்புவது, ஒருவர் தன்னைத்தானே நம்புவது ஆகும். அந்த நம்பிக்கை முழுமையானது. எவ்வித சந்தேகத்திற்கும் அப்பாற்பட்டது. நீங்கள் உங்களையே நம்பாவிட்டால் எப்படி நீங்கள் அடுத்தவரை நம்பமுடியும்? உங்களுக்கு மிக மிக அருகாமையில் இருப்பவர் உங்களுடைய குடும்பத்தாரே. உங்களையே நீங்கள் நம்பாவிட்டால் நீங்கள் எப்படி உங்களது மனைவியையோ, கணவரையோ, பிள்ளைகளையோ, பெற்றோர் களையோ நம்புவீர்கள்? நீங்கள் உங்களை முழுமையாக நம்பினால் அந்த 'நம்பிக்கை' உங்களை உயர்த்தும். நம்பிக்கை என்பது ஒரு உணர்வே, இது வேறென்றும் அல்ல.

**'எந்தச் செயலிலும் உங்கள் முழு உணர்வைக் கொண்டு வாருங்கள்' என்கிறார் சஹாறா.** திரும்பத் திரும்ப ஒரேவித தாலாட்டைக் கேட்பதால் சோம்பல் ஏற்பட்டு குழந்தைகள் விரைவில் தூங்குவதுபோல் நீங்கள் மந்திரங்களை திரும்பத் திரும்பக் கேட்டு சோர்வு ஏற்பட்டுத் தூங்கிவிடுகிறீர்கள்.

இவைகள் எல்லாம் சுய வசியம்தான். தூக்கமின்மையால் அவதிப்படுபவர்களிற்கு இந்த மந்திரங்கள் நன்றாக வேலை செய்யும். அல்லது ஏதாவது ஒன்றையே திரும்பத் திரும்பக் கேட்க அல்லது சொல்ல சோம்பல் ஏற்படுத்தித் தூங்கவைக்கும். இவைகளிற்கும் ஆன்மிகத்திற்கும் என்ன தொடர்பு? ஒன்றுமில்லை, இது மனஉளவியல் சம்பந்தப்பட்டது.

ஒரு செயலைப் பழக்கத்தால், பழக்கதோசத்தால் செய்தால் அதைப் படிப்படியாக நீக்க ஏன்? எதற்காக? என்ற கேள்விகளை நமக்குள் கேட்க, பழக்கதோசத்தால் நம்மை அறியாமல் செயல்படும் தன்மை மாறி முழு உணர்வோடு, பிரக்ஞையோடு செயல்படுதல் அதிகரிக்கும். உதாரணமாகச் சாப்பிடும்போது உணர்வோடு, பிரக்ஞையோடு சாப்பிடுவதில்லை, சாப்பிடும் போது பல்வேறு எண்ணங்களுடன் சாப்பிட்டு முடித்து விடுகிறோம். என்ன சாப்பிட்டோம்? என்பதே பல சந்தர்ப்பங் களில் தெரிவதில்லை. ஏன்? பிரக்ஞையோடு சாப்பிடவில்லை, ஈடுபாட்டுடன் உண்ணவில்லை, அனுபவித்து உணவை உட்கொள்ளவில்லை. சகலதும் இச்சையில் செயல்போலே நடந்து முடிகிறது. பழக்கத்தால் கை உணவுக்குள் செல்கிறது. என்னமோ யோசித்துக் கொண்டு என்ன செய்கிறோம்? எங்கே இருக்கிறோம்? என்ற எந்த உணர்வுமில்லாமல் உண்கிறோம். நம்மையறியாமல் தண்ணீர் குடிக்கிறோம். சகலதும் ஒரு Programme போல முடிவடைகிறது.

ஆண் - பெண் காதலிக்கும்போது உண்மையிலே 'காதலில்தான்' இருக்கிறீர்களா? அல்லது ஒரே பழக்கத்தால் அறியாமல் அப்படிச் செய்கிறீர்களா? காதலை மிகவும் பிரக்ஞையாகச் செய்தால் அது பிரார்த்தனையாக மாறும். கருணையும் உள்ளார்ந்த அன்பும் அங்கு நிலைபெறும். கணவன் மனைவியுறவில் கருணையோடும் உள்ளார்ந்த அன்போடும் நெருங்குகிறார்களா? கணவன் தன் சக்தியை வெளியேற்ற மனைவியின் உடலை விரும்புகிறார். மனைவி தான் அதற்கு உபயோகப்படுத்தப்படுவதை விரும்புகிறாள். கணவன் மனைவி இருவரும் ஒருவருக்கொருவர் மதிப்புக் கொடுப்பதில்லை, எந்நேரமும் அன்பாக இருப்பதில்லை. அதனால் இருவரும் ஒருவரையொருவர் உபயோகப்படுத்திக் கொள்ளவே நினைக் கிறார்கள். ''அன்பு கலந்த கருணை உடையவர்களாக

**இருந்தால் அப்பொழுது காதல் உறவு சிறந்த தியானமாகி விடும்' என்கிறார் சஹாறா.**

*சஹாறாவின் கருத்து மிகவும் வித்தியாசமானது. மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. ஒரு காரியத்தைக் கடமையாகச் செய்தால் அதில் அன்பு கலந்திருக்காது. காரணம், விரும்பிச் செய்வதில்லை. வாழ்வில் பல விசயங்களை இயந்திரத் தனமாக அதில் உங்கள் புத்திக்கூர்மையைக் கொண்டுவராமல் செய்கிறீர்கள் என்பது தெரியுமா? இயந்திரத்தனமான செயல்களிலும் கடமைக்காகச் செய்யும் செயல்களிலும் மகிழ்ச்சி ஏற்படாது. அறிவுக்கூர்மையுடன் வாழ்பவர்கள் தங்கள் வாழ்வில் ஒவ்வொரு கணத்தையும் கவித்தன்மையுடனும், அன்புடனும், மகிழ்ச்சியுடனும் வாழ்ந்துகொள்வார்கள். இது நம்முடைய வாழ்க்கை. நாம் இதில் கருணையோடில்லாவிட்டால், அன்புடனில்லாவிட்டால், வேறுயார் அதில் அன்பு செலுத்த முடியும். வாழ்க்கையைப் பொறுப்போடும், புத்திசாலித்தனத் தோடும், கருணையோடும் நடத்திச் சென்றால் உங்களை எல்லாம் வந்தடையும். கடவுளும் உங்களையடைவார். நீங்கள் நீங்களாக இருக்கும்போது கடவுள் உங்களிடம் நாடுகிறார். உங்களுடைய உலகத்தின் மையம் நீங்கள்தான். கடவுளைப் பற்றியோ, கடவுளின் தன்மையைப்பற்றியோ, மதத்தைப் பற்றியோ, கோவிலைப்பற்றியோ, சேர்ச்சைப்பற்றியோ, மசூதியைப் பற்றியோ எதிலும் அக்கறைகொள்ளத் தேவை யில்லை. அவைகள் அனைத்தும் உங்களை வந்தடையும்.*

**கருணையும் அன்புமில்லாமல் கடமைக்காக உதவி செய்யும்போது நமக்கு நாமே தீங்கு செய்கிறோம், அதைப் பெற்றுக்கொள்பவருக்கும் தீங்கு செய்கிறோம். அந்த உதவியைப் பெற்றவரிடமிருந்து நன்றியை எதிர்பார்க்கிறோம், பதில் செய்கைகளை எதிர்பார்க்கிறோம். 'நான் உனக்கு இதெல்லாம் செய்கிறேன், நீ பதிலுக்கு எனக்கு எதுவும் செய்யவில்லை' என்ற எதிர்பார்ப்பு ஒரு அருவருப் ்ான வியாபாரம். கருணை கலந்த அன்புடனான சேவை, செயல் ஆயிரம் மடங்காகப் பெருகி உங்களை அறியாமல் அவை பல விதத்தில் உங்களை வந்தடைகிறது. ஆனால் 'கடமை' அப்படித் திரும்பி வருவதில்லை.**

ஒரு தாய் தன் பிள்ளை மீது அன்பு செலுத்துகிறாள் என்றால் அவள் அந்த அன்பை உணர்ந்து செயல்படுகிறாள். எதைப் பற்றியும் கவலைப்படுவதில்லை. அது ஒரு ஒப்பந்த மில்லை. பிள்ளை எப்படி நடந்துகொண்டாலும் அவள் அன்பு பெருகிக்கொண்டேயிருக்கும். தான் செலுத்தும் அன்புமூலம் மகிழ்ச்சி அவளைச் சென்றடைகிறது.

கடமையாகச் செய்பவர்கள் அந்தக் கடமை மூலம் ஆதிக்கம் செய்கிறார்கள். இது அரசியல்தனமானது. இதற்குள் நிறைய எதிர்பார்ப்புகள் மறைந்திருக்கின்றன. இது ஆதிக்கம் செலுத்த வழியாகிறது. இதன் மூலம் காலை அமுக்கிவிடத் தொடங்கி விரைவில் கழுத்திற்கு வந்துவிடலாம். ஒருவர் அரசியல்வாதியாக, தலைவராக மாறுவதற்கு மக்களுக்குக் கடமையுடன் சேவை செய்ய முதலில் ஆரம்பித்து படிப்படியாக அவர்களது சுதந்திரத்தை உபயோகித்து தலை மீது ஏறி உட்கார்ந்து விடுவதுதான். ஒருவர் மக்கள் தலைவனாக காட்டிக்கொள்ள பொதுஜனக் குரலாக மாறுவது. இதுதான் 'பொறி.' இந்தப் பொறிகளெல்லாவற்றிலும் பின்னணியாக இருப்பது அகங்காரம். பார்வைக்கு அவர்கள் மிகவும் சாதுவாக சேவை செய்வதுபோல் தோன்றினாலும், அவர்கள் தங்கள் அகங்காரத்தின் வழியேதான் செல்வார்கள்.

**உதவி செய்யுங்கள் 'அன்பினால்' செய்யுங்கள். அன்பினால் உதவ உங்களிடம் சக்தி ஏற்பட்டுக்கொண்டே யிருக்கும். உங்களிடமிருக்கும் அன்பைப் பகிர்ந்துகொள்வ தற்கு உங்கள் அன்பைப் பெற்றவர்களிற்கு நீங்கள் நன்றி சொல்ல வேண்டும். காரணம், உங்கள் அன்பிற்கு அவர்கள் வடிகாலாகியிருக்கிறார்கள். நீங்கள் யாருக்கும் உதவி செய்தால் உங்கள் உதவியைப் பெற்றவர்களிற்கு நன்றியாக இருங்கள். காரணம், உங்கள் 'கருணைக்கு' அவர்கள் உங்களிற்கு வடிகாலாகியிருக்கிறார்கள். உங்கள் 'சக்தியை' அவர்கள் பகிர்ந்து கொண்டிருக்கிறார்கள். உங்களது அன்புச் சுமையை இறக்க அவர்கள் உங்களிற்கு உதவி செய்திருக் கிறார்கள். உங்களிடம் இருப்பதைப் பகிர்ந்துகொண்டதற்காக வும், பகிர்ந்து கொண்டிருப்பதற்காகவும் அவர்களிற்கு நன்றி செலுத்துங்கள்.**

## ஒரு கற்பனை நிகழ்ச்சி:

ஆசிரியர் மாணவர்களைப் பார்த்து 'நீங்கள் அடுத்த வகுப்புக்கு வரும்போது, நீங்கள் அந்த வாரம் என்ன சேவை செய்தீர்கள்' என்பதை வகுப்பிற்குச் சொல்ல வேண்டும். மறு வகுப்பு நாள் வந்தது.

ஆசிரியர் : (முதலாவதாக ஒரு மாணவரைப் பார்த்து) 'உன் சேவையைக் கூறு.'

மாணவன் : 'நான் ஒரு வயதான மூதாட்டிக்கு ரோட்டைக் கடக்க உதவி செய்தேன்.'

ஆசிரியர் : 'வயதானவர்களுக்கு எப்போதும் உதவி செய்யுங்கள். வயோதிபருக்கு உதவி செய்தல் பாராட்டுதற்கு உரியது.'

ஆசிரியர் : (மற்ற மாணவரைப் பார்த்து) 'நீ என்ன செய்தாய்?'

மாணவன் : நான் ஒரு வயோதிப மூதாட்டி ரோட்டின் மறுபக்கம் செல்ல உதவி செய்தேன்.

ஆசிரியர் : 'நல்லது' என்றார்.

ஆசிரியர் : (அடுத்தடுத்த மாணவர்களைக் கேட்டார்.)

மாணவர்கள் : அவர்களும் தாம் 'வயோதிப மூதாட்டிக்கு ரோட்டைக் கடக்க உதவி செய்தோம்' என்றனர்.

ஆசிரியர் : நீங்கள் 4 பேரும் 4 மூதாட்டியை எங்கு சந்தித்தீர்கள்?

மாணவர்கள் : 4 மூதாட்டி அல்ல, ஒரு மூதாட்டிக்குத்தான் உதவி செய்தோம்.

ஆசிரியர் : அந்த மூதாட்டி உங்களை மிகவும் பாராட்டினாரா?

மாணவர்கள் : தெருவால் நேராக நடந்து போன மூதாட்டியை ஏதாவது ஒரு சேவை செய்ய வேண்டும் என்பதற்காக அவர் மறுக்க மறுக்க வலுக் கட்டாயமாக இழுத்துக்கொண்டு போய் தெருவின் மறுபக்கம் விட்டோம். தான் போக வேண்டிய பக்கம் வேறு, நாங்கள் இழுத்துக் கொண்டு போய் விட்ட பக்கம் வேறு என்பதால் அந்த மூதாட்டிக்கு எங்களின்மேல் கடும் கோபம் என்றனர்.

சேவைக்கான சேவை சில வேளைகளில் இப்படித்தான் அமைந்து விடுகிறது என்பது என்னமோ உண்மைதான்.

**'அன்பு' என்று எல்லோரும் அழைப்பதற்கும் உண்மையான அன்பிற்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. அதன் அர்த்தத்தை உணராமலே அல்லது அன்பு என்பதை அனுபவப்படாமலே இந்த அழகான வார்த்தையை உபயோகிக்கிறார்கள். இந்த 'அன்பு' என்ற வார்த்தையை பிரக்ஞை அற்ற நிலையில் வெறுமனே உபயோகிக்கிறார்கள். இதேபோல் 'கடவுள்', 'பிரார்த்தனை' என்ற வார்த்தைகளையும் பிரக்ஞையற்று உபயோகிப்பதால் 'அகங்கார' உணர்வு ஏற்படுகிறது.** மனைவி வேறொரு ஆணுடன் சிரித்துப் பேசினால் கணவன் எப்படிப் பொறாமைப்பட முடியும்? கணவன் மகிழ்ச்சியல்லவா அடையவேண்டும். அவளுடைய மகிழ்ச்சிதானே கணவனுடைய மகிழ்ச்சி. எனவே மனைவியின் மகிழ்ச்சிக்கு எதிராக எப்படிப் பொறாமைப்பட முடியும்? அன்போடிருந்தால் 'பொறாமை' அங்கு தலைகாட்டாது. பொறாமையிருக்குமிடத்தில் 'அன்பு' இருக்காது. அன்போடு பொறாமையும் கலந்திருக்காது. பொறாமை 'அன்பின்' ஒரு பகுதி அல்ல. பொறாமை தன்னுடைமையின் ஒரு பகுதிதான்.

## உதாரணக் கதை:

கணவர் செய்தித்தாளை வாசித்தபடியே இருக்கிறார், மனைவியைத் திரும்பிப் பார்க்கவில்லை. மனைவி தான் இருக்க வேண்டிய இடத்தை புதினப்பத்திரிகை பிடித்துக் கொண்டதால் 'தான்' இருக்க வேண்டிய இடத்தில் அந்தச் செய்தித்தாள் இருப்பதாகக் கருதுகிறாள். மனைவி தொலைபேசியில் ஒரு

ஆணுடன் நீண்டநேரம் கதைக்கும்போது கணவன் அங்கே அவளுக்கு முன்னால் உட்கார்ந்திருக்கும்போது தன்னையல்லவா அவள் ஆக்கிரமித்துக்கொண்டிருக்க வேண்டும் என்று கணவன் எதிர்பார்த்து கோபம் அடைகிறார். உண்மையில் 'அன்புடன்' இருந்தால் மனைவி கணவனைத் தன் மகிழ்ச்சியாகவும் கணவன் மனைவியைத் தன் மகிழ்ச்சியாகவும் பார்ப்பார்களே தவிர ஒருவரையொருவர் தங்கள் உடைமையாக்கிக் கொள்ள மாட்டார்கள்.

மற்ற விடயங்களிலெல்லாம் விட்டுக் கொடுக்கும் தம்பதிகள் ஏன் இதில் மட்டும் மாறுபடுகிறார்கள்? மனைவி வேறு ஒரு ஆணுடன் பேசுவது தனக்கு மகிழ்ச்சிதான் என்று கணவனாலும், கணவன் வேறு ஒரு பெண்ணுடன் பேசுவது தனக்கு மகிழ்ச்சிதான் என்று மனைவியாலும் ஏன் எண்ண முடிவதில்லை? காரணம் அவர்கள் ஒருவரையொருவர் தங்கள் உடைமையாக நினைக்கிறார்கள். அவர்களிற்கு இடையில் 'அன்பு' பிரக்ஞை உணர்வோடு நிலவவில்லை. அதனால் 'ஆதிக்கம்' நுழைகிறது. ஏனென்றால் 'அவர்' மனைவிக்குச் சொந்தமான பொருளாகவும் மனைவி தன் மீது எப்போதும் தொங்கிக்கொண்டிருக்க வேண்டுமெனவும் கணவர் எதிர்பார்க்கிறார், இதுபோலவே மனைவியும். இங்கு இருவரும் ஒருவரை ஒருவர் காதலிக்கவில்லை. இங்கு இருவரும் பிரக்ஞையான அன்பால் பிணைக்கப்படவில்லை. இங்கு இருவரும் 'அகங்காரத்தை' காதலிக்கிறார்கள், இருவரும் 'அகங்காரத்தால்' பிணைக்கப்பட்டுள்ளார்கள்.

கணவன் மனைவி உண்மையான அன்புடன் இருந்தால் ஒருவரது மகிழ்ச்சியை மற்றவர் தனது மகிழ்ச்சியாக எடுத்துக்கொள்வர். உண்மையிலே அன்புடன் இருந்தால் தான் இந்த உணர்வு ஏற்படும். அன்புடனிருந்தால் கணவன் மனைவி ஒருவரையொருவர் தன் உடைமையாகக் கருதமாட்டார்கள். கணவன் மனைவிக்கிடையில் வரும் பிரச்சினைகள் தன்னுடைமை ஆதிக்கத்திலிருந்து ஆரம்பிக்கிறது. 'அன்பு' எப்போதும் முழுச் சுதந்திரத்தையே அளிக்கும். உண்மையான அன்பு மாத்திரம்தான் இதைக் கொடுக்கமுடியும். அன்பு இல்லையேல் 'ஆதிக்கம்'தான் அங்கு குடியிருக்கும், இந்த ஆதிக்கத்தின் மறுபக்கந்தான் 'அகங்காரமாகும்'. இங்கு

**ஒருவரையொருவர் காதலிக்கவில்லை. தங்கள் அகங்காரத்தைத் தான் காதலிக்கிறார்கள்.**

## அடக்குதல் என்றால் என்ன?

நீங்கள் வாழக்கூடாத வகையில் வாழ்வதுதான் 'அடக்குதல்' என்பதாகும். நீங்கள் வேறொருவராக இருப்பதே 'அடக்குதல்' ஆகும். நீங்கள் செய்ய விரும்பாத காரியத்தைச் செய்வதுதான் 'அடக்குதல்', நீங்கள் உங்களையே அழித்துக் கொள்வதுதான் அடக்குதல். **'அடக்கப்பட்ட வாழ்க்கையில் வாழாதீர்கள்' என்கிறது தந்திரா.**

வாழ்க்கை என்பது வெளிப்படுத்தலும், புதுமையை உண்டாக்குவதும், மகிழ்ச்சி நிறைந்ததும் தான். இயல்பாக வாழுங்கள். உங்களை நம்புங்கள். உங்களது உயிர்த்தன்மை உங்களை எங்கெல்லாம் அழைத்துச்செல்ல விரும்புகிறதோ அங்கெல்லாம் தயங்காமல் செல்லுங்கள். இயல்பாக வாழ்ந்தால் எதையும் இழக்க நேராது. பிறருக்காகவும், பிறர் போலவும் நடித்து போலித்தனமாக வாழ்ந்தால் இழப்பு அதிகம்.

இயல்பான இயற்கைத்தன்மைதான் உங்களுக்குள்ளே உள்ள கடவுள். இயற்கையாக இருப்பது என்பது உங்களுக்குள்ளே யுள்ள கடவுள்தன்மையாகும். இயற்கையின் இழுப்போடு ஒத்துச் செல்லுங்கள்.

சேற்றிலிருந்துதான் செந்தாமரை மலர வேண்டும்.

உடல் வழியாகத்தான் ஆன்மா வர வேண்டும்.

பாலுணர்வு மூலமாகத்தான் சமாதி நிலை ஏற்பட வேண்டும்.

பிரக்ஞைத் தன்மை உணவிலிருந்துதான் வளர வேண்டும். அதனால்தான் உணவை பிரம்மம் என்று அழைக்கிறார்கள். அதாவது உணவுதான் கடவுள் என்பதாகும்.

கடவுள் தர்க்கரீதியானவரா?

ஓய்வு - உடல் உழைப்பிலிருந்து,

அமைதி - உடல் வெளியேற்றுவதிலிருந்து,

இயற்கை - மாறுபட்ட தன்மையிலிருந்து இயங்குகிறது.

கடவுள் மாறுபட்ட தன்மையில்தான் வேலை செய்கிறார். தர்க்கத்திற்கு மிகமிக அப்பால் இருக்கிறார்.

நீங்கள் ஒரு பாதுகாப்பான வாழ்க்கையை அடைய நினைத்தால் முதலில் நீங்கள் ஒரு பாதுகாப்பற்ற வாழ்க்கையில் வாழ்ந்திருக்க வேண்டும். உயிருடன் வாழ நினைத்தால் இறப்பை நன்கு உணர்ந்திருக்க வேண்டும். உண்மையிலேயே உண்மையாக வாழ நினைத்தால் அபாயத்தைச் சந்திக்கத் தயாராக இருக்கவேண்டும். அன்புடன் இருப்பவரால்தான் கோபப்படவும் முடியும். கோபப்படுபவரால்தான் அன்பாக இருக்கவும் முடியும். இயற்கைத்தன்மை அப்படித்தான் அமைந்துள்ளது. இயற்கை மதத்திற்கு அப்பாற்பட்டது. கடவுள் இயற்கைத் தன்மையானவர். இயற்கைத்தன்மையும் கடவுளும் தர்க்கத்திற்கு அப்பாற்பட்டவை. **தந்திரா 'எதையும் வெளியிடும் தன்மையில் இருங்கள்' என்கிறது.** நீங்கள் துக்கமாகவும், கவலையோடுமிருந்தால் நீங்கள் உங்களைச் சுற்றியுள்ளவர் களையும் அதே நிலைக்குக் கொண்டுவந்து விடுவீர்கள். அதைப்போல **மகிழ்ச்சியாக நீங்களிருந்தால் உங்களால் ஒரு மகிழ்ச்சியான சமூகத்தை உண்டாக்க முடியும். ஒரு மகிழ்ச்சி நிறைந்த சூழ்நிலைதான் அந்த மகிழ்ச்சியை ஏற்படுத்த முடியும். நீங்கள் கொண்டாட்டத்திலிருந்தால்தான் மற்றவர்களையும் கொண்டாட்டத்தில் ஆழ்த்தமுடியும். உங்களுடைய மகிழ்ச்சி தான் உங்களுடைய உண்மையான மதம். அங்கேதான் உயிர்த்தன்மை இருக்கிறது.** அடக்குதல் உங்களை பொய்யான நிலையில்தான் வைத்திருக்கும். இந்த அடக்குதலால் கோபம், பேராசை, பாலுணர்வு போன்ற உணர்வுகள் அழியாது. அவைகள் அடிமனதில் ஆழமாகச் சென்று தேங்கிவிடும். அங்கேயிருந்து சந்தர்ப்பம் வரும்போது அபாயகரமாக வேலை செய்யும். அப்போது அவை மிக வலிமை நிறைந்தவையாக மாறுகின்றன.

உங்களுக்கு நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்பது உண்மையாகத் தெரிந்தால் நீங்கள் அதை உண்மையாகச் செய்வீர்கள். நீங்கள் உங்களுடைய குழப்பத்தில் என்ன

செய்கிறோம் என்று தெரியாவிட்டால் நீங்கள் அந்தச் செயலை எப்படி முழுமையாகச் செய்ய முடியும்? அப்பொழுது யாராவது வேறொருவர் அதை எப்படிச் செய்வதென்று போதித்தால் அதை உடனே பின்பற்ற ஆரம்பித்துவிடுவீர்கள். அப்பொழுது யார் வேண்டுமானாலும் உங்களுடைய தலைவராக முடியும். உங்களை யார் வேண்டுமானாலும் தங்களுடைய வாதத் திறமையால் உங்களைத் திருப்திப்படுத்த முடியும். அப்பொழுது நீங்கள் அவர்களிற்குப் பின்னால் செல்லத் தயாராகி விடுகிறீர்கள். இப்படி நீங்களும் உங்களுடைய முன்னோர்களும் பல தலைவர்களைப் பின்பற்றி வந்திருக்கிறீர்கள். அதாவது உங்களை நீங்களே அழித்தே வந்திருக்கிறீர்கள்.

**நீங்கள் வேறு யாரையும் பின்பற்றாமல்:**

**உங்களைப் பின்பற்றுங்கள்,**
**உங்கள் இயல்பைப் பின்பற்றுங்கள்,**
**உங்கள் நெகிழ்வைப் பின்பற்றுங்கள்,**
**உங்கள் உலகத்தின் மையம் நீங்கள்தான்.**

எனவே நீங்கள் பிரக்ஞையுடன் செயல்படுங்கள். வாழ்க்கை ஒவ்வொருவரிடமிருந்தும் அதிகமாக பிரக்ஞைத் தன்மையை எதிர்பார்க்கிறது, பொறுப்பையும், புரிந்து கொள்ளுதலையும், புத்திக்கூர்மையையும் எதிர்பார்க்கிறது. **'பிரக்ஞையுடனிருங்கள்' என்கிறது தந்திரா.** பிரக்ஞையுடன் வாழ, விழிப்புணர்வுடன் வாழ, புரிதலுடன் வாழ, புத்திக் கூர்மையுடன் வாழ ஒவ்வொருவரும் தங்கள் உலகத்தின் மையமாகிவிடுவார்கள், அப்போது வாழ்க்கை நீர்வீழ்ச்சிபோல் பாயத் தொடங்கும்.



## அத்தியாயம் - 6

# உடலை மதித்தலும் ஒரு தியானமே!

நம்முடைய உடல்தான் அஸ்திவாரம். நம்முடைய உடலுக்கு எதிராகச் செயற்படுவது என்பது நமது உடலை அழிப்பதாகும், நமக்கும் நமது உடலுக்குமிடையில் வேற்றுமையை உண்டுபண்ணுவது நமக்கு துன்பமயமான நரகத்தை உண்டுபண்ணுவதற்குச் சமம்தான். 'நாம் ஆரம்பத்தில் உடலாகத்தான் செயற்படுகின்றோம்.' நம்முடைய உடலைவிட மேலான நிலை என்பது நம்முடைய உடலுக்குப் பின்புதான் ஏற்படுகிறது. நம்முடைய உடலே 'அடிப்படை உண்மை' என சகாறா முனிவர் அரசனுக்குக் கூறுகிறார். நம்முடைய உடலுக்கு எதிராக நாம் செயற்படக்கூடாது. நமது உடலை மதிக்கவில்லை என்றால் நாம் உண்மைத் தொடர்பை இழக்கின்றோம் என்பதே அதன் அர்த்தம். நமது உடல்தான் 'கோவில்', நமது உடலை எப்படி நேசிக்க வேண்டும் என்பதையும் அதை எப்படி கருணையுடனும், அன்புடனும் நன்றியுணர்வோடும் நடத்தவேண்டும் என்பதையும் தந்திரா போதிக்கிறது. நமது உடல் மிகவும் அபூர்வமானது. இந்த உலகில் புரியாத பல புதிர்களில் மிகமிக சிக்கலானதும் மிகப்பெரிய புதிரும் நம் ஒவ்வொருவரது உடல்தான்.

இயற்கையின் அழகைப் பார்த்து வியக்கிறோம், சூரியோதயம், அஸ்தமனக் காட்சியைப் பார்த்து இரசிக்கிறோம், வண்ண மலர்களை கண்கொட்டாமல் பார்த்துப் பிரமிக்கிறோம். என்றைக்காவது நமது உடல் எவ்வளவு பெரிய அதிசயமென்று வியந்திருக்கிறோமா? இந்த உலகத்தில், இந்தப் பிரபஞ்சத்தில் உள்ள அற்புதங்களில் மிகச் சிறந்த அற்புதம் நம் உடல்தான்! உலக அதிசயங்களிலே முதலாவது அதிசயம்

**உடலின் செயற்பாட்டின் அடிப்படைத் தன்மையைக் கண்டு ஆச்சரியப்பட வேண்டும்.**

உங்கள் உடலுக்கு எதிராகவே போதிக்கப்பட்டு விட்டீர்கள், உடலின் செயற்பாட்டைக் கண்டும், உடலின் தோற்றத்தையும் கண்டும் நீங்கள் வியக்க வேண்டும் என்று உங்களுக்குக் கற்பிக்கப்படவில்லை. ஏனென்றால் உங்களுடல் உங்களுடனே இருக்கிறது. அதனால் மறந்து விடுகிறீர்கள். உங்களுடலுக்கு எதிரான கதைகள், உடலை வெறுத்த பேச்சுக்கள், உடலுக்கு எதிரான செயல் நடைமுறைகள் தினமும் அறிந்துகொண்டுதான் இருக்கின்றீர்கள். மலர்களையும், கடல் அலைகளையும், நிலாவையும், மலைகளையும் பார்த்து நீங்கள் வியக்க வேண்டுமென உங்களுக்குக் கற்பிக்கப்பட்டுள்ளது. மலர்களின் அழகை இரசித்தால் கவிஞன், ஓவியர், ஞானி என்றெல்லாம் உங்களைப் பார்ப்பவர்கள் நினைத்துக் கொள்வார்கள். நீ ஒரு பெண்ணை அல்லது ஆணை இரசித்தால் அது ஆபர்சமாம்! அசிங்கமாம்! அதை யாரும் பாராட்ட மாட்டார்கள்.

ஒரு மரத்தைத் தொட்டுத் தடவிக்கொடுத்தால் அதற்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது. இதையே ஒரு மனிதனிடம் ஒரு மனிதர் செய்தால் அது பாதிப்பாகிறது. **'உங்களுடைய உடலை முதலில் மதிக்க வேண்டும், அன்பு செலுத்த வேண்டும், மிகச் சிறந்த படைப்பு என்று கருத வேண்டும்' என தந்திரா கூறுகிறது. தந்திரா உடலுக்கு மேலாகச் சென்றாலும் அது உடலைவிட்டு அகலவில்லை. மற்றும் இந்தப் பூமியைத்தான் ஆதாரமாகக் கொண்டிருக்கிறது.** நாம் நம் உடலை அவமதிக்கிறபடியால் உடல் மீது குறைகூறி வெறுப்பாக இருக்கிறதாலும், உடலை பல வழிகளில் அடக்கியதாலும் உடல் புத்துணர்ச்சியில்லாமல் இருக்கிறது. துன்பத்திற்கு அடிப்படைக் காரணம் இதுதான். உடலிற்கு எதிராக இருந்தால் எப்படி ஊக்கமிக்கவர்களாக வாழமுடியும்?

மனிதன் ஏன் இறுக்கமில்லாமல் ஓய்வுத் தன்மையில் இருக்கக் கூடாது? தூங்கும் பூனையைப் பாருங்கள் எவ்வளவு எளிதாக ஓய்வெடுக்கிறது. மனிதன் ஏன் அப்படியாக ஓய்வெடுக்க முடிவதில்லை? பூனையின் அழகு அது

முழுமையாக ஓய்வெடுப்பதிலேயும் அதே சமயம் மிக ஜாக்கிரதையாகவும் விழிப்பாகவுமிருப்பதில்தான் இருக்கிறது. ஒரு மென்மையான ஒலிகூட அதை விழிக்கச் செய்துவிடும். அது எப்போதும் பாதுகாப்பாக தப்பிக்கக்கூடிய இடத்தில்தான் தூங்கும்.

**'ஒரு பூனை எப்படித் தூங்குகிறது என்றும், எப்படி முழுமையாக ஓய்வெடுக்கிறது என்றும், எப்படி அது எவ்வித இறுக்கமும் இல்லாமல் வாழ்கிறது' என்றும் மனிதன் அதனிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டும் என்று தந்திரா கூறுகிறது.** எல்லா மிருகங்களும் எவ்வித இறுக்கமும் இல்லாமல்தான் வாழ்கின்றன. ஆனால் மனிதன் தவறான வழியில் கற்பிக்கப்பட்டிருக்கிறான். மனிதன் மிருகங்களிட மிருந்து உண்மை நிலையைக் கற்றுக்கொள்ள வேண்டும். உங்களுடைய சிறு வயது முதற்கொண்டே நீங்கள் இறுக்கமாக இருக்கவே தயாரிக்கப்படுகிறீர்கள். பயத்தினால் சரியாகக்கூட மூச்சு விடுவதில்லை. பாலுணர்வு தவறானது என சிறு வயது முதலே போதிக்கப்பட்டதால் மூச்சைக்கூட உங்களை அறியாமலே மென்மையாக விடுகிறீர்கள்.

இங்கிலாந்தைச் சேர்ந்தவரும் பல நாடுகளிலுள்ள பல்கலைக் கழகங்களில் விரிவுரையாளராக இருந்த பேராசிரியர் கலாநிதி திருமதி சீலா கிற்சிங்கர் (Dr. Shila kitzinger Ph.D) அவர்கள் தனது ஆய்வு நூலான 'பெண்ணின் பாலியல் அனுபவம்' (Women Experience of Sex) என்ற நூலில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார். 'இந்த நூலிற்கு பல பெண்களைச் சந்தித்து உரையாடினேன், தங்கள் அனுபவங்களை சிலர் தயக்கத்துடன் பகிர்ந்துகொண்டனர். ஆனால் தங்கள் பெயர்களை வெளியிட வேண்டாம் என்று கேட்டுக் கொண்டனர். 'பாலியல்' பற்றிய கருத்துக்கள் வெளிப்படையாக வேண்டும், இது தவிர்க்கப் பட்டே வருகிறது. **மிக பிரதானமானது 'எமது உடல் பற்றிய அறிவு' என்கிறார் கலாநிதி சீலா கிற்சிங்கர் அவர்கள்.**

இவரது இந்நூலில் இந்துக்கள் மத்தியில் இடம்பெறும் ருது எய்திய சிறுமியின் பூப்புனித நீராட்டு நிகழ்வைப்பற்றி குறிப்பிடும்போது இலங்கையில் இந்துத் தமிழர்கள் மத்தியில் இடம்பெறும் இவ்வைபவத்தைப்பற்றி பின்வருமாறு குறிப்பிடு கிறார். 'பூப்படைந்த இந்து தமிழ் சிறுமியை சில தினங்களுக்குத்

தனிமைப்படுத்தி விசேஷ உணவு வழங்குகிறார்கள். பின்பு சமய சம்பிரதாய முறைப்படி நீராட்டி (Ritual bath) திருமணப் பெண்போல அலங்காரம் செய்து முதல் தடவையாக சேலை அணிந்து திருமண வீடுபோல் அலங்கரிக்கப்பட்ட அலங்கார மணவறையில் அமர வைக்கிறார்கள். உறவினர்களும் நண்பர் களும் சூழ்ந்து சமயச் சடங்குகள் செய்து அன்பளிப்புகள் வழங்குகிறார்கள். இந்தக் கொண்டாட்டம் மூலம் அச்சிறுமி தாய்மையடையக்கூடிய பருவம் அடைந்ததை தெரிவிப்பது மூலம் இச்சிறுமிக்கு ஒரு அந்தஸ்து வழங்கி கௌரவிக்கப் படுகிறாள். **அவள் தன் உடலைப்பற்றி அறிவதுடன் தன்னைப்பற்றிய ஒரு புதிய பார்வையையும் உளவியல் ரீதியாக பெற்றுக்கொள்கிறாள்.** மேலும் திருமதி சீலா கிற்சிங்கர் அவர்கள். இது ஒரு மத ரீதியான அங்கீகாரம் (Ritual Recognition) எனவும், இந்த வைபவத்தையும் திருமணத்தையும் 'சடங்கு' எனவும் அழைக்கிறார்கள்' என்கிறார்.

நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ, எப்படி இருக்க முடியுமோ அந்த நிபந்தனையற்ற சுதந்திரத்திற்கு தந்திரா வழி செய்கிறது. அது எந்த எல்லைகளையும் ஏற்படுத்துவதில்லை. **பாலுணர்வு பாவம் நிறைந்தது என்ற கருத்து மனிதர்களின் புத்திக்கூர்மையை மழுங்கடிக்கிறது. எவ்வித அடக்குதலும் இல்லாமல் அதனுடன் சுதந்திரமாக இயல்பாக ஒத்துப்போனால், எந்தவித சண்டையும் போடாமல் அதனுடன் இயைந்து சென்றால் உடல் உச்சத் தன்மையில் செயல்படும். மிகவும் சுறுசுறுப்பானவர்களாகவும், புத்திக்கூர்மையானவர்களாகவும், விழிப்புணர்வோடும் இருப்பீர்கள் எனத் தந்திரா கூறுகின்றது. உங்கள் உடலுடன் நட்பாக இருங்கள் என வற்புறுத்துகிறது.**

நீங்கள் உங்கள் உடலை முழுமையாகத் தொட்டிருக் கிறீர்களா? உங்கள் உடலின் உணர்வை முழுமையாக உணர்ந்திருக்கிறீர்களா? நீங்கள் உங்களுடைய 'உயிர்ச் சக்தியை' (Bio Energy) கால் முதல் தலை வரை முழுமையான சுதந்திரத்தில் இயங்கவைத்தால் நீங்கள் ஆறுபோல் தங்கு தடையின்றி ஓடுவீர்கள். **உங்கள் உடலுடன் எதிராகப் போரிட்டால் உடலை ஒரு பளுவாக உணருவீர்கள் என்பது தந்திராவின் கூற்று.** நீங்கள் உங்களின் உடலை முழுமையாக ஏற்றுக்கொண்டால் உங்கள் உடல் உங்களுக்கு இலேசாக

இருக்கும். ஆனால், நீங்கள் உங்களது உடலை ஏற்றுக்கொள்ள மாட்டீர்கள். காரணம், ஏதாவது குற்றம் குறை கண்டுபிடித்து குறை சொல்லிக் கொண்டே இருப்பீர்கள். நீங்கள் உங்களது உடலைப் போற்றியதுண்டா? உடல் மீது அன்பு செலுத்திய துண்டா? உங்களுடம்பை நீங்கள் ஏற்காவிட்டால் பிறர் எப்படி உங்கள் உடம்பை விரும்புவார்கள்? உங்களுடைய வெறுப்பான அதிர்வே பிறரைப் பின்னடையச் செய்துவிடும்.

யார் ஒருவன் தன்னை விரும்புகிறானோ அவனால்தான் அடுத்தவரையும் விரும்பமுடியும். முதலில் ஒருவர் தன்னைத் தான் விரும்ப வேண்டும். அந்த மையத்திலிருந்துதான் அடுத்தவரிடம் செலுத்தத் தேவையான அன்பு கிளம்ப வேண்டும். பொதுவாக நீங்கள் உங்களுடைய உடலை விரும்புவதேயில்லை. அதனுடைய தோற்றத்தை எவ்வளவு மாற்றமுடியுமோ அவ்வளவு மாற்றுகிறீர்கள். பறவைகளைப் பாருங்கள், அவை எதுவும் எந்த அழகுசாதன நிலையங்களிற்கும் சென்றதில்லை. அழகுசாதன நிபுணர்களின் ஆலோசனை பெற்றதில்லை. தங்களுடைய இயற்கையான அழகை அப்படியே ஏற்றுக்கொள்கின்றன. அப்படி ஏற்றுக்கொள்வதால் மட்டுமே அவைகள் அழகு நிறைந்ததாகக் காணப்படுகின்றன. நீங்கள் எப்பொழுது உங்களுடைய இயற்கையான அழகை ஏற்றுக் கொள்கிறீர்களோ அந்த நிமிடத்தில் இருந்தே அழகு மிகுந்தவராகக் காணப்படுவீர்கள். நீங்கள் எந்த அளவிற்கு உங்களை விரும்புகிறீர்களோ அந்தளவிற்கு அடுத்தவர்களும் உங்களை விரும்புவார்கள். நாம் நம்மையே விரும்பாததால் தான் நாமே அடுத்தவரை நோக்கி அவர்களது அன்புக்காக ஓடவேண்டிய நிலையிலிருக்கிறோம். நீங்கள் உங்களை ஏற்காவிட்டால் அடுத்தவர்கள் மட்டும் எப்படி உங்களை விரும்பமுடியும்?

மக்கள் புத்தரை நோக்கியும், யேசுவை நோக்கியும், நபிகள் நாயகத்தை நோக்கியும் செல்கிறார்கள், அம்மகான்கள் எல்லாம் தங்களையே விரும்புபவர்கள், தங்களை வெறுப்பவர்கள் அல்ல, யார் ஒருவர் தங்களுடைய இருத்தலில் தங்களுடைய உடலின் அழகில் பிரக்ஞையாக இருக்கிறார்களோ அவர்கள்தான் அதே அன்பு நிலையில் உள்ளவர்களால் ஈர்க்கப்பட்டு அதே அன்பு நிலையிலுள்ளவர்களை நாடிச் செல்வார்கள். தந்திரா போதிப்பது

'நீங்கள் முதலில் உங்கள் உடலை நேசியுங்கள். அதன் மீது அன்பு செலுத்துங்கள், அதைப் போற்றுங்கள், மற்றும் அதைக் காப்பாற்றுங்கள், அதனுடன் மிக நட்பாக இருங்கள். அப்பொழுது அது தன்னிடமுள்ள அற்புதங்களை உங்களுக்கு வெளியிடும்' என்பதுதான். 'தந்திரா' புலன் உணர்வுகளைப் பற்றிப் பேசுகிறது, புலன் வழியாகத்தான் நீங்கள் உண்மையை உணர முடியும் என்கிறது. அதாவது இந்த உலகத்தைச் சரியாகக் கேட்டால், இந்த உலகத்தைச் சரியாக நுகர்ந்தால், இந்த உலகத்தைச் சரியாகப் பார்த்தால் எங்கும் உண்மை இருப்பதை உணர்வீர்கள் என்பதேயாகும். இந்த உலகமே கோவில்தான். அடக்கி வைக்கப்பட்டுள்ள உங்கள் புலன்களையும் அதன் உணர்வுகளையும் இயல்பான நிலைகளில் வைக்க வேண்டும் என்று தந்திரா கூறுகிறது. ஒவ்வொன்றையும் முடிந்தவரை முழுமையாக ருசியுங்கள், முழுமையாகப் பாருங்கள், முழுமையாக நுகருங்கள், முழுமையாக அனுபவியுங்கள் என்று தந்திரா கூறுகிறது.

குழந்தைகளைப் பாருங்கள் ஏதாவதொன்றைப் பார்க்கும்போது அதை எப்படி முழுமையாகக் கவனிக்கிறது? விளையாட்டுப் பொம்மைகளுடன் விளையாடும்போது எப்படி அவைகளோடு ஐக்கியமாகின்றது? ஒன்றைப் பார்க்கும்போது குழந்தையே 'கண்களாகவும்', ஒன்றைக் கேட்கும்போது 'காதாகவும்', உண்ணும்போது 'நாக்காகவும்' மாறிவிடுகின்றது. உதாரணமாக ஆப்பிளைச் சாப்பிடும்போது எப்படி ஆர்வமாகத் தன் முழுச் சக்தியோடு ஆனந்தமாகச் சாப்பிடுகின்றது. ஒரு அழகிய பட்டாம்பூச்சியின் பின்னால் ஓடும்போது கடவுளே குறுக்கே வந்தாலும் அந்தக் குழந்தையின் ஓட்டத்தைத் தடுத்து நிறுத்தமுடியாது. அந்தளவிற்கு அதனுடன் ஒன்றிவிடுகின்றது. அப்பொழுது கடவுள்கூட அந்தக் குழந்தைக்குச் சாதாரணம்தான். அந்தக் குழந்தைக்கு அந்தளவிற்குப் பூரணமாக, முழுமையாக ஒன்றுதல் இருக்கிறது. கடற்கரையில் கிளிஞ்சல்கள் பொறுக்கும்போது வைரங்களைப் பொறுக்குவது போல அவ்வளவு ஆர்வமாக அவைகளுடன் முழுமையாக ஒன்றிப் போய்விடும். புலன்களெல்லாம் புத்துணர்ச்சியோடு இருக்கும் போது தடங்கலில்லாத, குறுக்கீடில்லாத முழுமையான ஈடுபாடு உண்டு.

அதே குழந்தை வளர்ந்து பெரியவரான பிறகு எதையும் இருண்ட கண்ணாடியின் வழியாகத்தான் உண்மையைப் பார்க்கிறது. எல்லாமே மங்கலாகத்தான் தெரிகிறது, எதையும் அனுபவிக்க முடிவதில்லை, ஈடுபாடில்லை, பாராட்டும் உள்ளமில்லை. உங்கள் புலன்களோடு முழுமையாக இருங்கள். ரொட்டியைத் தொடும்போது அதனுடைய மென்மையை உங்களுடைய முழுமையான உணர்விற்குக் கொண்டு வாருங்கள், உண்ணும்போது ருசித்து உண்ணுங்கள், எதைச் செய்தாலும் முழு உணர்வோடு ஈடுபடுங்கள், அதுவே பிரார்த்தனையாகட்டும், அப்போது நீங்கள் உங்களிடம் ஒரு புதிய பிரக்ஞைத் தன்மையை ஏற்படுத்திக்கொள்கிறீர்கள்.

ஒரு மரத்தைத் தொடும்போது உணர்வோடு தொடுங்கள், நீரைத் தொடும்போது அந்தத் தண்ணீரின் தன்மையை முழுமையாக உணருங்கள், ஒவ்வொரு நாளும் ஆயிரக் கணக்கான சந்தர்ப்பங்கள் இயற்கையாக ஏற்பட்டுக் கொண்டே இருக்கின்றது. குளிக்கும்போது அந்த நீரின் தன்மையை உடல் முழுவதும் உணருங்கள், தரையில் ஆடையின்றி ஒய்வாகப் படுத்து அந்தத் தரையை உணருங்கள், கடல் மணலில் படுத்து அந்த மணலை உணருங்கள், கடலின் ஓசையை, இசையை உன்னிப்பாகக் கேளுங்கள். இவ்வாறு ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் உபயோகித்துக் கொள்ளுங்கள். மறந்துபோன அந்தப் புலன்களின் மொழியைக் கற்றுக்கொள்ள முடியும். **புலன் உணர்வுகளோடு முழுமையாக இருக்கத்தான் தந்திரா மீண்டும் மீண்டும் வலியுறுத்துகிறது.**

ஐம்புலன்களுக்கான பயிற்சி நாம் உண்ணும் உணவில் எம்மை அறியாமலே உள்ளது. உணவைப் பார்க்கும்போது 'கண்', தொடும்போது 'மெய்', நுகரும்போது 'மூக்கு', உண்ணும்போது 'வாய்', பப்படத்தை உடைக்கும்போது ஏற்படும் சத்தம் போன்றவை 'செவி', இப்புலன்கள் எல்லாம் உணவினை உண்ணும்போது தொழிற்படுகின்றன.

மக்கள் 'பழக்கம்' என்பதிலிருந்து 'புலன்களை' விடுவிக்க வேண்டும். 'பழக்கங்கள்' என்பதிலேயே நிலைநிறுத்திக்கொள்ள வேண்டாம். காதல் செய்யும்போதெல்லாம் ஏதாவது புதுமையைப் புகுத்துங்கள். கணவன் மனைவி உறவில்

ஈடுபடுவதற்கு முன்பு இருவரும் சேர்ந்து ஆடுங்கள், கைகோர்த்துக்கொண்டு ஓடுங்கள், இருவரும் சேர்ந்து நீந்துங்கள், சற்றுப் புதுமையையும் இரசனையையும் ஏற்படுத்துங்கள், அன்பு செலுத்தப் புதிய வழிகளைத் தேடுங்கள். ஆனால் மக்கள் இதற்கெல்லாம் பயப்படுகிறார்கள்.

பழக்கத்தில் உங்களை இழந்துவிடாதீர்கள். உங்கள் தினசரி வாழ்விலும், கொண்டாட்டங்களிலும் வித்தியாசங்களையும், புதுமைகளையும் புகுத்துங்கள். எப்போதும் எதையும் புதுமையாகச் செய்யுங்கள், புதுமைகளைக் கண்டுபிடியுங்கள், ஒவ்வொன்றிலும் புதுமையைக் காணவும், உருவாக்கவும் முயலுங்கள். இவைகளுக்கு எல்லை என்று எதுவுமே கிடையாது. இதுவே உங்களது 'சாதனாவாக' இருக்கட்டும். ஒவ்வொரு நாளும் வாழ்க்கையில் எதிலும் முடிந்த அளவு புதிய முறைகளையும், புதியனவற்றையும், புதுமைகளையும் சேர்த்தால் வாழ்க்கை மிகவும் உற்சாகமாகவும் தீரம் நிறைந்ததாகவும் இருக்கும் என்று தந்திரா கூறுகின்றது. எப்பொழுதும் எதையாவது கற்றுக்கொள்வதில் ஆர்வமுடைய வராக இருக்க வேண்டும். (தனிப்பட்ட பிறரது வாழ்க்கை அல்ல) கற்றுக்கொள்ளல் இயற்கையாகவே நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. பரிச்சயமில்லாதவற்றையும், புரியாதவற்றையும் தெரிந்துகொள்ள வேண்டும். இந்த உந்துதல் உங்களைக் கூர்மையானவர்களாக்கும்.

ஒரு குழந்தை ஏழு வயதிற்குள் வாழ்க்கைக்கு வேண்டிய அனைத்திலும் சுமார் 50% கற்றுக்கொள்கிறது, ஒருவருடைய மனதின் சராசரி வயது 12 ஆகும். பெரும்பான்மையான மக்கள் மனது அத்துடன் நின்றுவிடுகிறது. அதனால்தான் இந்த உலகத்தில் நிறையக் குழந்தைத்தனமான செயல்களை வளர்ந்து வயதானவர்கள் செய்கிறார்கள். சில வேளைகளில் பொருத்த மற்ற செயல்களையும் செய்வார்கள். உதாரணமாக ஒருவரை அவமதித்துப் பாருங்கள், அவர் உடனே தனது 12 வயதிற்குக் கீழே இறங்கிவிடுவார், அந்த அளவிற்குக் குழந்தைத்தனமாக நடந்துகொள்வார் என்று நினைத்தே பார்த்திருக்கமாட்டீர்கள். மக்கள் பின்னோக்கிச் செல்ல எப்பொழுதும் தயாராகவே இருக்கிறார்கள். அவர்களது மனதின் வயது அவர்களுக்குள் மறைந்திருக்கிறது. ஒருவரது உடல் வயது முக்கியமில்லை.

**மனத்தளவில் ஒவ்வொருவரது வயதுதான் முக்கியம். பெரும்பான்மையானோர் தங்கள் மனதின் 12 வயதிற்குள்ளேயே தங்களுக்குள் இறந்து விடுகிறார்கள்.**

**ஒரு நிகழ்வு:**

*புத்த மடாலயம் ஒன்றிற்குச் சென்ற ஒருவர் அங்கு வயதான ஒருவரைச் சந்தித்தார். ஆர்வம் காரணமாக உங்கள் வயது என்னவென்று வினவினார். அதற்கு அந்த முதியவர் தனக்கு 3 வயது என்றார். ஆச்சரியப்பட்ட இவர் என்ன சொல்கிறீர்கள் என்றார். இங்கு வயதை இப்படித்தான் கணிக்கிறார்கள் அதாவது ஒருவருக்கு 'விழிப்புநிலை', 'தன்னுணர்வு', ஏற்பட்ட காலத்திலிருந்துதான் 'பிறந்ததாக'க் கணிக்கப்படுகிறது. 'எனக்கு என்னைப் பற்றிய புரிதல் ஏற்பட்டு 3 வருடங்கள் ஆகின்றன, பெற்றோருக்குப் பிள்ளையாகப் பிறந்து 80 வருடங்கள் ஆகின்றன' என்றார்.*

**எப்பொழுதும் புதியனவற்றைச் செய்யக் கற்றுக் கொள்ளுங்கள். மற்றும் பழைய பழக்க வழக்கங்களிலிருந்து எவ்வளவு விடுபட முடியுமோ அந்தளவிற்கு விடுபடுங்கள் என்று தந்திரா கூறுகிறது.** *மற்றவரைப் பார்த்து வாழ்தல், பிறரைப் பார்த்துச் செய்தல், மற்றவரது கார்பன் காப்பியாகச் செயற்பட்டால் புலனுணர்வுகள் மழுங்கிவிடும். நீங்கள் செய்யும் அனைத்திலும் உங்கள் ஈடுபாடு, தனித்துவம், உங்கள் விசேடத் தன்மை என்பவை இருக்கட்டும். உங்கள் பதிவுகள், அடையாளங்கள் மிளிரட்டும். பிறரது கார்பன் காப்பியாக இருக்காதீர்கள். தனித்துவம் உங்களுக்கே உரியது, அதில் உங்களது 'கையெழுத்து' இருக்கட்டும். காலம், இடம், சூழலை அனுசரித்து அவைகளுடன் சேர்ந்து செல்லுங்கள். இல்லாவிடில் சமயோசித புத்தியில்லாமல் கணத்துக்குக் கணம் வாழாமல், காலத்திற்கு ஒவ்வாத முறைகள், மரபுகள், வழக்கங்கள், சம்பிரதாயங்கள் என வாழ்க்கையைப் பாடமாக்கி விழிப்புணர்வு இல்லாமல் வாழ்வது போலாகிவிடும்.*

**தந்திரா விளக்குவது என்னவென்றால்**

**அ. அடக்கப்பட்ட உணர்வுகளை ஆசைகளை வெளியேற்றல்.**

**ஆ. புலன்களை புத்துயிர் பெறச் செய்தல்.**

**இ. விபரீதமான எண்ணங்கள் மனதில் ஊடுருவ விடாமல் தடுத்தல்.**

*விபரீதமான எண்ணங்களை மனதில் சேகரிக்காமல் அமைதி நிலையை நோக்கிச் செலுத்த வேண்டும். எப்பொழுதெல்லாம் முடிகிறதோ அப்பொழுதெல்லாம் அதற்கு ஒய்வு கொடுத்து சற்று ஒதுக்கி வைக்கவும் என தந்திரா கூறுகிறது. மனதிற்கு எப்படி ஒய்வு கொடுப்பது? மனதை எப்படி ஒதுக்கி வைப்பது? மனம் எப்பொழுதும் செயற்பட்டுக்கொண்டு தானே இருக்கிறது? போன்ற கேள்விகள் பொதுவானவைதான்.*

**தந்திரா வழிமுறை கூறுகின்றது**

*மனதை எண்ணங்களால் நிரப்புங்கள், என்ன என்ன எண்ணம் என்பது பற்றிக் கவலைப்பட வேண்டாம். வெறுமனே அதைக் கவனியுங்கள். கவனிப்பவராக மட்டுமே இருங்கள், அதனுடன் ஈடுபடாது இருங்கள். காலப்போக்கில் அந்த எண்ணங்கள் பலவீனமடைந்து அமைதியான இடைவெளி உண்டாவதை உணரலாம். காலப்போக்கில் எண்ணங்களிற் கிடையில் இடைவெளி பெரிதாகி இல்லாமல் மறைந்துவிடும். அந்த இடைவெளியை கவனிப்பவரும் மறைந்து விடுவார். அமைதி நிலவும். அதுதான் உண்மையான அமைதி நிலை. பின்பு முற்றிலும் மறைந்துவிடும் என்கிறது தந்திரா.*

**''எல்லாமே அதுதான், இதுவும் அதுவே, அதுவும் இதுவே, அதுவும் அதுதான்'' இந்தப் பிரபஞ்ச முழுமையைத்தான் 'அது' என்று தந்திரா கூறுகின்றது. சகாறா அந்த அரசனிடம் கூறுகிறார், 'அரண்மனையில் வசிப்பதும், மயானத்தில் வசிப்பதும் ஒன்றேதான். எல்லாமே அதுதான்.' நன்மை, தீமை, பாவி, ஞானி என்ற வேற்றுமை அர்த்தமில்லாதது. பாவத்திற்கும் ஞானத்தன்மைக்கும் எந்த வேறுபாடும் இல்லை. உண்மைத் தன்மையில் எந்த வேற்றுமையும் இல்லை என்பதைக் காணும் நிலை உங்களுக்கு வந்தால் பாவியாகவும், ஞானியாகவும் இருப்பது ஒன்றேதான் என்று தீர்க்கமாகப் புரிந்துகொள்வீர்கள். சஹாறா 'அது' இருக்கிறது என்றும் என்னால் சொல்ல முடியாது. 'அது' இல்லை என்றும் என்னால் சொல்ல**

முடியாது. அதை மறுக்கவும் அல்லது நிலைப்படுத்தவும் என்னால் முடியாது. அதை நான் இல்லை என்றும் அல்லது உண்டு என்றும் சொல்லவும் மாட்டேன். ஏனென்றால் இரண்டுமே மிகச் சிறியது. 'அது' இந்த இரண்டையும் விட மிகப் பெரியது, அதில் இந்த இரண்டும் இருக்கிறது, அவைகளைத் தாண்டியும் இருக்கிறது. கடவுள் இருக்கிறார் என்று சொல்பவர்கள் கடவுளைக் கீழே இறக்கிக் கொண்டு வருகிறார்கள். கடவுள் இல்லை என்று சொல்பவர்கள் நிச்சயமாக அவர்களிற்கு கடவுளைப் பற்றி எதுவுமே தெரியாது. இந்த இருவருமே ஓரே நிலையில் தான் இருக்கிறார்கள். ஒருவர் நிலைப்படுத்துகிறார் மற்றவர் அதை மறுக்கிறார். மறுப்பதும் நிலைப்படுத்துவதும் அதே மனம்தான், இரண்டுமே எண்ணம்தான். சஹாறா தொடர்ந்து மேலும் கூறுவதாவது, 'கடவுள் இருக்கிறார் என்று என்னால் சொல்ல முடியாது. ஆனால் அதை அடையக்கூடிய வழியை என்னால் காட்ட முடியும். நீங்கள் அதை அனுபவபூர்வமாகத்தான் உணர வேண்டும். 'அது' ஒரு அனுபவம்' என்றார்.

**ஒரு நிகழ்ச்சி:**

ஒரு சமயம் புத்தரிடம் ஒரு கண் தெரியாதவரை விவாதம் செய்ய அழைத்து வந்தனர். கண்தெரியாதவர் 'மக்கள் ஒளி இருக்கிறது என்கிறார்கள், நான் இல்லை என்று சொல்கிறேன் நான் 'கபோதி' என்கின்றனர், நான் அவர்களை 'கபோதி' என்கிறேன். ஏனெனில் அவர்கள் சொல்வது போல 'ஒளி' இருந்தால் அதை என்னிடம் வரச் சொல்லுங்கள், நான் அதைத் தடவிப் பார்க்க வேண்டும். அல்லது ருசி பார்க்க வேண்டும், அல்லது முகர்ந்து பார்க்க வேண்டும். அந்த ஒளியைக் கொண்டு ஒலியை எழுப்பினால் நான் கேட்க முடியுமா?' என்றார்.

**புத்தர்:** எனக்குத் தெரிந்த கண் வைத்தியர் இருக்கிறார். அவரிடம் உங்களை அனுப்புகிறேன். அவர் உங்களைக் குணப்படுத்துவார் என்றார்.

**கண் பார்வை இல்லாதவர்:** இதைப் பற்றி அறிய நான் உங்களிடம் வரவில்லை. உங்களிடம் தர்க்கம் செய்து நிரூபனம் பெற வந்திருக்கிறேன் என்றார்.

**புத்தர்:** இதுதான் என்னுடைய வாதம், இதுதான் என்னுடைய நிருபணம், அவர் மறுத்தபோதும் கண் வைத்தியரிடம் அழைத்துச் செல்லப்பட்டார், சில மாதங்கள் வைத்திய சிகிச்சைக்குப் பின் கண்பார்வை பெற்றார், நன்றாகப் பார்த்தார், ஒளியைப் பார்த்து பூரிப்படைந்தார், மகிழ்ச்சியினால் உந்தப்பட்டு புத்தரிடம் வந்து உங்கள் விவாதம் மிகச் சரியானதே என்றார்.

நான் உங்களிடம் எந்த விவாதமும் செய்யவில்லை. உங்களிடம் விவாதம் செய்தால் என் விவாதம் தோல்வியில்தான் முடியும். ஏனெனில் நிரூபிக்க முடியாத, ஆனால் அனுபவ பூர்வமாக உணரக்கூடிய விசயங்கள் இந்த உலகில் அதிகம் என்றார். அனுபவரீதியில் உணருவதற்கு விவாதம் தேவை யில்லை 'அனுபவம்' என்றும் உண்மையானது.

சஹாறா மேலும் அந்த அரசனிடம் கூறுகிறார், 'உண்மையைப் பற்றி மக்கள் தவறாகவே புரிந்து கொள்கிறார்கள். காரணம் அவர்கள் பல கோட்பாடுகள், பல அபிப்பிராயங்கள், பல கருத்துக்கள் என்று பலவற்றைச் சேகரித்து வைத்திருக்கிறார்கள். 'உண்மை' ஒரு நாளும் கோட்பாடுகள், தத்துவங்கள், அபிப்பிராயங்கள், கருத்துக்கள், வரைவிலக்கணங்கள், கொள்கைகள் என்று எதற்குள்ளும் உட்படாது. 'கடவுள்' ஒரு எண்ணம் இல்லை. 'கடவுள்' கடவுள் என்ற வார்த்தைக்குள் அடங்கவில்லை. அந்த முழுமை ஒரு உயிரோட்டமுள்ள அனுபவமே தவிர வேறல்ல.

என்னுடைய நிகழ்காலத் தன்மையை உற்றுக் கவனியுங்கள், மக்களின் அபிப்பிராயங்களை பற்றி எதுவும் நினைக்காதீர்கள், நல்லது, கெட்டது, பாவம், புண்ணியம், சரி, தவறு என்ற கண்ணோட்டத்தில் என்னைப் பார்க்காதீர்கள், என்னை வெறுமனே பாருங்கள். நீங்கள் உயிர்த் தன்மையையும், நிகழ்காலத்தையும் உணர்ந்தால்தான் தந்திராவின் யாத்திரையில் உங்களால் உங்களுக்குள்ளே ஆழமாகச் செல்லமுடியும் என்று அந்த அரசனுக்குப் போதிக்கிறார். மேலும் அவர், நீங்கள் கேள்வி கேட்டால் 'அதை' தவறவிடுவீர். 'உண்மையை' ஒருபோதும் கேள்வியாக மாற்ற முடியாது. எவைகளுக்குப் பதிலளிக்க முடியுமோ அதைத்தான் கேள்வியாக மாற்ற முடியும்.

**'உண்மை' என்பது அனுபவபூர்வமாக உணர்வது அதற்கு அதனிடம் அணுக வேண்டும்.**

ஒருவர் தன்னுடைய விஷய ஞானத்திலிருந்து விடுபட வேண்டும். விஷய ஞானம் விடுதலை கொடுக்காது. அது மிக ஆழத்தில் உங்களை அடிமைப்படுத்தும். விஷய ஞானத்தின் மூலம் அந்த உண்மையை ஒருபோதும் அடைய முடியாது. அறிந்த, சேகரித்த சகல விஷய ஞானங்களையும் முதலில் விடுங்கள், அப்படி விட்டால்தான் உங்களுடைய அறிதல் மிகவும் பூரணத்துவமாகும். அப்பொழுது அது உண்மையை, உண்மையாகப் பிரதிபலிக்கும்.

புத்தர், மகாவீரர், யேசு, நபிகள்நாயகம் அவர்களுக்குள் ஏதோ நிகழ்ந்திருக்கிறது. அவை அவர்களது சொந்த அனுபவங்கள், அவை பிறரது அனுபவங்கள் இல்லை. சொந்த அனுபவங்களைத்தான் கூறினார்கள். சேகரித்த விஷய ஞானங்களைக் கூறவில்லை, கேள்விப்பட்டதைக் கூறவில்லை. அவர்கள் அந்த அனுபவங்களாக மக்கள் முன் வந்தார்கள்.

மக்கள் ஒவ்வொருவருக்குள்ளும் புத்திக்கூர்மை மறைந் திருக்கிறது. வெளி அறிவை மிகவும் நம்புவதால் சொந்த அறிவுத் தன்மையை இழந்துவிடுகிறார்கள். புத்தி, அறிவு இவை இரண்டும் ஒரே அஸ்திவாரத்திலிருந்து கிளம்புகின்றன. புத்திபடைத்தவன் (Intelligence) அறிவுடையவராக இருக்க வேண்டிய அவசியமில்லை. அறிவற்றவன் மிகச்சிறந்த புத்திக்கூர்மை உடையவனாகவும், சுய சிந்தனை மிக்கவராகவும் இருப்பதைக் காணலாம். அறிவு படைத்தவரிடம் கடன் வாங்கப்பட்ட விஷய ஞானம்தான் இருக்கும். புத்திக்கூர்மை என்பது அவரவர் அவர்களுக்கே உரியது. சஹாறா சொல்கிறார் புத்திக்கூர்மையே தியானமாகும். புத்திக்கூர்மையே தியானமாக மாறவேண்டும். அந்தத் தியானத் தன்மையை வாழ்க்கையில் கொண்டுவர வேண்டும். **'உண்மையைப் புரிந்துகொள்ளுதலே தியானமாகும்.' அதை அனுபவ பூர்வமாக உணர வேண்டும். ஒருவர் அனுபவபூர்வமாக உணர்கிறேன் என்கிறபோது அவர் மலரத் தொடங்கிவிட்டார் என்பது பொருளாகிறது.**

■■

## அத்தியாயம் - 7

# உடலே அடிப்படை உண்மை

**'உடலே நம் அடிப்படை உண்மை,**
**உடலை விரோதமாகப் பார்க்காதே' - தந்திரா**

உடல் அற்புதமானது, உடல் மர்மமானதும்கூட. நாம் எமது சொந்த உடலைப் பார்த்து அதிசயப்படுவதில்லை. 'பூ'க்களைப் பார்த்துப் பிரமிக்கிறோம், மரத்தைப் பார்த்து அதிசயிக்கிறோம், மலைகளை நீண்ட நேரம் நின்று பார்க்கிறோம், சந்திரனை, நட்சத்திரக் கூட்டங்களை, சூரிய உதயம், சூரிய அஸ்தமனம் இவற்றை எல்லாம் பார்த்து இரசிக்க, அற்புதம் என்று கூற சொல்லித் தரப்பட்டிருக்கின்றது. ஆனால், எங்கள் சொந்த உடலை மதிக்க, சொந்த உடலைப் பாராட்ட, சொந்த உடல் அழகானது என்று கூற சொல்லித்தரப்படவில்லை. ஓர் ஆண் ஒரு பெண்ணைப் பாராட்ட முடியாது. ஒரு பெண் ஓர் ஆணைப் பாராட்ட முடியாது. ஒரு மரத்தை உற்றுப் பார்த்தால் கவிஞன் அல்லது கவிஞி அல்லது இயற்கை இரசிகர்கள் என்று கௌரவப் பெயர்கள் கிடைக்கிறது. ஓர் ஆணால் ஒரு பெண்ணை உற்றுப்பார்க்க முடியுமா? ஒரு பெண்ணால் ஓர் ஆணை உற்றுப்பார்க்க முடியுமா? என்ன நடக்கும் என நினைக்கின்றீர்கள்? போலீஸ் வந்து கைது செய்துகொண்டு போய்விடுவார்கள். எப்போது இருந்து இந்தத் தவறு ஆரம்பித்தது? எப்படி இந்தத் தவறு ஆரம்பித்தது?

### தந்திரா (Tantra) பற்றிப் பார்ப்போம்

இது மிகவும் புராதனக் கலை, திபெத் நாட்டில் இன்றும் உண்டு. தந்திரா உங்கள் உடலை மதிக்கவும், கௌரவிக்கவும், அன்பு செலுத்தவும் கூறுகின்றது. 'நீ' மிக அதிகளவு உயிர்ச் சக்தியை உணர்ந்திருக்கும்போதுதான் ஆனந்தம் கிடைக்கும்.

வாழ்வை ஆழமாய் உணர்ந்து வாழ்ந்தால்தான் ஆனந்தம் கிடைக்கும். அடக்கி வைக்கப்பட்டவைகளிலிருந்து உடலை விடுதலை செய்து தூய்மைப்படுத்து, உன் உடலில் சக்தி பாய்வதற்கு எல்லாத் தடைகளையும் எடுத்துவிடு. உன்னை இறுக்கமாக வைத்திருக்காதே. (எந்தத் தடையும் இல்லாத ஒரு மனிதனைக் காணவே முடியாது.) குழந்தையிலிருந்தே இறுக்கமாய் இருக்கும்படி செதுக்கப்பட்டுள்ளாய். நீ tension, stress, depression இவைகளிலிருந்து விடுதலையாகி வாழ உனக்கு 'யோகாவும், தந்திராவும்', 'பிரணாயாமமும்' (ஆழமான மூச்சுப்பயிற்சி) உதவுகிறது. சொல்லித் தருகிறது. தந்திரா எல்லைக் கோடுகளை வகுக்காமல் சுதந்திரம் அளித்திருக்கின்றது. முழுச் சுதந்திரமிருந்தால் எதுவும் சாத்தியமாகும் என்பதை தந்திரா புரிந்திருக்கிறது. ஒரு மனிதனால் நித்திரைகொள்ள முடிவதில்லை, புரண்டு புரண்டு பரிதவிக்கிறான், மனதில் பலவித தடைகளோடுதான் எதற்கெடுத்தாலும் ஈடுபடுகிறான், தன்னை தளர்த்தி இலகுவாக வைத்திருப்பதில்லை. சமூகம், வீடு, மதம் அவனை இறுக்கமாக்கிவிட்டது, பலவிதமான கதை களைக் கூறி, பயம்காட்டி, எதற்கெடுத்தாலும் பதற்றமும் மன அழுத்தமும்தான்.

**'உடலை நட்பாக வைத்திருக்க வேண்டும்'** என்கிறது **தந்திரா.** உன் உடலை நீ வெறுக்காதே, உன் உடலில் குற்றம் காணாதே. நீயே உன் உடலை நேசிக்காது, பாராட்டாது இருந்துகொண்டு பிறர் உன் உடலைப் பற்றிக் கூறினால் நீ கடுமையாகக் கோபப்படுகிறாய். கோபப்படும் முன் யோசித்துப் பார், நீ உன் உடல் மீது நேசம் வைத்ததே இல்லையே! பாராட்டாது இருந்துவிட்டு பிறர் மீது குற்றம் சொல்லாதே! நீ உன் உடம்பிற்கு விரோதமான எண்ணம் கொண்டாய், உன் உடலைப் பழித்தாய், இழிவுபடுத்தினாய். இந்த அதிர்வு பிறரை தூண்டிவிடும் அல்லவா? உன் எண்ண அலை அவ்வளவு சக்தி வாய்ந்தது. உன்னைக் காதலிப்பவரிடம் இலகுவாக வயப்படுகிறாய், நீ உன்னை விரும்புகிறபடியாலும் உன்னை நீ நேசிக்கிறபடியாலும்தான் அந்த அலை மற்றவரைச் சென்றடைகிறது. உங்களை அறியாமல் நடக்கும் விஷயம் இது. நம்மை நாம் நேசிக்க வேண்டும். அதிலிருந்து எல்லா வகையான நேசமும் எழும். ஆனால் உன்னை நீ வாசனைத் திரவியங்களின் நறுமணத்தினுள் ஒளித்துக்கொண்டாய். பலவிதமான உடை

களால் உன்னை மூடிக்கொள்கிறாய். உன்னிடம் நீயே இல்லை என நீ நினைக்கிறாய். அந்த முயற்சியால் செயற்கைத்தனமாகி விடுகிறாய். நீ அன்பால் உயிரோட்டம் அடைய வேண்டும். உன் அன்பான பார்வை, செயல்கள் உன்னை அழகுபடுத்தும். உன் அன்பான எண்ணம் உன்னைத் தூய்மைப்படுத்திக் கொண்டே உன்னை அழகாக வைத்திருக்கும். பறவைகள் அழகாக இருக்கின்றன. அழகற்ற பறவை, அசிங்கமான பறவை என்று எதையும் பார்த்ததுண்டா? அழகற்ற மானைப் பார்த்ததுண்டா? இவைகள் எந்த அழகுபடுத்தும் நிலையங் களுக்கும் சென்றதில்லை, நிபுணர்களிடம் ஆலோசனை பெற்றதுமில்லை, பறவைகள் மிருகங்கள் எப்படி அவைகள் தாங்கள் எப்படியோ, தங்களை அப்படியே ஏற்றுக்கொள் கின்றன. ஆனால் மனிதனால் தன்னைத் தானே ஏற்க முடியவில்லை.

நீ எப்படி இருக்கிறாயோ அப்படியே உன்னை ஏற்றுக்கொள், உன் மீது நேசம் கொள், நீ உன் மேல் நேசத்தோடிருந்தால் யாராலும் உன் மேல் நேசம்கொள்ளாமல் இருக்கவே முடியாது. உன்னை நீ அன்பாகப் பார், நீ உன்னை அழகானவர் என்று பார், நீ பிரத்தியேகமானவர், நீ தனித்துவ மானவர், மற்றவர்களிடமிருந்து வித்தியாசமானவர், வேறுபட்ட வர் என்பதை அறிவாய். உன் வித்தியாசம் மற்றவர்களிடம் இல்லையே! பறவைகள், மிருகங்கள் அப்படியே தங்கள் வித்தியாசங்களை அவைகள் ஏற்றுக்கொள்வதன் மூலம் தங்கள் மீது அழகைக் கொட்டிக்கொள்கின்றன. நீ உன்னை மனதால் தூய்மையாக ஒப்புக்கொண்ட மறுகணமே நீ உனக்கு அழகாகத் தெரிவாய். நீ உன்னை விரும்பத் தொடங்க, பிறர் உன்னை விரும்பத் தொடங்குவார்கள். உன் மீது உனக்கு வெறுப்பு, கோபம் இருந்தால், நீ உன்னை அசிங்கம் என்று நினைத்தால், இந்த எண்ண அதிர்வும் உன் தாழ்வுமனப்பான்மையும் மற்றவர்களைச் சென்றடைந்து உனக்குள் இருக்கும் இந்தக் கருத்து மற்றவர்களை உன்னருகே அண்மிக்கவிடாது உனக்குக் கிட்ட வரவிடாமல் தடுத்துவிடும்.

புத்தரிடம், இயேசுவிடம், ஏன் மக்கள் திரண்டு சென்றார்கள்? ஏனெனில் அவர்கள் தங்களை ஏற்றுக் கொண்டனர். அவர்கள் ஆழமான அன்பில் மிகவும் மகிழ்வாக

இருந்தார்கள். அவர்களது பேரானந்தம் மற்றவர்களை ஈர்த்தது. தந்திரா கூறுகிறது 'உன் உடலை மதி, உடல் மிகப் பெரும் இரகசியங்களை வெளியிடும்.' மேலும் தந்திரா ''புலன்களே உள்ளறியும் ஆற்றலின் கதவுகள்'' என்கிறது. கண்களை மூடித்தான் உள்ளூர உணரத் தேவையில்லை. கண்களைத் திறந்து பார்த்து உள்ளூர உணரும் நிலை உன்னதமானது. இந்தப் புலனறியும் செயல் எல்லா இடத்திலும் நிறைவாகப் பார்க்கச் செய்யும். மனிதன் அமைத்த ஆலயங்களில், மசூதிகளில், சேர்ச்சுக்களில், பன்சாலைகளில், சினாகோஜ்களில், குருத்துவாராவில்... கடவுளைத் தேடத் தேவையில்லை.



## அத்தியாயம் - 8

# உடலுக்குள் அரசியல்

உலக 'அரசியல்' நம் உடலுக்குள் நம்மை அறியாமலே நிகழ்கிறது. இடதுசாரி, வலதுசாரி அரசியலை உடல் நிகழ்த்திக்கொண்டேயிருக்கிறது. இடது பக்க மூளை ஆதிக்கம் வலதுபக்க மூளை ஆதிக்கம் உள்ள உலகம் இது, வலதுகை, வலதுகால் பாவனையாளர்கள் பெரும்பான்மையானவர்களாக வும், அவை பலமான பகுதியாகவும் அவர்களுக்கு இடது கை, கால் பகுதி பலவீனமான பகுதியாகவும் வித்தியாசப்படுகிறது. இடது கை, கால் பாவனையாளர்கள் சிறுபான்மையானவர்களாக வும் அவை சிலருக்கு பலமான பகுதியாகவும், அவர்களுக்கு வலது கை, கால் பகுதி பலவீனமாகவும் அமைகிறது. வலது பக்க பாவனையாளர்கள் பெரும்பான்மயினராகவும், இடது பக்க பாவனையாளர்கள் சிறுபான்மையினராகவும் உலகத்தில் உள்ளனர். அதேபோல வலதுசாரிகள் பெரும்பான்மையினராக வும் இடதுசாரிகள் சிறுபான்மையினராகவும் கொண்ட உலகம் இதுவாகும். அதாவது வலதுசாரிகள் பெரும்பான்மையினராக வும் இடதுசாரிகள் சிறுபான்மையினராகவும் இயற்கை அமைத்துவிட்டது. மூளை இரண்டு அரைவட்டப் பிரிவுகளாக உள்ளது. 'வலதுபக்க மூளை' கற்பனைவளம், புரிந்துகொள்ளல், உள்ளுணர்வு, ஆன்மிகம் போன்றவைகளையும் 'இடதுபக்க மூளை' கணக்கு கேள்விகள், அறிவியல், போன்றவைகளையும் உள்ளடக்குகிறது. எப்போதும் இந்த 'வலது', 'இடது' இரண்டும் நமக்குள் போராட்டத்தில் ஈடுபடுகின்றன. உலகின் அடிப்படை அரசியலே நமக்குள் நடக்கிறது. நம் உடல் நடத்தும் மிகப் பெரிய அரசியல் இது.

எங்கள் உடலின் இடுப்பிற்கு மேல்பகுதி உடையிலும், இடுப்பிற்குக் கீழ்ப்பகுதி உடையிலும் வித்தியாசப்படுகிறது.

இடது கையும் இடுப்பிற்குக் கீழ்ப் பகுதியும், கௌரவம் குறைந்த பகுதிகளாகவும், வலது கையும், இடுப்பிற்கு மேல்பகுதியும் உயர் மதிப்புள்ள பகுதிகளாகவும் பிரகடனப் படுத்தி எங்கள் உடலை நாம் பார்க்கின்றோம். 'பிரிவினை' நமக்குள்ளேயே ஆரம்பமாகிறது. இடுப்பிற்கு மேற்பகுதிக்கு வித்தியாசமான நிறத்தில் உடையும் இடுப்பிற்குக் கீழ்ப்பகுதிக்கு வித்தியாசமான நிறத்தில் உடையையும் அணிந்து பிரிவினையை வளர்த்துக் கொள்கிறோம். இந்த உடலின் உரிமையாளர்கள் நாம்தான். பெரும்பான்மையான 'வலது' தன் ஆதிக்கத்தால் சிறுபான்மையான 'இடதிற்கு' தன் அகங்காரத்தைக் காட்டிக் கொள்கிறது. இடது கை 'வலது' பக்க மூளையுடனும் வலது கை 'இடது' பக்க மூளையுடனும் இணைந்து வேலை செய்கின்றன.

**'இடதும், வலதும்' இணைந்து நம் உடலில் வேலை செய்து நம் உடலை ஐக்கியமாக்குகிறது. உடலை முன் உதாரணமாக எடுத்து அரசியலில் இடதுசாரிகளும், வலதுசாரிகளும் இணைந்து ஐக்கிய உலகத்தை உருவாக்க வேண்டும்.** இடது பக்க பாவனை உள்ளவர்கள் வலது பக்க மூளையின் ஆதிக்கத்திற்கு உட்பட்டவர்கள். எனவே அவர்களிற்கு உள்ளுணர்வு, கற்பனை, கவிதை, ஆன்மிகம் இயல்பாக இருக்கும். இடது கைப்பழக்கத்துக்கு நம் சமுதாயம் பெரிய அங்கீகாரம் வழங்காமல் சிறுபிள்ளையாக இருக்கும் போது வலதுகைப் பழக்கத்திற்கு வற்புறுத்துகின்றனர். இது கைகளைப் பற்றியதை விட உள்ளே நடக்கும் அரசியல் பற்றியதாகும். இடதுகைப் பழக்கம் உள்ளவர்கள் மீது தொடுக்கும் தாக்குதலாகும். அவர்கள் பெரும்பான்மையின ரானால் அடக்கப்படுகிறார்கள். சிறுபான்மை இடதுசாரிகளை பெரும்பான்மை வலதுசாரிகள் அழிக்கப் பார்க்கிறார்கள். தொழிலாளி தனது புரிந்துகொள்ளும் உள்ளுணர்வால் வேலை செய்பவன். தனது வலது பக்க மூளையால் உழைக்கிறான். முதலாளி என்றும் கணக்குப் பார்ப்பான், கேள்விகள், காரணங்கள் கேட்பான். எனவே அவன் தனது இடது பக்க மூளையால் வேலை செய்கிறான்.

பெண் பொதுவாக உள்ளுணர்வு கூடியவள், வலது பக்க மூளை அவளை இயக்குகிறது. ஆண் அதிகாரம் செலுத்துகிறார்,

கணக்குப்போடுவார். அதற்காக இடது பக்க மூளையையும் பிரயோகிக்கிறார். பொதுவாக வலது பக்க மூளையில் செயற்படும் பெண், தான் அதிகாரத்திலும், போராட்டத்திலும்; ஈடுபடும்போது ஆணைப்போல் இடதுபக்க மூளைக்குத் தாவுவதால் அவள் ஆணின் இயல்புகளைப் பிரதிபலிக்கிறாள். அதனால் இயல்பான பெண் அங்கு மறைகிறாள். ஆணுடன் போராட ஆணின் தந்திரங்களையே பெண் பிரயோகிக்க வேண்டி ஏற்படுகின்றது. காலப்போக்கில் அவர்களே எதிரி போலவே ஆகிவிடுகின்றனர். எதிரியை முறியடிக்கலாம், வெல்லலாம். நீங்களே உங்களுக்கு பெரிய எதிரியாகி விடக்கூடாது. நீங்கள் 'உங்களுக்குள்' தீர்க்கப்படாமல் வேறு எங்கேயும் தீர்க்கப்பட முடியாது. அரசியல் உங்களுக்குள் நடக்கிறது. காலப்போக்கில் இரண்டு வேறுபட்ட நபர்கள் மாதிரி நடந்துகொள்ளும் அபாயம் இங்கு இருக்கிறது. இரண்டு வித்தியாசமான மனம் செயல்படுகின்றது. ஒரு மனம் ஒரு மாதிரியும் இன்னொரு மனம் முந்தியதற்கு நேர்மாறான செயல்பாடுமாக இருக்கும். ஒருவருள் வித்தியாசமான இரு நபர்கள் ஒளிந்திருக்கிறார்கள். வலது பக்க, இடதுபக்க சண்டையைத் தீர்க்காமல் அமைதியாக ஆனந்தமாக வாழ முடியாது. மனதினுள்ளே நடக்கும் சண்டையின் விம்பமே எங்கள் செயற்பாடு. ஒரு பகுதி மூளை மறுபகுதி மூளையை ஜெயிக்கப் பார்க்கிறது. உலகம் முழுவதையும் ஜெயித்தாலும் உங்களுக்குள்ளிருக்கும் சொந்தப் பிரதேசம் ஜெயிக்கப்படாமல் கிடக்கும். பிரச்சினை உனக்குள் இருக்கிறது. உனக்குள் இருக்கும் ஆண் மனமும், பெண் மனமும் இணக்கம் காணாவிடில் ஆனந்தம் தூர விலகிவிடும்.

உறவுகள் ஆரம்பிக்கும்போது நிஜத்தோற்றம் மறைந் திருக்கும், நெருக்கமாகும்போது பதுங்கியிருந்த நிஜத்தோற்றம் வெளிவரத் தொடங்கும். நடிப்புத் தோற்றம் மறைய, மறைய ஆச்சரியங்கள், வெறுப்புக்கள், விரக்திகள், ஏமாற்றங்கள், ஒன்றன் பின் ஒன்றாக மனதில் மோதி உறவில் விரிசல் ஏற்படும். உறவுகள் அசிங்கமாக மாறுகிறது. மேற்கத்திய நாடுகளில் அதிகம் உறவில் மாட்டிக்கொள்ளாமல் ஓரினச்சேர்க்கை ஆண்களுக் கிடையிலோ, அல்லது பெண்களுக்கிடையிலோ தோன்றுவதற்கு இதுவே காரணமாகின்றது. சந்தர்ப்பங்களைத் தவறவிட்டவர் களும், ஆண் - பெண் ஒருவர் மீது ஒருவர் கொண்ட தப்பான

அபிப்பிராயத்தினாலும், ஒருவித அச்ச உணர்வு காரணமாகவும், சேர்ந்து வாழ ஏற்பட்ட தயக்கத்தினாலும் அதற்கு வடிகாலாக அமைந்ததே இத்தகைய உறவுகள் ஆகும். இத்தகையவர்கள் ஆண் பெண்ணிடமிருந்தும், பெண் ஆணிடமிருந்தும் தூர விலகியுள்ளனர். உளவியல் ரீதியாகப் பார்த்தால் சிறுபிராயத்தில் ஆண், பெண் இனத்தில் ஏற்பட்ட வெறுப்பு, சந்தேகம், பாதிப்பில்லாத இத்தகைய உறவுக்கு வழி அமைக்கிறது. அவர்களது மனப்போக்கு உட்பட எல்லாமே 'ஒரே மாதிரி யானவையாக' அமைகின்றன. அவர்கள் மத்தியில் கசப்புணர்வு இருக்காது, உறவில் சண்டை சச்சரவுகள் இருக்காது. மன உளவியல் ரீதியாக அவர்கள் மாற்றமடைய வேண்டும். இப்பூமி குழந்தைகள் நிரம்பிய உலகம் ஆகவேண்டும்.

உணர்வுகள் மதிக்கப்பட வேண்டும். விருப்பு வெறுப்புக்களை ஏனையோர் புரிந்துகொள்ள வேண்டும். ஒவ்வொருவரினதும் விருப்பு வெறுப்புக்கள் வித்தியாசமானவை. இவர்களும் சமூகத்தின் அங்கமே. இப்பூமியில் ஒவ்வொருவரும் தனித்துவமானவர்கள், தனித்துவம் ஆக்கிரமிப்புக்குள் ஆகக் கூடாது, இத்தகைய உறவுகள் மனித உறவுகள் தோன்றிய காலத்திலிருந்தே இருந்து வருகிறது. தற்போது பகிரங்கமாக வெளிப்படையாக பேசப்படுகிறது. பல மேற்குலக நாடுகளில் பெரும் சர்ச்சைக்கு மத்தியில் சட்டரீதியாக அங்கீகாரம் வழங்கி வருகிறது. இதை விமர்சனத்துக்கு அப்பால் அத்தகைய உறவை விரும்புபவர்களது உணர்வை மதிப்போமாக. பல துறைகளில் பிரபலமானவர்கள் தொலைக்காட்சிகளில் தங்கள் உறவைப் பற்றி கூறுகிறார்கள், விமர்சனமில்லாது எடுத்துக் கொள்வோமாக.

ஒஸ்கார் (Oscar) விருது உலகில் மிகவும் பிரபலமானது. அந்த ஒஸ்கர் ஓரினச்சேர்க்கைக்காக தண்டனைக்குள்ளானவர். தண்டனை வழங்கிய நாடு இன்று அத்தகைய உறவை சட்டரீதியாக ஏற்றுக்கொள்கிறது. மாற்றங்களுடன் உலகம் நகர்கின்றது. புரிந்துணர்வும், விழிப்புணர்வும் நிலைமைகளை மாற்றுகின்றன. புரிந்துணர்வும், விழிப்புணர்வும் வாழ்வின் அஸ்திவாரம் என்கிறது தந்திரா.

**'ஏற்றுக்கொள்' என்கிறது தந்திரா.** தந்திரா வித்தியாசங்கள், பேதங்கள், பிரிவினை, வேற்றுமை ஏற்றத்தாழ்வுகளுக்கு அப்பால்

செல்கிறது. தந்திரா வாழ்வை இலகுவாக்குகிறது. உணர்வு களுக்கு மதிப்பளிக்கிறது.

திருநங்கைகள் இன, மொழி, பிரதேச, சாதி, மத, பிரிவினை, வேற்றுமை வேறுபாடுகளிற்கு அப்பால் மனித நேயமிக்கவர்கள். ஆனால் இம்சைகளிற்கும், பாதிப்புகளிற்கும், மன உளைச்சல்களுக்கும் அதிகம் உள்ளாகுபவர்களும் இவர்கள்தான். உலகில் மன உளவியல் ரீதியாக அதிகம் பாதிப்புக்குள்ளானவர்கள். இவர்கள் பொதுமக்களைப் புரிந்து கொண்ட அளவிற்கு பொதுமக்கள் இவர்களைப் புரிந்துகொள்ள வில்லை.

**ஒரு நிகழ்வு:**

அமெரிக்க கறுப்பு இன மக்களின் உணர்வுகளை, பிரச்சினைகளை அனுபவரீதியாக உணர்ந்துகொள்ள, தெரிந்து கொள்ள வெள்ளை இன எழுத்தாளரன John Howard Griffin தன்னை மருத்துவத்தின் மூலம் கறுப்பு நிறம் கொண்டவராக தன் சருமத்தை மாற்றி - 1959 அக்டோபர் 28-இல் இருந்து 6 வாரம் கறுப்பு இனத்தவர் செறிந்து வாழும் நகரங்களில் அவர்களில் ஒருவராக வாழ்ந்தார். அந்த மக்களின் மன உளவியல் பிரச்சினைகளை அடிப்படைப் பிரச்சினைகளை நன்கு தெரிந்துகொண்டார். வெள்ளை நிறத்தவர்கள் அதிகம் வாழும் இடங்களில் அம்மக்களுடன் கலந்து பழகினார். அவமதிப்புக்கு, புறக்கணிப்புக்கு, உள்ளானார். சில இடங்களில் அறை வாடகைக்கு எடுக்க முடியாமல் சிரமப்பட்டார். கறுப்பு இனத்தின் உணர்வை, உளவியல் பிரச்சினை, அடிப்படைப் பிரச்சினைகளைப் புரிந்துகொண்டார். இதனால் அமெரிக்காவை வியக்கவைக்கும் அளவுக்கு இந்த வெள்ளைக்காரக் கறுப்பு மனிதனின் 'Black Like Me' என்ற நூல் வெளிவந்து விழிப் புணர்வைத் தூண்டியது. இந்த நூலை ஒரு சமூக அத்தாட்சிப் பத்திரம் (A social document) எனலாம். இன்று அமெரிக்காவில் நிலைமைகள் மாறிவிட்டன. இவ்வாறே திருநங்கைகளுடைய உணர்வுகளுக்கு மதிப்புக் கொடுத்து மாற்றங்கள் ஏற்பட வேண்டும்.

உலக வாழ்வின் பெரும் அடையாளங்களான கார், பங்களா, செல்வம், கௌரவம், அதிகாரம் இவை அனைத்தும்

இடப்பக்க மூளையின் பிரதி உபகாரங்கள். அவர்களின் சதா சிந்தனை இவற்றைப்பற்றித்தான். அவர்கள் பெரும்பாலும் வலது மூளைக்குச் செல்வதில்லை.

அமைதி, சாந்தம், ஆனந்தம் இவைகளின் சொந்தக்காரன் தான் வலதுபக்க மூளை. இவர்கள் பெரும்பாலும் ஒவ்வொரு கணமும் வாழ்பவர்கள், அமைதி, சாந்தம், ஆனந்தம் வயப்பட்ட வர்கள். பெரும்பாலும் வளர்ந்தவர்கள், பெரியவர்கள், வயதானவர்கள், பெற்றோர்கள் என்றும் இடது பக்கமூளை வழியாகச் சிந்தித்து பொருட்கள், வசதிகள், பணம் என உலகில் கிடைக்கக்கூடிய கவர்ச்சிகளை விரும்புவார்கள். இவர்கள் போன்றோர்கள் குழந்தைகளின் அறிவியல் கேள்விகளுக்குப் பதில்கூற முடியாமல் தந்திரமாகத் தங்கள் பக்கம் சார்ந்த பதில்களைக் கூறி இடதுபக்க மூளைக்கு மாற்றி விடுகின்றார்கள். குழந்தைக்கு காலப்போக்கில் அதன் நுண்ணிய அறிவு, உள்ளுணர்வு மறையத் தொடங்கி உலகில் வாழும் ஏனைய மனிதர்களில் ஒருவராகி விடுகின்றனர். பாடசாலையின் பாடப் புத்தகங்களைக் கற்று நிபுணனாகலாம், உலகில் மதிப்புமிக்கவ ராகலாம். அவனுள் அல்லது அவளுள் ஆனந்தம், அமைதி, நேசம், சாந்தம் எதுவுமே இல்லாத ஒரு சந்தைப் பொருளாக மாறி வாழ்வின் பெரும்பகுதி முடமாகின்றது.

**குழந்தைப் பருவத்திலிருந்தே 'முடமாக்கும்' வேலை தொடங்கிவிடுகிறது. அவர்கள் சாதாரணமாக உலகப் பெரும்பான்மையுடன் இணைகிறார்கள். பெரும்பான்மை யினரின் வாழ்வுதான் வாழ்வு என நம்ப வைக்கப்படுகின்றது. அதிலிருந்து வெளியேவர பெரும் 'உள்'மாற்றம் தேவை. திறமைசாலியாக இருக்கலாம். ஆனால் நிஜமான மனிதனாக இருக்கமுடியாது. சண்டை வேறு எங்கேயும் இல்லை, உனக்குள்ளே நடக்கிறது. உன் உள்சண்டையை தீர்க்கக் கூடியவர் நீ தான். வேறு யாருமல்ல. உன் உள் 'வலது', 'இடது' சண்டையைத் தீர்க்காவிடில் உனக்குள் இருக்கும் 'தேசத்தில்' நீ 'நேசமாக' வாழமுடியாது.**

*(உடலைப் பற்றிய தந்திராவின் அடிப்படை விளக்கத்தை மையப்படுத்தி புதிய பார்வையில் எழுதியுள்ளேன் – ஆசிரியர்)*



### அத்தியாயம் - 9

# ஆணின் பெண் தன்மை, பெண்ணின் ஆண் தன்மை

ஒவ்வொரு ஆணிடமும் பெண்மையின் 'பகுதி' உண்டு. ஒவ்வொரு பெண்ணிடமும் ஆணின் 'பகுதி' உண்டு. ஒவ்வொரு மனிதரும் இருபால் பண்புடையவர். ஆண்களிடம் பெண்ணின் தன்மை மேலோங்கியிருந்தால் அவர்கள் பெண்ணியல்பு உடையவர்களாகவும் பெண்களில் ஆண் தன்மை உள்ளவர்களாக இருப்பதற்குக் காரணம் அத்தன்மை மேலோங்கி இருப்பதால்தான். அடிப்படையில் ஆண் ஆக்கிரமிப்பாளராகவும் பெண் சரணாகதியடையும் இயல்புள்ளவராகவும் இருக் கிறார்கள்.

சில பெண்களிடம் ஆக்கிரமிப்பு அம்சம் கொஞ்சம் இருக்கும். அதனால் சில சமயங்களில் ஆக்கிரமிப்பவளாகவே ஆகிவிடுகிறாள், அதே சமயம் அவளிடம் அமைந்திருக்கும் பணியும் பண்பு பரிபூரணசரணாகதி அடைந்து ஆக்கிரமிப்பு அடங்கிவிடுவதற்கு தயாராக இருக்கும். அவளிற்கு ஆக்கிரமிப்பு, பணிவு என இரண்டு பக்கங்கள் இருக்கின்றன. இதே போலத்தான் ஆண் மகனும் ஆக்கிரமிப்பு எண்ணம் பொங்கியெழ பெண்ணைத் தன் காலடியில் போட்டு நசுக்கிவிட வேண்டுமென்று சில வேளைகளில் அசிங்கமான அவ்வெண்ணம் கொண்டவனாக இருந்தாலும் அவளிற்கு அடங்கிப்போய் விடுகின்றான். இவனிற்கும் ஆக்கிரமிப்பு, பணிவு என இரண்டு பக்கங்கள் இருக்கின்றன.

இந்தப் பிரபஞ்ச அமைப்பில் நேர் நிலை, எதிர்நிலை இல்லாமல் எதுவும் முழுமைபெற முடியாது. நேர் மின்னேற்றம், எதிர் மின்னேற்றத்துடன் சேர்ந்தால்தான் மின்சார இயக்கம்

பெறமுடியும். மனித வாழ்விலும் ஆண், பெண் இரு பகுதியினரும் சேர்ந்தால்தான் முழுமை பெறமுடியும். ஆணும் - பெண்ணும், ஆண்மையும் - பெண்மையும், ஆக்கிரமிப்பும் - சரணாகதியும், போரும் - அமைதியும் ஒன்றிணையும் ஒருமைப்பாட்டில்தான் வாழ்வு முழுமை பெறுகிறது. மனிதனின் விழிப்பு நிலை அதிகரிக்க தந்திரா உதவுகிறது.

**'ஓர் ஆண் என்பவன் முற்றிலும் ஆணாகவும், பெண் என்பவள் முற்றிலும் பெண்ணாகவும் இல்லை' என்கிறது தந்திரா.** ஓர் ஆண் எப்போதும் பெண் தன்மையும் ஆண் தன்மையும் கலந்தே இருக்கிறான். அதே போல ஒரு பெண் எப்போதும் ஆண் தன்மையும் பெண் தன்மையும் கலந்தே இருக்கிறாள். ஒவ்வொருவருக்குள்ளும் உலகில் முதல் ஆணான ஆதாமும் (Adam), முதல் பெண்ணான ஏவாளும் (Eva) கலந்து இருக்கிறார்கள். நாம் ஆதாம் - ஏவாளாகவே கலந்திருக்கிறோம். உண்மையில் யாரும் தனித்து ஆதாமாகவோ அல்லது தனித்து ஏவாளாகவோ இருக்கவில்லை. ஆண் ஆணாகவோ அல்லது பெண் பெண்ணாகவோ இல்லை, இரண்டும் கலந்த ஒரு கலவையாகத்தான் இருக்கிறார்கள்.

மனநல மருத்துவம் இப்போது இதுபற்றிக் கூறுகின்றது. இருவேறு மாறுபட்ட ஒருங்கிணைப்பு (Bi-sexuality) என்று அழைக்கிறார்கள். **தந்திரா இதை 5,000 வருடங்களிற்கு முன்பே கூறியுள்ளது.** மனித அமைப்பை எளிதாகப் புரிந்துகொண்டால் நீங்கள் உங்களுக்குள்ளே எளிதாகச் செல்லமுடியும். எதற்காக ஓர் ஆண் ஒரு பெண்ணை காதலிக்கிறான்? ஏனென்றால் அவன் தன்னுள்ளே ஒரு பெண்ணைச் சுமந்திருக்கின்றான். அதனால் ஒரு பெண்ணைக் காதலிக்கிறான். இல்லாவிட்டால் காதலிக்க முடியாது. எதற்காக ஒரு குறிப்பிட்ட பெண்ணை மாத்திரம் காதலிக்கிறான்? ஆயிரக்கணக்கான, கோடிக்கணக்கான பெண்கள் இருக்கும்போது ஏன் அக்குறிப்பிட்ட பெண் மீது அப்படியொரு ஈடுபாடு. எதற்காக ஒரு குறிப்பிட்ட ஆண்மாத்திரம் ஒரு பெண்ணைக் கவரவேண்டும்? எதற்காக அந்த உந்துதல் ஏற்படவேண்டும்?

**தந்திரா இதற்கு விடையளிக்கிறது.** ஆணினுள்ளே கலந்திருக்கும் அந்தப் பெண்ணின் உருவமும் வெளியேயிருக்கும்

பெண்ணின் உருவமும் ஒத்துப்போகிறது. வெளியேயிருக்கும் ஆண், பெண்ணிற்குள்ளே இருக்கும் ஆண் உருவத்தோடு ஒத்துப்போவதால் அவனோடு காதல் உறவு வைக்க விரும்புகிறாள். நீங்கள் ஆணாக இருந்தால் ஒரு பெண்ணின் உருவத்தையும் நீங்கள் பெண்ணாக இருந்தால் ஓர் ஆணின் உருவத்தையும் உள்ளடக்கியிருக்கிறீர்கள். இது ஆழமாக வேலை செய்துகொண்டேயிருக்கிறது. உள்ளேயிருக்கும் உருவத்தோடு ஒத்துப்போவதால் இவள்தான் என்னுடையவள், இவர்தான் எனக்குரியவர் என்று உணருகிறீர்கள், இந்தப் பரவச உணர்வுதான் காதல் என்பது. உள்ளேயிருக்கும் உருவத்தோடு ஒத்துப்போகாத எந்த வெளி உருவமும் திருப்திப்பட முடியாது. ஏனென்றால் வெளியுருவம் உள்ளேயிருக்கும் உருவத்தோடு பொருந்தவில்லை. அதனால் ஒருவருக்கொருவர் பிடிக்காத ஆயிரம் அம்சங்கள் இருப்பதை விரைவிலேயே அறிந்து வெறுப்படைகிறார்கள். இருவரும் கருத்தில் மாறுபட்டு மனத்தளவில் அந்நியர்கள்போல் ஆகிவிடுகிறார்கள். ஆரம்பத் திலிருந்த இனக்கவர்ச்சி, ஒற்றுமை என்பன போகப்போக மறையத் தொடங்குகிறது.

வெளியேயுள்ள ஆண், பெண்ணினுள்ளே இருக்கும் ஆணுடனும் அதைப்போல வெளியே உள்ள பெண் ஆணினுள்ளே இருக்கும் பெண்ணுடனும் ஒருக்காலும் முழுமையாக ஒத்துப்போகாததால்தான் குடும்ப வாழ்வில் சச்சரவுகளையும் துக்கத்தையும் கொடுக்கிறது. வெளியேயுள்ள உருவமும் உள்ளே உள்ள உருவமும் ஒத்துப்போனால் இயல்பான வாழ்வாகவும். அன்பான வாழ்வாகவும், ஆனந்த வாழ்வாகவும், புரிந்துணர்வு நிரம்பிய வாழ்வாகவும், உன்னத வாழ்வாகவும் அமைந்து வாழ்வு நதிபோல் ஓடும். ஒத்துப் போகாதவர்கள் இணக்கமாக மாறவேண்டுமல்லவா!! எப்படி?

**இதற்குத் தந்திரா என்ன சொல்கிறது?**

ஒருவர் தனக்குள்ளே செல்ல, செல்ல இதுவரை கணவன் மனைவியாக இருந்தவர்கள் இப்பொழுது நல்ல நண்பர்களாகி விடுவார்கள், ஒருவருக்கொருவர் கருணையுள்ளவர்களாக இருப்பார்கள். புரிந்துகொள்ளல் ஏற்படும்போது அது எப்பொழுதும் கருணையாகவும் அன்பாகவும் மாறுகிறது.

அவர்கள் வெளியேயிருக்கும் பெண்ணோடும், ஆணோடும் ஒருக்காலும் ஆர்வம்காட்ட மாட்டார்கள். கணவன் மனைவி ஒருவரையொருவர் பிரிந்து துறவறம் பூண்டு காட்டுக்கும், மலைக்கும், குகைக்கும், ஆற்றங்கரைக்கும் தப்பி ஓட மாட்டார்கள்.

**‘நீங்கள் உங்களுக்குள்ளே செல்லுங்கள், அங்கே உள்ளே இருக்கும் ஆணையும் மற்றும் பெண்ணையும் கண்டு பிடியுங்கள், அந்த உருவத்துடன் சேருங்கள், அந்த இன்ப நிலை தெய்வீகமானது என்கிறது. அந்த இன்ப நிலையை வெளியே இருப்பவர்களிடம் அடையமுடியாது. அந்த இயற்கையான உணர்வை உங்களுக்குள் செலுத்த அந்த உணர்ச்சிமயமான நேரத்தில் நீங்கள் இந்த உலகில் இருப்பதில்லை’ என்கிறது தந்திரா. இதைத் தியானம் மூலம் ரிஷிகள் போன்றோர்கள் அடைகின்றனர்.**

புத்தர் ஞானமடைந்தபின் அவர் தன் சீடர்களிடம் முதன்முதலில் சொல்லியது ‘நான் எனது மனைவி யசோதாவிடம் செல்ல விரும்புகிறேன் அவளுடன் பேச விரும்புகிறேன்’ என்றார். புத்தரின் சீடர்கள் ‘உங்களைப்பற்றி மக்கள் என்ன நினைப்பார்கள், நீங்கள் பிரிந்து 12 வருடங்களின் பின் ஏன் இப்போது அந்த நினைப்பு ஏற்பட்டது?’ என்றார்கள். அதற்கு புத்தர் ‘நான் இந்த ஞான நிலையை அடைந்ததற்கு அவளிற்கு நன்றிக்கடன் பட்டிருக்கிறேன், அதைத் தெரிவிக்க வேண்டும்’ என்றார். புத்தர் அரண்மனைக்குத் திரும்பினார். மனைவி யசோதாவைச் சந்தித்தார். புத்தர் மீது கோபப் பட்டாள், 12 வருடக் கோபம் அது, தனக்குச் சொல்லாமல் தன்னை விட்டுப் பிரிந்துபோனதில் ஏற்பட்ட கோபம் அது. தவறை உணர்ந்து மன்னிப்புக் கேட்கிறேன், அப்பொழுது புரியாமல் செய்துவிட்டேன், அப்பொழுது இந்தப் பிரக்ஞை நிலையில் நானிருக்கவில்லை, இப்பொழுது புரிந்த நிலையில் இருக்கிறேன், என்னுடைய அனுபவத்தை உன்னோடு பகிர்ந்துகொள்ள விரும்புகிறேன்’ என்றார். மனைவி புத்தரை உற்று நோக்கினார். தலையைச் சுற்றி ஒளிவட்டம், தனது பழைய கணவர் புதிய இவருக்குள் மறைந்துவிட்டார் என்பதை உணர்ந்து புத்தரின் காலில் விழுந்து தன்னை சீடராக ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினார்.

புத்தர்-யசோதரா சந்திப்பைப்பற்றி ரவீந்திரநாத்தாகூர் அவர்கள் ஒரு கவிதை எழுதியிருக்கிறார். யசோதரா புத்தரிடம் 'நீங்கள் ஒரு விசயத்தை மட்டும் கூறுங்கள், நீங்கள் எதையெல்லாம் அடைந்திருக்கிறீர்களோ அவைகளையெல்லாம் என்னால் கவனிக்கமுடிகிறது. ஒரேயொரு விசயத்தைமட்டும் சொல்லுங்கள். இங்கேயே இந்த வீட்டிலேயே அதை உங்களால் அடைய முடியாதா?' அதற்கு புத்தரால் முடியாது என்று சொல்ல முடியாது, புத்தருக்கு அது அங்கேயே நிகழமுடியும் என்பது தெரியும். ஞானம் அடைவதற்கு ஒரு காட்டிலோ, ஆலமரத்தடியிலோ வசிப்பதற்கு எந்தச் சம்பந்தமும் கிடையாது. அதற்கும் உண்மை நிலைக்கும்தான் சம்பந்தம் உள்ளது. அந்தப் பேரியக்க உயிர்த்தன்மை எங்கேயும் இருக்கிறது என்பதை புத்தர் உணர்ந்திருப்பதால் முடியாது என்று சொல்ல அவரால் முடியாது, என்று தாகூர் கவிதையில் கூறுகிறார்.

**ஆண் பெண்ணை முழுமையாக்குகிறான்**

**பெண் ஆணை முழுமையாக்குகிறாள்**

**இருவரும் சேர்ந்து உலகத்தை முழுமையாக்குகிறார்கள்.**



## அத்தியாயம் - 10

# மனிதனின் முதற்தேவை இயற்கையாக இருப்பதே

மனிதனின் ஆற்றலை வரையறுக்க முடியாது. மனிதனைத் தவிர ஏனைய உயிரினங்கள் பிறந்து, வாழ்ந்து, இறக்கும்போதும் எப்படி இருந்தனவோ அப்படியாகவே இறக்கும். மனிதன் அப்படியில்லை, மனிதன் தெய்வீகமாகவும் உயரலாம், காந்தி போலவும் ஆகலாம், பல இலட்சம் பேரைக்கொன்ற ஒரு ஹிட்லரைப்போலவும் ஆகலாம். மனிதரால் உயரவும் முடியும் தாழவும் முடியும்.

**உதாரணக் கதை:**

ஒருவர் தன் செல்லப் பிராணியான நாயுடன் ஒரு விடுதியில் தங்கப்போனார். தனது நாயையும் விடுதியில் தங்க அனுமதிப்பீர்களா என்று வினாவினார். அதற்கு நிர்வாகி கூறினார், 'மது போதையில் அத்துமீறிய பல மனிதர்களை அகற்ற போலீசின் உதவியை பல நூறு தடவைகள் நாடியுள்ளேன். ஆனால் இதுவரை நான் போலீசிற்குப் போன் செய்து எந்த செல்லப் பிராணியையும் அகற்றுங்கள் என்று கேட்டதில்லை. செல்லப் பிராணிகள் செல்லுபடியாகாத காசோலை கொடுத்து என்னை ஏமாற்றியதில்லை. ஆனால் மனிதர்கள் செல்லுபடியாகாத காசோலை கொடுத்து என்னை ஏமாற்றியதுண்டு. இங்கு புகைபிடிக்காதீர்கள் என்று அறிவித்தல் போட்ட இடங்களில் எந்த நாயும் புகைபிடித்ததில்லை. ஆனால் மனிதர்கள் அங்கு புகைபிடிக்கிறார்கள். இதனால் உங்களுடன் வந்த நாயை நாங்கள் வரவேற்று, மதித்து, கௌரவ விருந்தினராகத் இங்கு தங்க அனுமதிக்கிறோம். ஆனால், நீங்கள் இங்கு தங்குவதாக இருந்தால் உங்கள் நாய் உங்களை சிபாரிசு செய்ய வேண்டும்' என்றார்.

மனிதன் சூழ்ச்சிக்காரன். அடுத்தவர்களைக் கவிழ்க்க எந்தநேரமும் திட்டம் போட்டபடி இருப்பான். மிகவும் அசிங்கமானவன். மனிதனால் மிகவும் கீழ் நிலைக்கும் அதே நேரத்தில் மிகவும் உயர்ந்த நிலைக்கும் செல்லமுடியும். மனிதனின் ஆற்றலிற்கு அளவேயில்லை. மனிதனால் மலையாகவும் வளரமுடியும், மடுவாகவும் தாழமுடியும். மனிதனுக்குள்ளே ஏணியுண்டு. முதல்படியும் அவனுள்ளே இருக்கிறது, கடைசிப்படியும் அவனுள்ளே இருக்கிறது.

விஞ்ஞானம் வளர வளர மனிதனால் கொல்லப்படுபவர்களின் எண்ணிக்கையும் உயர்கிறது. சித்திரவதை வழிமுறைகளும் அதிகரிக்கின்றன. ஆதிகாலத்தில் 'கார்த்தேஜ்' என்ற ஊரில் 50,000 பேர்கூடி ஒரு பெரிய மைதானத்தில், வானளாவத் தீமூட்டி அந்த தீயில் தங்கள் குழந்தைகளை எறிந்து கடவுளுக்குப் பலி கொடுத்தார்களாம். அந்த ஈனப்பிறவிகள் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? 60 இலட்சம் யூதர்கள் விஷவாயுவிற்கும், உயிருடன் சூளையில் போட்டு எரித்துக் கொன்ற மனிதர்களைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்? விலங்குகள் இப்படிச் செய்யுமா? 300 வருடங்களில் மனிதர்கள் 5000 பெரிய போர்களில் ஈடுபட்டிருக்கிறார்கள். எல்லாப் போர்களும் அழிவில்தான் முடிகின்றன. எங்கு பார்த்தாலும் கொலை, கொலை, கொலை, மனிதனைத்தவிர மிக்க கொடூரமாக எந்த மிருகமும் நடந்துகொள்ள முடியாது. ஆனால் இப்படியான கொடூரமான ஈனச் செயல்களை 'மிருகத்தனம்' என்று எப்படி அடைமொழியாகக் கூறமுடியும்? மிருகத்துக்கும் இதற்கும் தொடர்பு இல்லையே! ஆனால் மனிதர்கள் தங்கள் சொற்பிரயோகங்களின் பின்னால் சௌகரியமாக மறைந்துகொள்கிறார்கள்

ஆணும், பெண்ணும் காதலிப்பதை மிகப்பெரிய பயங்கரவாதம் போலவும் அது குற்றங்களிலே மிகப்பெரிய குற்றம் என்பது போலவும் கருதிக்கொள்கிறீர்கள். மதவாதிகள் உடலுறவு பாவச் செயல் என்கிறார்கள். செக்ஸை மத போதகர்கள், சாமியார்கள் அசிங்கம் என்றும், மிருகத்தனமானது என்றும் கூறி மனக்கட்டுத் திட்டத்தில் வைக்கிறார்கள். ஆண், பெண் பாலியல் தொடர்பிற்கு எதிராக சில மதப் பிரச்சாரங்களும் உண்டு. செக்ஸ் மிக உன்னத நிலையிலும்

இருக்கலாம். அன்பான வழிபாடாகவும்கூட இருக்கலாம். இவை எல்லாம் அதில் ஈடுபடுபவர்களைப் பொறுத்தது. செக்ஸை அன்பாக்குவதும், வழிபாடாக்குவதும், காதலாக்குவதும், சுவையாக்குவதும் அவரவர்களில்தான் தங்கியுள்ளது. **'செக்ஸ் மூலமாகச் சமாதி நிலையையும் அடையலாம்' என்று தந்திரா கூறுகிறது.** செக்ஸ் என்பது ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள ஒரு உச்சக்கட்ட நெருக்கம். அனேக சாமியார்கள் செக்ஸைப் பிடிக்காது என்று ஏன் வார்த்தை ஜாலம் செய்கிறார்கள்? வார்த்தைகளை அங்கேயும் இங்கேயும் மாறி மாறிப் போட்டுக்கொண்டு சாமர்த்தியமாகவும் தந்திரமாகவும் பேசுகிறார்கள்.

செக்ஸ் மாத்திரம்தான் அன்பு என்பதல்ல, அன்பு அதையும் தாண்டியதாகும். கணவன் மனைவிக்கிடையேயிருக்கும் அன்பிற்கு செக்ஸ்தான் ஆதாரம், அங்கே உடலை வெறுத்து ஒதுக்கிவிட்டு பூரண மகிழ்ச்சி காணமுடியாது. கணவன் மேலோ, மனைவி மேலோ அன்பு தூய்மையாக இருக்க வேண்டுமென்றால் உடலுறவில்லாத நிலையிலும் அன்பு நிலைபெற வேண்டும். அந்த உணர்வுகள் அன்பாக மாறும்போது உடலுறவிற்கான உணர்வுகள் படிப்படியாக குறைந்துகொண்டே போகும் என்பதே தந்திராவின் நிலை. ஒரு செயற்கையான உணர்வு அமுக்கி வெறுக்கப்படும்போது அது வேறொரு மாற்றுணர்வாக வெளிப்படும்போது அதை அடக்கக் கடுமையாகப் போராடிக்கொண்டிருப்பீர்கள். **உங்கள் இயற்கையான செக்ஸ் உணர்வுகளைத் தாண்டி வளர்வதற்கு ஒரே வழி அந்த உணர்வுகளோடு ஒன்றுபட்டு வாழ்வதுதான். இயற்கையாக இருங்கள், இயற்கை கொடுத்த உணர்வுகள்தான் வாழ்க்கையா? அதைவிட மேலான நிலை இல்லையா? இருக்கிறது, அதை அடைய ஒரே வழி இயற்கை உணர்வோடு ஒன்றுபட்டு வாழ்வதுதான் முதற்படி என்கிறது தந்திரா.** இதை இன்னும் விளக்குவதாக இருந்தால் ஒரு எளிய உதாரணமும் கூறலாம். வானில் சிறகடித்துப் பறக்கவேண்டுமென்றால் முதலில் இந்த மண்ணோடு ஒன்றுபட்டு வாழவேண்டும். கடவுள்தான் எல்லாம் கொடுத்தது என்றால் செக்ஸ் உணர்வும் கடவுள் தானே கொடுத்தது! நம்முடையது எல்லாமே கடவுள் கொடுத்ததுதானே! கடவுள் எனக் குறிப்பிடுவது வழிபாட்டுருவத்தை அல்ல, மனிதரின் இருப்பு நிலையை. குயில்

ஏன் இனிமையாகப் பாடுகிறது? உடலுறவிற்காக தனது கூட்டாளியை அழைக்கும் அறைகூவல்தான் அந்தப் பாடல். குயிலை எவரும் ஆபாசம் என்று ஒதுக்கவில்லையே! மலர்கள் மலர்ந்து தங்கள் வாசத்தைப் பரப்புவது எதற்காக? பூச்சிகளே, தேனீக்களே வாருங்கள் என் தேனைச் சுவைத்து என் விதைகளைப் பரவச் செய்யுங்கள் என்கின்றன.

மரம், செடி, கொடி இவைகளிலும் ஆண், பெண் உறவுகள் உண்டு. ஆண், பெண் உறவு இயற்கையில் எல்லா உயிரினங்களிலும் இருக்கிறது. ஆண் செடிகள், கொடிகள், மரங்கள் தங்களது விதைகளை தங்களது காதலிகளான பெண் செடி, கொடி, மரங்களிற்கு அனுப்புகிறது. அவைகளின் பிள்ளைகள்தான் கனிகள். நீங்கள் பார்க்கவேண்டும், படம்பிடிக்க வேண்டும், இரசிக்க வேண்டும் என்பதற்காக ஆண் மயில் தனது அழகுத் தோகையை விரித்து நடனமாடுகிறதா? இல்லை, பெண் மயிலைத் தன் பக்கம் கவர்ந்திழுப்பதற்காகத் தான் அந்த நடனம். ஆண் சிங்கத்தின் அழகான பிடரி பெண் சிங்கத்தைக் கவரத்தான். விலங்கினங்களில் ஆண் இனம் அழகாக இருந்து பெண் இனத்தைக் கவருகிறது.

இயற்கையின் அமைப்பில் பெண்களிற்கு அழகு தேவை யில்லை, பெண்ணாக இருந்தால் மட்டுமே போதுமான தாகின்றது. பெண்ணின் பாலுணர்வு அமைதியாக வருவதை ஏற்றுக்கொள்ளும் தன்மையாக இருக்கிறது. மாதம் ஒருமுறை பாலுணர்வு உடலிலிருந்து வெளிப்பட்டு மீண்டும் சுத்தமாகிறாள், ஆனால் ஆணின் நிலையில் பல சிக்கல்கள் இருக்கின்றன. ஆண் பித்துப்பிடித்தவன் போல இருக்கின்றான். ஆனால் வெளியில் காட்டிக்கொள்வதில்லை. கலவரங்களில் இயற்கை அழிவில் மக்கள் கொல்லப்பட்டிருக்கும் போதும்கூட ஆணின் மனம் பாலுணர்வை நினைக்கிறது. ஆண் தனது பாலுணர்விற்கு அடிமையாகியிருக்கின்றான். அழகான பெண்ணைத் தேடி அலையும் ஆண் தன்னை அழகான ஆணாக மாற்றிக்கொள்ள முயலுவதில்லை.

ஒரு பொலிவான பெண்ணைத் தேடுவதைவிட ஆண் தன் பொலிவை வளர்த்துக் கொள்ள வேண்டும். முட்டாள்தனம் கூடியவர்கள் ஆண்கள்தான். உலக வரலாற்றைப் பாருங்கள். போரை ஆரம்பிப்பது ஆண், ஆனால் பாதிக்கப்படுவது

பெண்களும், குழந்தைகளும், முதியவர்களும், நோயாளிகளும். அழிவுகள், கற்பழிப்புக்கள், கொலைகள், நாசகார வேலைகள் எல்லாக் கொடுமைகளையும் ஆண்கள்தான் செய்கிறார்கள். ஆணிற்கு ஆழ்நிலை சிந்தனை (transcendental thoughts) ஏற்படும்வரை உலகில் எந்த நாடாக இருந்தாலும் போர்களைத் தவிர்க்க முடியாது. அனைத்துச் செயற்கை அழிவுகளிற்கும் ஆணேதான் காரணம். ஆழ்நிலை சிந்தனை மூலம்தான் ஆண் தன்னை மாற்றமுடியும். பொதுவாகப் பெண்கள் ஆழ்நிலை சிந்தனை செய்வதில் வல்லவர்கள். அவர்களது அன்பு, கருணை, பொறுமை, பரிவு, கவனிப்பு இயல்பானது. அத்துடன் அவர்களது பாலுணர்வுத் தன்மையும் அமைதியானது. பெண்ணுக்கு இயற்கை வழங்கிய வெகுமதிகள் இவை.

பல நூற்றாண்டுகளாக தவறான மனப்போக்கு, மனக்கட்டுத்திட்டம், குழப்பம் எல்லாம் சேர்ந்து செக்ஸ் (Sex) என்ற வார்த்தையை அசிங்கமாக்கிவிட்டன. 'செக்ஸ்' என்றால் என்ன என்று ஒரு சிறு பிள்ளையைக் கேட்டால் அதற்குப் பதில் சொல்ல முடியாதளவிற்கு அந்த வார்த்தைகளால் நமது வாழ்க்கையைச் சிக்கலாக்கிக்கொண்டோம். அந்த வார்த்தையை உச்சரிக்கும்போதே ஒரு குழப்பம் ஏற்படுகின்றது. இந்த விசயத்தில் மனித இனமே தவறான எண்ணங்களில்தான் வாழ்ந்து வருகின்றது. இதைத் தெளிவுபடுத்தக்கூடியது ஆழ்நிலைத் தியானம் எனக் கூறுகிறது தந்திரா.

இளைஞர்களாக இருக்கும்போது உங்கள் செயல் ஒவ்வொன்றிற்கும் செக்ஸ் தனது வர்ணத்தைத் தீட்டுகின்றது. இந்த மாற்றம் உங்களால் ஏற்பட்டது அல்ல. இது இயற்கையாக நிகழும் ஒரு மாற்றம். எனவே அதன்மீது பழிபோடாமல், அடக்க வேண்டுமென்று சொற்பொழிவு செய்யாமல் இயல்பாக வாழ்ந்தால் அந்த உணர்வுகள் தானாக விலகும். அதாவது முக்கியமடையச் செய்யாமலிருந்தால் முக்கியமடையாமல் நீங்கிவிடும். செக்ஸ் உணர்விற்கு நீங்கள் காரணமில்லை, செக்ஸ் உணர்வுடன்தான் எந்த மனிதனும் பிறக்க முடியும். பெற்றோர்கள் பள்ளியறையில் இருந்ததால்தான் மதவாதிகள் பகவான்கள், சுவாமியார்கள், யோகிகள், மகான்கள், முனிவர்கள், ஞானிகள் உட்பட மனிதர்கள் எல்லோரும் பிறந்தார்கள். இவர்கள் கருவில் உருவாகும்போது இவர்களது

பெற்றோர்கள் தியானத்தில், பிரார்த்தனையில், வழிபாட்டில், பஜனையில் இருக்கவில்லை. எல்லோருடைய முதல் உயிரணுவே செக்ஸ் அணுதான். பாலுணர்வு ஒரு மனிதரின் அடிப்படை இருப்புநிலை. இதை விளங்கிக்கொள்ளும்போதும், ஏற்றுக் கொள்ளும்போதும் பல நூற்றாண்டுகளாக இந்த மனித இனம் உருவாக்கிய முரண்பாடுகள் கரைந்துபோய் விடும்.

பல நூற்றாண்டாக செக்ஸ் விசயத்தில் முரண்பாடும், குழப்பமும் இருந்துகொண்டே இருக்கிறது. ஒரு குழந்தை பிறந்தவுடன் சுவாசித்தே ஆகவேண்டும். அது வாழ்க்கையின் இறுதிக்கட்டம்வரை நீடிக்கிறது. செக்ஸ் தாமதமாக மனிதனில் ஏற்படுகிறது. இந்தச் சமுதாயம் கொச்சைப்படுத்தவில்லை யென்றால் அந்தக் குழந்தைக்கு அது ஒரு பூதாகாரமாகத் தெரியாது;.

**இந்து மதக் கதைகள் கடவுள்கள் திருமணம் செய்து குழந்தைகள் குடும்பத்துடன் அன்னியோன்னியமாக வாழ்ந்ததாகக் கூறுகின்றன. இந்திரலோகம் இளம்பெண்களை மட்டும் கொண்ட களியாட்ட இடமாக இருந்திருக்கிறது.**

ஒருபக்கம் செக்ஸ் உணர்வே தவறானது என்று மதப்பிரச்சாரம், மறுபக்கம் செக்ஸிற்கு வெளிச்சம்போடும் மஞ்சள் பத்திரிகைகளும் அது தொடர்பான சஞ்சிகைகளும். செக்ஸை தவிர் என்ற பிரச்சாரங்களும், அதே நேரத்தில் ஆபாச சஞ்சிகை வெளியீடுகளும், இந்த இரண்டும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள்தான். இரண்டும் ஒன்றையொன்று சார்ந்து நிற்கின்றன. வெளிப்பார்வையில் எதிரானவைகள் போலத்தான் தோன்றும். செக்ஸிற்கு எதிராகப் பிரச்சாரம், போதனைகள் வளர வளர ஆபாசப் பத்திரிகைகள், ஆபாசச் செய்திகள், ஆபாசச் சஞ்சிகைகள், ஆபாசப் பாடல்கள், படங்கள் நல்ல வரவேற்பைப் பெற்றுக்கொண்டுதான் இருக்கும். செக்சிற்கு எதிரான பிரச்சாரங்களும், செக்ஸைத் தூண்டும் பத்திரிகைகளும், சஞ்சிகைகளும் ஒட்டிப் பிறந்த சகோதரர்கள்தான். செக்ஸ் தவறு என்ற பிரச்சாரம் உலகிலிருந்து ஓயும்போது மஞ்சள் பத்திரிகைகளும் ஓய்ந்துவிடும். அப்போது மக்களுக்கு ஏற்பட்ட குழப்பங்களிலிருந்து மக்கள் விடுதலை பெற்றுவிடுவார்கள். செக்ஸ் உணர்வுகளைச் செயற்கைத்தனமாக அடக்கும்போது

மோசமான வழிகளில் வடிகால் தேடப்படும். வடிகால் தேடுவதுதான் தவறேயொழிய செக்ஸில் தவறில்லை. இந்தச் செக்ஸ் உணர்வை இயல்பான உணர்வாக ஏற்றுக் கொண்டவர் களால்தான் அதைக் கடந்து அடுத்த நிலைக்குச் செல்லமுடியும்.

ஓர் உயிர் உருவாகவேண்டிய சமயத்தில்தான் செக்ஸ் ஏற்படுகின்றது. இது மனித இனத்திற்கு உகந்ததில்லாமல் போய்விட்டால் மனித இனமே இல்லாமல் போய்விடும், இது மாபெரும் இனப் படுகொலையாகிவிடும். உயிரே செக்ஸ் மூலம்தான் இயங்குகிறது. **வாழ்க்கையைப் புரிந்துகொண்டால் செக்ஸ் தெய்வீகமானது என்பதைப் புரிந்து கொள்வீர்கள் என்கிறது தந்திரா.** *70, 80* வயதான வயோதிபர்கள் பாலியல் விவகாரங்களில் மாட்டிக்கொள்ளும்போது அந்தச் செய்திகள் பத்திரிகைகளில் முக்கியமடைகிறது. அவர்கள் அந்த விவகாரங்களில் ஏன் ஈடுபட்டார்கள் என்ற கேள்விக்கு சமூகம் பதில் தருவதில்லை. அவர்கள் சார்ந்த சமூகம் அவர்களைக் கட்டிப்போட்டு விட்டது. உரிய காலத்தில் இயல்பாக அவர்களால் நடந்துகொள்ள முடியவில்லை. உடலுறவு கொள்ளும்போதும் கூட முழுமையாக ஈடுபடவில்லை, அரை மனதுடன் ஈடுபட்டார்கள். எந்தச் செயலை அரைமனதாகச் செய்கிறீர்களோ அதை மீண்டும் மீண்டும் செய்யத் தூண்டும். எவர் ஒருவர் இயல்பாக வாழ்கிறாரோ அவர் தனது இயற்கையான செக்ஸ் உணர்வுகளை அசிங்கமாக்காமல் வாழும்போது அவர் *50* வயதினில் செக்ஸிலிருந்து முழுமையாக விடுதலை பெற்றுவிடுவார். எவர் செக்ஸ் உணர்வுகளைப் பூட்டி வைத்துக்கொண்டு வாழ்கிறாரோ அவருள் அத்துமீறிய உணர்வு இடைக்கிடை தோன்றும். நீங்கள் சார்ந்த மதங்கள் செக்ஸ் தவறு என்று சொல்லியிருக்கலாம், கட்டுப்போட்டு இருக்கலாம். நிஜ விஷயங்களிற்கு எதிராகச் செயல்படும்போது போலியான விஷயங்களில் இயல்பாக நாட்டம் செல்கிறது. ஆபாசம் எப்போது ஒழியும்? ஒரு பெண்ணின் நிர்வாணத்தை இயல்பு நிலை என்று ஏற்றுக்கொள்ளும்போது ஒழிந்துவிடும். மனிதன் இயல்பாக இருக்கத் தொடங்கிவிட்டால் ஆபாசம் மறைந்து விடும். அப்போது நிர்வாணம் சுவாரசியமாக இருக்காது. **அனைத்து மதங்களும் மனிதர்கள் இயல்பாக வாழ போதனை செய்யவேண்டும். மக்களுக்குக் குற்ற உணர்வைத் தூண்டும் போதனைகள் வாழ்நாள் முழுவதும் மட்டுமல்ல, இறக்கும்**

வரைக்குமல்ல இறந்த பின்பு நரகலோகம் போன்ற கதைகள் குற்ற உணர்வுடன் வாழச்செய்கிறது. மதங்கள் இயல்பாக வாழ வழிகாட்ட வேண்டும். மனித உடல்களின் விளைவுகளை, நேராகச் சந்திக்கவும் வாழ்வை அதன் நிலையிலே சந்திக்கவும் வலியுறுத்த வேண்டும். இயல்பான வாழ்வு ஆபாசத்தைத் தூண்டாது. ஒவ்வொருவரும் இயல்பாக வாழும்போது அந்த இயல்புத்தன்மை ஆபாசத்தை ஒழித்து விடும். ஆபாசப் பாடல்கள், சஞ்சிகைகள் மறைந்துவிடும், கற்பழிப்பும் மறைந்துவிடும். அப்போது பெண்கள் சாதாரணமாகப் பயமற்று நடமாடக்கூடிய உலகம் தோன்றும். அப்படியான உலகம்தான் விடுதலைபெற்ற உலகம்.

திரௌபதியை நிர்வாணமாக்கும் முயற்சியே அன்று மகாபாரதத்தில் நடந்திருக்காது. துகிலுரிதல் என்ற சம்பவமே இடம்பெற்றிருக்காது. அப்படியொரு எண்ணம் மனதில் தோன்றி இருக்காது. மகாபாரதத்திலேயே அது அவ்வளவு முக்கியமடைந்திருக்காது. இராமாயணத்தில் சீதையை எண்ணிக் கலங்கியிருக்கத் தேவையில்லை. மதப் பிரச்சாரங்கள் செக்ஸ் உறவு பாவம் என்று நம்ப வைத்திருப்பதால் பலருக்கு தூக்கம்கூடக் கெட்டுப்போய் விடுகிறது. ஏதோ தவறு செய்திருக்கிறோம் என்ற குற்ற உணர்வு அவர்களைத் தாக்கும்போது மன அழுத்தம் ஏற்படுகிறது. நீங்கள் இயல்பான மனிதராக இருந்தால் உங்களுக்குள் இவை ஊடுருவிச் செல்லாது.

'தந்திரா' உடலுறவை ஆழ்நிலைத் தியானமென்று கூறுகிறது. தந்திராவின் காலம் எது என்பது யாருக்கும் சரியாகத் தெரியாது. பலவிதமான காலங்கள் கூறப்படுகிறது. 'தாந்திரீகம்' மனஅழுத்தத்தைப் போக்குகிறது. உடலையும், மனதையும் இலேசாக்கி விடுகிறது. இயல்பாக வாழ வைக்கிறது. தாந்திரீகத்தினால் புதுமனிதர்களை உருவாக்க முடியும். அந்தப் புது மனிதன் 'தான்' என்ற நினைப்பைத் தாண்டி தன் இருப்பு நிலையோடு ஒன்றிய உணர்வைப்பற்றி அறியமுடியும். அத்தகைய மனிதர்களால்தான் வளர முடியும். தாந்திரீகம் உங்களை உயிரோட்டமுள்ள பொலிவூட்டக்கூடிய சக்தியாக உங்களை நிரப்புகிறது.

பாலியல் உறவைப்பற்றி Sigmund Freud, Johnson and Johnson போன்றோர்களது கருத்துக்கள், ஆராய்ச்சிகள், நூல்களே இன்று உலகில் அளவுகோல்களாக உள்ளன. 5000 வருடங்களிற்கு முன்பே 'தந்திரா' மருத்துவ, உளவியல் ஆராய்ச்சி இல்லாமல் கூறியவைகளைத்தான் அவர்கள் ஆராய்ச்சியின் மூலம் கூறியுள்ளார்கள் என்பதை நினைக்கும் போது 'தந்திரா'வின் உன்னத நிலையை உணர்ந்துகொள்ளக் கூடியதாக உள்ளது.

**செக்ஸ் அன்பாக மாறவில்லையென்றால் அது செக்ஸின் குற்றமல்ல, செக்ஸோடு நின்றுவிடாமல் அது அன்பாக மாறி, அன்பு தியானமாக மாறி, தியானம் ஞானமாக வேண்டும் என்பதே தந்திராவின் நிலை. பாலுணர்வை ஒரு வழிபாடுபோல, ஒரு தியானத்தைப்போல, அணுகு என்கிறது 'தந்திரா.' தந்திராவிற்கு எல்லாமே புதுமை, அதனால்தான் தந்திராவைப் புரிந்துகொள்ள முடிவதில்லை.**

பாலுணர்விற்கு விரோதமாகவே மதங்கள் இருக்கின்றன, அவை பாலுணர்வை அடக்கு என்கின்றன. அடக்கினால் அது எங்கும் போகாது, உங்கள் மனதின் மிக ஆழத்தில் ஆழ்மனதில் போய் பதுங்கிவிடுகிறது. அது அவ்வப்போது கனவாக வெளிவந்து எட்டிப் பார்ப்பார்க்கிறது. பகலில் பெண்களை ஏறிட்டுப்பார்க்காத சாமியார்கள் தூக்கத்தில், கனவில் பெண்களின் அரவணைப்பிற்கு உள்ளாகிறார்கள்.

**ஒரு நிகழ்வு:**

'ராம்தீர்த்தர்' அமெரிக்காவில் வாழ்ந்தவர். இமயமலைச் சாரலில் போய்த் தியானம் செய்து அங்கேயே துறவியானார். அவருக்குப் பல சீடர்கள் இருந்தனர். அவர் இமயமலைச் சாரலில் இருப்பதை அறிந்து அவரது மனைவி அங்கு சென்றார். பல பெண்கள் அவரை வணங்கிச் செல்கின்றனர். அவர் தன் மனைவியைக் கண்டதும் சலனமடைந்தார். அவரது இந்த நிலையைச் சீடர்கள் அவதானித்துவிட்டனர். என்ன நடந்ததென்று கேட்டனர். அதற்கு அவர் தன் மனைவியைக் கண்டதும் தனக்குச் சஞ்சலம் வந்துவிட்டது என்றார். முக்கியம் மனைவி அல்ல, 'அவர்' என்னுடையவர் என்ற உடைமை எண்ணம்தான் என்றார். 'என்னுடையது' என்பது உரிமை நிலை

நாட்டும் ஆசையுடையது. 'என் மனைவி என்ற எண்ணம் இன்னும் என்னுள் இருக்கிறது. என்னால் அந்த நிலையை தாண்ட முடியவில்லை' என்று கூறித் தனது காவியுடையைக் கழற்றி வீசிவிட்டார். இறுதிவரை காவி தரிக்கவில்லை. ஆனால் துறவியாகவே இருந்தார்.

சில சுவாமியார்கள் பகலில் கடைப்பிடிக்கும் பிரம்மச்சரியம் தூக்கத்தில் கனவில் கலைகிறது. பகலில் காணும் பெண்களை தங்கள் விருப்பத்திற்கேற்ப மனதிற்குள் அனுப்பி விடுகிறார்கள். அவர்கள் தங்கள் கனவுகளை தாங்களே தங்களை அறியாமல் உருவாக்கிக் கொள்கிறார்கள். கனவுகள் ஒவ்வொருவருடைய படைப்புக்கள், பகலில் பெண்ணை விரும்பாதது போல் இருப்பதும், இரவில் கனவில் பெண் வருவதும், இரண்டும் ஒன்றே, இரண்டிற்கும் வித்தியாசம் இல்லை. இங்கு பெண்ணால் இந்த நிலை ஏற்படவில்லை, சாமியாரால்தான் இந்த நிலை ஏற்படுகிறது. **பாலுணர்வை ஏற்று அதைக் கடந்து செல்லுங்கள் என்கிறது தந்திரா.** புத்தரும், மகாவீரரும் பாலுணர்வை அடக்கவில்லை. ஆனால் அது அவர்களுக்குள் வீழ்ச்சியடைந்தது. ஏற்கனவே அவர்கள் மனைவியுடன் வாழ்ந்தவர்கள், தங்கள் பாலுணர்வுக்கு எதிர்ச் செயல் புரியவில்லை, ஆழமாகச் சென்றனர், பாலுணர்வு அவர்களிடம் சரணாகதியடைந்தது.

இந்தியாவிலுள்ள கஜுரா கோவில்கள் அனைத்தும் சாதாரண கோவில்களல்ல. அங்கு ஆணும், பெண்ணும் பல நிலைகளில் உறவுகொள்வதை சிறப்பாக வடிவமைத்து இருக்கிறார்கள். அவைகள் கற்பனையானது, மற்றும் நடைமுறையில் சாத்தியம் இல்லாததுதான். ஓர் ஆணும் பெண்ணும் தலைகீழாக நின்றுகொண்டு உறவுகொள்வதாக காட்டப்பட்டிருக்கிறது. இதைப்போல உலகத்தில் எந்த இடத்திலும் ஈடுபடமுயலமாட்டார்கள். ஏன் இப்படியான சிலைகள்? அந்தக் கால மனநல வைத்தியர்கள் அடக்கப்பட்ட காம உணர்வுகளினால் பாதிக்கப்பட்டவர்களிற்கு அந்தச் சிலைகளையும் ஒவியங்களையும் ஒரு மனநல சிகிச்சையாகப் பார்க்க வைத்திருக்கிறார்கள் என நினைக்கிறேன். அதே நேரத்தில் பாலியல் உறவைப் பற்றிய விழிப்புணர்வைத் தூண்டவுமாகவும் இருக்கலாம்.

இந்தக் கோவிலில் வெளியே கற்பனைக்கெட்டாத வகையில் பல சிலைகள் உள்ளன, கோவிலினுள்ளே எந்த உருவச் சிலைகளும் இல்லை, கடவுள் சிலைகளுமில்லை. எதுவுமே இல்லை, ஏன் வெளியே இந்த உடலுறவுச் சிற்பங்கள் இருக்கின்றன? இது ஒரு தந்திரம். சிலைகளில் முழுமையான கவனம் வைத்தபின்பு அதிலிருந்து விடுபட்டுவிடலாம் என்பதே அந்தச் சிலைகளின் அடிப்படைத் தத்துவம். தொடர்ந்து அந்தச் சிலைகளைப் பார்த்துக் கொண்டிருந்தால் அச்சிலைகளால் கவரப்படமாட்டார்கள். பின்பு அந்தச் சிலைகள் எந்த உள்ளக் கிளர்ச்சியையும் ஏற்படுத்தாது. இது தந்திரா தத்துவ அடிப்படையில் அமைந்த கோவில். இப்படிப்பட்ட வித்தியாசமான பரிசோதனை இந்தியாவைத் தவிர உலகில் வேறு எங்கேயும் நடந்ததேயில்லை. இது ஆன்மிகமானது. மேற்கு நாடுகளிலுள்ள நிர்வாணப் படங்கள்போல இவை இல்லை.

தந்திரா மனிதனின் பாலுணர்வுச்சக்தியை மேலான நிலைக்குக் கொண்டுசென்று அதை ஆன்மீகசக்தியாக மாற்றுகிறது. ஆண், பெண் தன்மை இயற்கையானவையே. ஆண் - பெண் காதல் இயற்கையானவையே. இது மனித உறவின் அஸ்திவாரம். இயற்கையாகவும் இயல்பாகவும் வாழ தடைகள் படிக்கட்டுகளாக மாற்றி உயர நகர்ந்து செல்லத் தொடங்குவீர்கள்.



## அத்தியாயம் - 11

# பெண்ணியல்பை அடைய ஆண்கள் பிரார்த்தனை

ஆணில் பெண்ணின் தன்மை மறைந்தும், பெண்ணில் ஆணின் தன்மை மறைந்தும் என்றும் இருக்கும். அம்மா, அப்பா இருவரின் பங்களிப்பும் குழந்தை பிறப்பதற்கு இருப்பதால் அந்த அம்சங்கள் ஒவ்வொருவரிலுமிருக்கும். அதாவது ஓர் ஆண் தனக்குள் பெண்மைத் தன்மையையும், ஒரு பெண் தனக்குள் ஆண் தன்மையையும் கொண்டிருக்கின்றனர். சில சூழ்நிலை களில் இந்தத் தன்மை வெளியில் தலைகாட்டி பின்பு ஒளித்துக்கொள்ளும். அதனால்தான் என்னடா இவன் பெண்ணைப்போல இருக்கிறான், என்னடா இவள் ஆணைப்போல இருக்கிறாள் என்று அங்கலாய்க்கிறோம். சில ஆண்களில் பெண் தன்மை அதிகமாகவும், சில பெண்களில் ஆண் தன்மை அதிகமாகவும் காணப்படும். இவர்கள் சமூகத்துடன் தங்களை ஒப்பிட்டுப்பார்த்து சங்கடப்படு கிறார்கள், நடைமுறையில் பல வித்தியாசங்கள் தென்படும். ஆண்தன்மை கூடிய ஆணும், ஆண் தன்மை கூடிய பெண்ணும் திருமணம் செய்தால் திருமண வாழ்க்கை போட்டியாக அமைந்துவிடும். பெண் தன்மை கூடிய பெண்ணும் பெண் தன்மை கூடிய ஆணும் திருமணம் செய்தால் வாழ்க்கை இழுபறியாகத்தான் தொடரும். மற்றவர்களைப்போல் வாழ முடியவில்லையே என்ற ஏக்கமிருக்கும். ஆண் தன்மை அதிகமுள்ள பெண்ணும், பெண் தன்மை அதிகமுள்ள ஆணும் குடும்பம் சமமாகச் செல்லாது. காரணம் ஆணிற்கு பெண்ணின் துணிச்சல் மீது பொறாமை ஏற்படும். ஆண் ஒவ்வொருவரும் தன்னுள் பெண்ணைச் சுமக்கிறான், ஒவ்வொரு பெண்ணும் தன்னுள் ஆணைச் சுமக்கிறாள், இதனால் எல்லா மனிதர்களும்

அர்த்தநாரீஸ்வர தோற்றம் கொண்டவர்கள். உடல் அமைப்பில் ஒவ்வொரு ஆணும் ஒவ்வொரு பெண்ணும் தன்னுள் ஆண் பாதி, பெண் பாதியைக் கொண்டிருக்கிறார்கள். மேலும் ஆணின் இடப்பக்கம் பொதுவாக பலம் குறைந்த பகுதியான தால் இடப்பாகம் பெண்ணாகவும், பெண்ணின் வலப்பக்கம் பலமாக இருப்பதால் பலம்கூடிய வலப்பகுதி ஆணாகவும் கருதலாம். ஆண் என்றும் தன் இடப்பக்கத்தில் பெண்ணுடனும் பெண் தனது வலப்பக்கத்தில் ஆணையும் சேர்த்து நிற்பதைப் பொதுவாகக் காணலாம்.

பெண்ணுக்கு மாதம் ஒருமுறை ஏற்படும் அத்தினத்தை கணவன் மனைவி ஒருவரை ஒருவர் நேசிக்கும் தினங்களாக மாற்றுங்கள். மனநிலை ஏறி இறங்கும் (Mood swings) அத்தினங்களை நேசிக்கும் தினங்களாக மகிழ்ச்சியான தினங் களாக மனதில் உருவாக்கிக்கொள்ளுங்கள். பெண்ணின் தினம் முடிவடைந்து அவள் திரும்பும்போது அவளிடம் படைப்புத் திறன் தோன்றுகிறது. அப்போது அவள் மிகவும் சக்தி பெற்றவளாக இருக்கிறாள். அவளது அந்தச் சக்தி அவளை கர்ப்பிணியாக்குகிறது. காலம் முழுக்க கர்ப்பிணி, பிரசவம், குழந்தை பராமரிப்பு, வளர்ப்பு, பேரப்பிள்ளைகள் பராமரிப்பு என்று வீட்டுக்குள் சுழல்கிறது.

பெண்களுக்கு இயற்கையாக அமைந்த இந்த மகா சக்தியைப்பற்றி கனடாவில் தலைசிறந்த குளிர்கால ஒலிம்பிக் வீராங்கனையான சின்டி கிளாசின் (Cindy Klassen) ஒருமுறை பின்வருமாறு குறிப்பிட்டார்:

'எனது மாதவிலக்கு நாட்கள் முடிந்தவுடன் எனக்குள் ஒரு அபாரசக்தியை உணர்வேன். அந்நாட்களில் வலுவான ஆற்றல்கள் வெளிப்படும். எனது ஓட்டப் பயிற்சி நேரத்தில் வழமையை விட எனது ஓட்ட வேகம் அதிகரிக்கும். அந்த வேகத்தை மையமாக வைத்தே எனது சாதனைகளை நிலைநாட்டியுள்ளேன்' என்கிறார். இவர் 2006-ஆம் ஆண்டு இத்தாலியிலுள்ள ரியூறின் (Turin) நகரில் நடந்த குளிர்கால ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டியில் 5 பதக்கங்களை தனக்கு உடைமையாக்கிய கனடாவின் தலைசிறந்த விளையாட்டு வீராங்கனை ஆவார். அவரது படைப்புத் திறன் வேறு ஆற்றல்களுக்கு அவர் மனம் திரும்பாமல் தடுத்து

வைக்கப்படுகிறது. பெண்ணிற்கு ஏற்படும் தினங்கள் ஆணிற்கும் உண்டு. ஆனால் அவனுக்கு உடல் ரீதியான வெளிப்பாடு இல்லாததால் இரகசியமாகிவிடுகிறது. சில ஆண்கள் வேறு ஆக்கபூர்வமான பணிகளுக்கு தமது சக்தியை திசைதிருப்பி உலகப் புகழ் படைப்புகளைச் செய்தார்கள்.

பெண்ணின் தினங்களில் தோன்றும் சக்தி அவளுக்கு மற்றைய நாட்களில் தோன்றாது. இத்தகைய நாட்களில் ஆக்கபூர்வமான பணிகளில் இறங்கி அவர்களால் வெற்றியடைய முடியும். கூடாத நாட்களாகக் கணித்து தலைமறைவாகி விடாதீர்கள். இந்த நாட்கள் அழகானதாக மாறி ஆனந்தமாகி விடும். ஆண், பெண் எல்லோர் வாழ்விலும் மாறும் காலங்கள் என்று உண்டு. உடலியல் மாற்றங்கள் உண்டு. இந்த மாற்றங்களை இயல்பாக ஏற்றுக்கொள்ள வேண்டும். இவைகள் எல்லாம் சுரப்பிகளின் வேலைகள்.

தமது சக்தியை படைப்பிற்குத் திசைதிருப்பியவர்களில் முக்கியமான ஆண்கள் புகழ்பெற்ற ஓவியரான டார்வின்ஸி, சிற்பி மைக்கேல் ஆஞ்சலோ, ஓவியர் பிக்காஸோ, இலக்கியப் படைப்பாளர் சேக்ஸ்பியர், விஞ்ஞானி ஆல்பேட் ஜன்ஸ்ரைன், விண்வெளி முதல் பிரயாணி யூரிககரின் என்று நீண்ட வரிசை செல்கிறது. ஆன்மீக வழிகாட்டிகளான புத்தர், யேசு, முகமதுநபி இவர்களும் தங்கள் சக்தியை திசை திருப்பித்தான் தாங்கள் அடைந்திருக்கும் அந்த உயர் நிலையை அடைந்தவர்கள்.

வாழ்வின் ஒரு நிலையிலிருந்து இன்னொரு நிலைக்கு மாற்றம் வரும்போது ஒரு விநோத நிலமையும் சேர்ந்து உருவாகும். மகாவீரர், யேசு, புத்தர் போன்றோரிடம் பெண்ணின் இயல்பான சாந்தம், கருணை, அன்பு, பரிவு, இவர்களிடம் அதிகம் நிரம்பியிருந்தது. இவர்களிடம் ஆதிக்கம், அதிகாரம் இருக்கவில்லை. ஜோன் ஒவ் ஆர்க் உடலளவில் பெண். ஆனால் மனதளவில் ஆண் ஆவாள். வட இலங்கையில் வன்னியில் போர்த்துக்கீசரை எதிர்த்துப் போராடிய அரசிகள் (நாச்சிமார்கள்) உடலளவில் பெண்கள். ஆனால் மனதளவில் ஆண்கள். அவர்களிடம் ஆதிக்கம், எதிர்ப்பு, போர் எல்லாம் இருந்தன. ஒவ்வொரு ஆணும் ஆலயங்கள், பள்ளிவாசல்கள், சேர்ச்சுகள் சென்று இறைவனிடம் தங்களை

அன்பானவர்களாக, கருணையுள்ளவர்களாக, சாந்தம் உள்ளவர்களாக மாற்றும்படி பிரார்த்தனை செய்கிறார்கள். பெண்களின் பொதுவான இயல்புகளான அன்பு, கருணை, சாந்தம் போன்றவற்றை அடைய ஆண்கள் பிரார்த்தனை செய்கிறார்கள். ஆண்கள் உள்ளத்தால் பெண்ணாக மாற முயற்சி செய்கிறார்கள். உலகில் சாந்தமூர்த்திகள், அன்பின் சிகரங்கள், கருணையின் உறைவிடங்கள் என எந்த ஆணையும் அவர்களது வாழ்க்கை வரலாறுகளில் புகழாரம் சூட்டினாலும் அவை அனைத்தும் பெண்ணின் பெருமையைத் தான் கூறுகின்றன. அவர்கள் ஆண்களாக இருந்தாலும் மனதளவில் பெண்கள்தான். அதனால் அவர்கள் வரலாறு மூலம் பெண்ணின் பெருமை எத்தகையது என்பதை அறிந்து கொள்ளலாம். புத்தர் மனதளவில் பெண்ணாக இருந்ததால்தானோ என்னவோ ஆண் சீடர்கள் அதிகமாக இருந்தார்கள், யேசு மனதளவில் பெண்ணாக இருந்ததால்தான் ஆண் சீடர்கள் அதிகமாக இருந்தார்கள். பெண் மனம் பொதுவாக ஆண் மனதைத்தான் கவரும். ஆண் மனம் பொதுவாக பெண் மனதைத்தான் கவரும். இது இயற்கை.



## அத்தியாயம் - 12

# உண்மை நிலையை எதிர்கொள்ளல்

தந்திரா உங்களுக்கு அப்பால் செல்லுங்கள் என்கிறது. உடலுறவு இன்பத்தை அடக்கவேண்டும் என்றோ அதை வெறுக்கவேண்டுமென்ற அர்த்தத்திலோ கூறவில்லை. இந்த உலகில் ஆசைகளை அனுபவிக்க எந்தப் பிரக்ஞைத் தன்மையும் தேவையில்லை. அதைப்போல அந்த ஆசைகளை அடக்கவும் எந்தப் பிரக்ஞை நிலையும் தேவையில்லை. இந்த உலகத்தை ஒட்டிய மக்களும் மற்றும் இந்த உலகத்தைத் துறந்த மக்களும் எதிலும் வித்தியாசப்படவில்லை. ஒருவர் முதுகிற்குப் பின்னால்தான் மற்றொருவர் நின்றுகொண்டிருக்கிறார். அவர்களிடம் வித்தியாசம் என்று எதுவுமில்லை. அவர்களுடைய மனங்கள் ஒன்றேதான், ஒருவன் பெண்களைப் பற்றி எண்ணியவாறு கற்பனையில் மூழ்கிக் கனவுகள் கண்டு கொண்டிருப்பான், அடுத்தவன் பெண்களைப்பற்றி கற்பனை பண்ணிப் பயந்துகொண்டு ஓடுகின்றான். இந்த இருவருமே ஒரே நிலையில்தான் இருக்கிறார்கள். இந்த இருவருக்குமே பெண்கள் முக்கியமாகப்படுகிறார்கள். இந்த இருவருக்கும் அடுத்தவர்கள்தான் முக்கியம். தந்திரா சொல்கிறது, எந்த வழியிலும் அடுத்தவர்கள் (ஆண்கள் – பெண்கள்) உங்களுக்கு முக்கியமாகப் படக்கூடாது. நன்றாகப் புரிந்துகொள்வல் மூலமாகவே ஆண் – பெண் உறவு நடக்கவேண்டும். ஆனால் இந்தச் சமூகம் ஆண் - பெண் உறவை சரியாகப் புரிந்து கொள்ளாமல் இருக்கப் பல தந்திரங்கள் செய்கிறது. அதைப்பற்றிப் பேசக்கூடாது, எழுதக்கூடாது, நினைக்கக் கூடாது, ஆராய்ச்சி செய்யக்கூடாது, அந்த உணர்வைத் தவிர்க்க வேண்டும் என்றெல்லாம் வற்புறுத்திவருகிறது. இதனால் அதைப்பற்றி மிகுந்த அறியாமை மக்களிடம் நிலவுகிறது. அந்த அறியாமைதான் மனக்குழப்பம், குடும்ப விரிசல்கள், ஆண்

பெண் பேதங்கள் போன்றவற்றிற்கு அடிப்படைக் காரண மாகிறது.

ஆண் - பெண் உறவு 'பாவம்' என்னும் பயம் ஏற்படுத்தப் பட்டுள்ளது. ஒருவரை ஆட்டிப்படைக்க ஒரே வழி முதலில் பயத்தை ஏற்படுத்துதல், ஓர் ஆணோ அல்லது பெண்ணோ காதல் செய்வதை நேரடியாகப் பார்க்க முடியாது, அதாவது காதலில் ஈடுபட்டும் அதைத் தவிர்த்தும் வருகிறார்கள். காதலின் உண்மையான தன்மை என்ன? அது என்ன கொடுக்கிறது? ஒருவரினுள்ளே என்ன நிகழ்கிறது? வெளியே என்ன நிகழ்கிறது? நிலையாக எதை அடைந்தீர்கள்? ஒரே குழப்பமாகவே உள்ளது. ஆனால் வாழ்வின் 'உண்மை' நிலையை எதிர்கொள்வதுதான் தந்திராவின் நோக்கம். அதற்கு ஆதாரம் ஆண் பெண் உறவு என்கிறது. எந்த நிலையிலிருந் தாலும் பயப்பட வேண்டாம். எங்கேயிருந்தாலும் ஒன்றே யொன்றை விட்டுவிட வேண்டும். அதுதான் 'பயம்.' பயத்திற்கு மட்டும்தான் பயப்படவேண்டும். இதுதான் தந்திராவின் செய்தி. மிகத் தைரியத்தோடு எந்தவிதப் பயமுமில்லாமல் உண்மை நிலையை எதிர்கொள்ளவும். அந்த உண்மை நிலை எப்படியிருந்தாலும் அதன் தன்மையை ஆழமாகப்பாருங்கள். அதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள். கஞ்சத்தனமும், பேராசையும், கோபம், பொறாமை, பாலுணர்வு, களவு எந்த நிலையாக இருந்தாலும் அதன் தன்மையை ஆழமாகப் பார்க்கவும். அதைவிட்டுத் தப்பிச்செல்ல வேண்டாம். மனக் கண்களைத் திறந்து அதற்குள் ஆழமாகப் பிரவேசித்து அதைச் சரியாகப் புரிந்துகொண்டால் அவைகளிலிருந்து விடுதலை யடையலாம். இதுதான் தந்திராவின் அறிவிப்பு.

ஒருவர் இமயமலையில் சுவாமியாக இருந்தாலும் சரி, இந்த உலகத்தில் இருந்தாலும் சரி, எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தாது. ஒன்றை அடக்குதலும், அடக்காமல் ஈடுபடுதலும், இவை இரண்டும் ஒரே செயற்பாடும், ஒரே பலனையும் கொடுக்கும் தன்மை படைத்தது. அவைகளுடைய வெளித் தோற்றம் வெவ்வேறானது. ஆனால் அதன் உள் தன்மை ஒன்றேதான். உண்மை நிலை வாழ்க்கையின் தன்மையையே மாற்றிவிடும். அந்த மாறுதல் பார்க்கும் பொருட்களில் இல்லை. அந்த மாற்றம் உண்மை நிலையை உணர்ந்தவருக்குள்ளேதான்.

அந்த மாற்றம் தானாகவே நிகழ்ந்துகொள்ளும். அவர் வித்தியாசமான உலகத்தை உண்டு பண்ணவில்லை. ஆனால் அவர் வித்தியாசமான ஒரு நிலையை உண்டுபண்ணிக் கொள்கிறார். அவரும் இந்த உலகத்தில்தானிருக்கிறார். ஒவ்வொருவரும் மாறினால் இந்த உலகம் மாறிவிடும். நாம் மாறாமல் எந்த மாறுதலும் ஏற்படாது. இல்லையேல் ஒரே உலகத்தைத்தான் மீண்டும் மீண்டும் பார்ப்போம். விழிப் புணர்வும் (Awareness) பிரக்ஞை நிலையும் (Consciousness) தான் வாழ்க்கையின் தன்மையையே மாற்றிவிடும். பிரக்ஞை நிலைதான் வாழ்வின் எல்லாக் கதவுகளிற்கும் பொருந்தும் ஒரே சாவி எனத் தந்திரா சொல்கிறது. சந்நியாசிகள் என்று தங்களை அறிவித்தவர்கள் தங்கள் வீடுகளில் தங்குவதில்லை. எதற்காக இந்தப் பயம்? எங்கேயிருந்து இந்தப் பயம் எழுந்தது? அவர்கள் சந்தர்ப்பங்களைத் தவறவிட்டதனால் அடையும் பிரம்மச்சரியம் வெறும் பொய்தான். உண்மையில் அவர்கள் தங்களை ஏமாற்றிக்கொள்கிறார்கள். ஒருவர் எதை அடக்கி வைத்திருக் கிறாரோ அவைகள் தொடர்ந்து கனவுகளில் மீண்டும், மீண்டும் வந்து அவர்களைத் தொந்தரவு செய்து கொண்டேயிருக்கும்.

தூங்கும்போது பிரக்ஞையற்ற மனம் விழித்துக்கொண்டு எவைகளையெல்லாம் அடக்கி வைத்திருக்கிறார்களோ அவை களெல்லாம் கனவுகளின் மூலம் தங்களை உறுதிப்படுத்திக் கொள்ளும். கண் விழித்த பின் மீண்டும் அதை அடக்கு கிறார்கள். தூங்கும்போது எப்படி அடக்கமுடியும்? அடக்கும் திறனை இழக்கிறார்கள். அடக்கப்பட்ட ஆசைகள், ஏக்கங்கள், பயங்கள், எதிர்பார்ப்புகள் எல்லாம் கனவாகிறது. காலையில் உதிக்கும் கனவுகள் ஞாபகத்திற்கு கொண்டுவர முடிகிறது. இடைப்பட்ட நேரத்தில் ஆழமாகத் தூங்குவதால் அவைகளை ஞாபகப்படுத்திப் பார்க்க முடிவதில்லை.

**கனவுகளில் மாத்திரம் தங்கள் உண்மையை எதிர்கொள் கிறார்கள், கனவுகளில் உண்மையாக இருக்கிறார்கள், கனவு கலைந்ததும் உண்மை நிலையை எதிர்கொள்ள அஞ்சு கிறார்கள். அனைவருக்கும் என்றும் உண்மை நிலையுடன் வாழும் தைரியம் தேவை.**



## அத்தியாயம் - 13

# ஆண், பெண் பாகுபாடு அரசியலாகிவிட்டது

எல்லோருமே ஆணாகவும் இருக்கிறார்கள், பெண்ணாகவும் இருக்கிறார்கள். இந்தச் சமுதாயம் ஆண் என்றால் ஆண்தான்; பெண் என்றால் பெண்தான் என்று உருவேற்றி வளர்க்கிறார்கள், இது இயற்கைக்கு விரோதமானது. ஓர் ஆண் அழுதால் பெண்ணைப்போல் அழுகிறாய் என்று கேலி செய்யப்படுகிறான், ஆண் அழக்கூடாதென்றால் இயற்கை ஆணுக்கு கண்ணீர்ச் சுரப்பிகளை வழங்கியிருக்காது. ஒரேயளவு கண்ணீர்ச் சுரப்பிகள்தான் இரு பாலாருக்கும் உண்டு.

ஆண் அழக்கூடாதென்பது செயற்கையானது. ஓர் ஆணின் மென்மையான உணர்வுகள் வலுக்கட்டாயமாக உள்ளே அமுக்கிவைப்பது அரக்கத்தனம் ஆகும். ஆட்டமும், ஓட்டமும், விளையாட்டும், உற்சாகமும், சுறுசுறுப்புடனும், துணிச்சலுட னும் கருமமாற்றும் பெண்களைப் பார்த்து சமுதாயம் ‘ஆண்’ என்கிறது. ஆண், பெண் பாகுபாடு அரசியலாகிவிட்டது. சில சமயங்களில் ஒரு பெண்ணின் கோபம் ஓர் ஆணின் கோபத்தை விட உக்கிரமாக இருக்கிறது, அப்போது அவள் ஓர் ஆணைவிட வல்லமையாக இருக்கிறாள். அதேபோல் சில மென்மையான நேரங்களில் ஓர் ஆணின் அன்பு ஒரு பெண்ணின் அன்பைவிட ஆழமாக, மென்மையாக, அழகாக இருக்கிறது. அந்த இரண்டு வேறுபாடுகளும் மனித னுடையவைதான். ஆணும் பெண்ணுமாய் ஒரு கலவையாக இருப்பது ஒவ்வொரு மனிதனின் இயல்பு. உங்களை நீங்கள் அவதானித்தால், உங்களை நீங்கள் மீளாய்வு செய்தால், நடவடிக்கைகளை நீங்கள் அணுகிய விதங்கள், கையாண்ட

விதங்கள், மேற்கொண்ட வகைகள், யோசித்த விதங்கள் என்று பகுத்து ஆராய்ந்து பார்த்தால் எத்தனை நிமிடம் நீங்கள் ஆணாகவும், எத்தனை நிமிடங்கள் பெண்ணாகவும் இருக்கிறீர்கள் என்பதைத் தெரிந்துகொள்வீர்கள். இதைத் தெரிந்துகொண்டால் ஆண், பெண் பற்றிய விழிப்புணர்வு அதிகமாகும்.

உங்களுக்குள்ளேயிருக்கும் ஆண் களைத்துவிட்டால் உங்களுக்குள்ளிருக்கும் கருணையான பெண்ணிடம் சென்று விடுவீர்கள். உங்களுக்கு உள்ளிருக்கும் அன்பான, கருணையான பெண் சலிப்படைந்துவிட்டால் உங்களுக்குள் இருக்கும் ஆணை கொண்டு வாருங்கள். உங்களை மாற்றியமையுங்கள். இந்த மாற்றம் போரிடவும், எதிர் நீச்சலடிக்கவும், துணிந்து செல்லவும், உதவும். இது இயற்கை செய்த ஏற்பாடு. ஆனால் இந்தச் சமுதாயம் பல தவறான விசயங்களைக் கூறிக்கொண்டே இருக்கிறது. ஆண் எப்போதும் ஆணாக இருக்கவேண்டும் என்று கற்பிக்கப்படுகிறது. பெண் அடங்கிப் போகக்கூடியவளாகவும் மென்மையாகவும் இருக்கவேண்டும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

தன்னிடமில்லாத ஏதோ ஒன்று பெண்ணிடம் இருக்கிற தென்று ஒவ்வோர் ஆணுக்கும் தெரியும், பெண்ணிடம் காதல் வயப்படுகிறான். அப்போதுதான் பிரச்சினை ஆரம்பிக்கிறது, பெண்ணைச் சார்ந்திருக்கும் உணர்வு அவனை ஆட்டிப் படைக்கிறது. அவள் மேல் ஆதிக்கம் செலுத்தி அவளைத் தனது கைப்பிடிக்குள் வைத்திருக்கத் திட்டம் தீட்டுகிறான். தனக்கு மட்டுமல்ல மற்ற ஆண்களுக்கும் அவள் அழகாகத் தெரிகிறாள் என்பதால் அவனின் அகங்காரம் அதிகமாகிறது.

5000 வருடங்களுக்கு முந்திய மனுஸ்மிருதி போன்ற நூல்கள் பெண்ணினத்தை வன்மையாகக் கண்டிக்கின்றன. பெண்களைச் சிறைக்கைதிகள் போல் வைத்திருக்க வேண்டும் என்று கூறுகின்றன. உண்மையில் பெண்களை அப்படித்தான் நடத்தினார்கள். இந்த உலகில் எத்தனையோ நாடுகள் எத்தனையோ கலாச்சாரங்கள், பழக்கங்கள், முறைகள் இருந்தாலும் பெண்ணின் நிலை மட்டும் உலகம் முழுக்க ஒரே மாதிரித்தான் இருக்கிறது. ஆணுக்கு பயந்துதான் நடமாட

வேண்டி இருக்கிறது. சாணக்கியரின் அர்த்தசாஸ்திரத்தில் அரசு எப்படியிருக்க வேண்டும் என்று கூறியிருந்தாலும் பெண்களை அடக்கிவைத்தல் பற்றியும் கூறப்பட்டுள்ளது. அரசர்கள் பெண்களை கோழிப்பண்ணை போல்தான் அந்தப்புரம் என்ற பெயரில் காலம்காலமாக அடைத்தும், அடக்கியும் வைத்திருந் தார்கள். ஆணினம் பெண்மீது வல்லரசாகவே நடந்து வந்திருக்கிறது. பெண்ணைத் தன் கட்டுடப்பாட்டிற்குள் வைத்திருக்க வேண்டும் என்பதற்காக ஆண் அவள்மேல் பழிபோட்டுக் கொண்டேயிருந்தான். பெண்களைவிட ஆண்தான் உயர்ந்தவன் என்பதைக் காட்ட விரும்பியதுதான் காரணம். பெண்ணைத் தன் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்க வேண்டும் என்பதற்காகத்தான் பெண்ணைத் தன்னோடு ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டே இருக்கிறான். பெண் தன்னைவிட உயர்ந்தவள் என்பதை ஆண் அறிந்து விட்டதால் தான் பெண்ணிடம் பயம் ஏற்பட்டது. அதனால்தான் எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பே அடிமைப்படுத்த ஆரம்பித்தான்.

எந்த நிலையிலும் ஒரு பெண் ஆணைவிட உயர்ந்தவள். உடலுறவில் ஆண் ஒருமுறை உச்சக்கட்டத்தை அடைந்தவுடன் அவனது உடலின் physical response உடனே குறைகிறது. ஆனால் ஒரு பெண்ணின் நிலை அப்படியல்ல. உச்சத்தை அடைந்தவுடன் ஆண் சோர்ந்து விடுவான். அதனால் உடலுறவின் உச்சக்கட்டம் என்ன என்பதையே பெண்ணிட மிருந்து மறைத்துவிட்டான். ஆணுடைய இன்பம் அவனது பிறப்புறுப்பிலும் மூளையில் ஒரு சிறிய பகுதியிலும் மையம் கொண்டிருக்கிறது. ஆனால் பெண்ணின் உடல் முழுவதும் மிகவும் மென்மையானதாக இன்பத்தைத் தூண்டுவதாக இயற்கையாக அமைந்துள்ளது. அதனால்தான் பெண்ணைத் தொட்டவுடன் மின்சாரம்போல் அவனுள் பாய்கிறது. அவனது அவசரம் அவனைச் சில நொடிகளிலேயே தன்னை மறக்கப் பண்ணி, அவன் பூமிக்குத் தூக்கி எறியப்படுகிறான். ஆனால் பெண் அப்படியில்லை. ஆரம்பநிலையிலே இருப்பாள். அவனுக்கு எல்லாம் முடிந்துவிட்டது போலாகி விடுகிறது.

பொதுவாக பெண்களில் தற்கொலை மிகக் குறைவு, தற்கொலை செய்யப்போவதாக கணவனை மிரட்டுவாள், ஆனால் செய்யமாட்டாள். பொதுவாக ஆண்கள்தான்

தற்கொலை செய்வதில் சற்று அதிகமானவர்கள். அவர்களின் எதிலும் அவசரத்தனம்தான் காரணம். பெண்ணின் தற்கொலைமுறையில் அவதானமானவள், கொடூரமிருக்காது. அனேகமாகப் பெண்களைக் காப்பாற்றிவிடலாம். அவளுடைய தற்கொலை முயற்சி அவளுடைய எதிர்ப்பைக் கடுமையாகத் தெரிவிக்கும் ஒரு வழிதான். அது ஒரு எச்சரிக்கை. அவளுடைய அந்த முயற்சியே கணவனுக்கு மிகப்பெரும் தண்டனை. எல்லோர் கண்ணுக்கும் அவர் ஒரு குற்றவாளி. ஒரு பெண் மிக, மிக அபூர்வமாகத்தான் கொலை செய்வாள். கோபத்தில் ஏற்படும் வலிமையில் ஆணைவிடப் பெண் 8 மடங்கு அதிகமானவள் என்கிறார் சாணக்கியர். ஆணுக்குத் தசைப் பிடிப்புள்ள வலுவான உடற்கட்டு இருக்கிறது. உடல் உழைப்பிற்கு ஏற்ற ஆள் ஆண்தான். ஆணிடம் கொடூரம் வன்முறை இருக்கிறது. பெண்ணின் அன்பு, கருணை, மென்மை இவை பெண்ணின் பலவீனங்கள் என்ற கருத்தைப் பெண்ணின் மனதில் உருவேற்றி ஆண் வைத்திருக்கிறான். எல்லாச் சிறந்த குணங்களும் ஒரு பெண்ணிடம் இருக்கின்றன். ஓர் ஆணின் விழிப்புணர்வு அதிகரிக்கும்போது அவனிடம் பெண்மையின் குணங்கள்தான் மிகுதியாகின்றன. மகான்கள், பெரியவர்கள், மகாத்மாக்கள் என்று நாம் வழிபடும் உன்னதமானவர்களின் குணங்களும் பெண்ணின் குணங்கள்தான். புத்தர், யேசு, மகாவீரர் இவர்கள் பெண்மையின் குணங்கள் மேலோங்கிய வர்கள். அந்தப் பெண்மை அவர்களுள் மேலோங்க மரியாதைக்கும், வழிபாட்டிற்கும் உரியவர்களாகின்றார்கள். அந்த நிலையை அடைய அவர்கள் பல பரிமாணங்களைத் தாண்டவேண்டியிருந்தது. பெண்ணிடம் இயல்பாகவிருக்கும் அந்தக் குணங்களை ஆண் காலம் காலமாக அவதூறு செய்கிறான். ஆணிடமிருக்கும் பெண்மைக் குணங்களை எடுத்துவிட்டால் மிஞ்சி நிற்பது வெறும் அரக்க குணங்கள்தான்.

இயல்பாக அன்பு அதிகமானவள் பெண், வலுக் கட்டாயமாக கணவனின் சிதையில் குதிக்கும்படி கூறினாலும் அவள் அதைச் செய்திருக்கிறாள். அந்தத் தைரியம் இருந்திருக்கிறது (மிகக் கொடூரமான பெண் அடிமைத்தனம்). ஆனால் மென்மையான பெண்ணிற்கு அந்தத் தைரியம் இருந்திருக்கிறது. அன்பிற்கு அதற்கே உரிய பலமும் உண்டு. உதாரணமாக தனது கருப்பையில் ஒரு குழந்தையை 9-10

மாதம் சுமக்க அதீத வலிமையும், அளவில்லாத அன்பும் வேண்டும். எதையும் தாங்கும் இதயம் உண்டு. ஓர் உயிரை உருவாக்கி உயிருக்கு உடல்கொடுத்து தனது உயிர்ச்சத்தால் மனிதப் பிறவியாக மாற்றி தன்னுளிருக்கும் அனைத்தையும் குழந்தைக்குக் கொடுக்கிறாள் பெண். பிறந்த குழந்தையை வளர்ப்பது எளிதானதல்ல. உலகிலே மிகக் கடினமானது அதுதான். எந்த ஆண் சாதனையாளர்களிடமும் பிறந்த சிசுக்களை எவரது உதவியுமின்றி தன்னந்தனியாக வளர்க்கக் கேட்டுப் பாருங்கள். அதற்குப் பிறகுதான் அவர்களது சாதனைகளை ஏற்றுக்கொள்ள வேண்டும். பிறந்த குழந்தைகளை சரியாக வளர்க்க முடியாவிட்டால் அல்லது வளர்க்கத் தெரியாதென்றால், அல்லது தயங்கினால் உங்கள் சாதனைகள் ஒரு குழந்தையை வளர்க்கும் தாய்க்கு பிந்தியதுதான். நீங்கள் அந்தத் தாயின் வலிமைக்கு ஈடாக முடியாதவர்கள்தான். ஒரு தாயின் சாதனை சாதாரணமானதல்ல, ஒருசில மணி நேரங்கள்கூட தனித்து ஒரு சிறு குழந்தையை ஆண் தன்னுடன் வைத்திருப்பதைத் தவிர்ப்பதற்காக பல காரணங்களைக் கண்டு பிடிப்பான். தன்னந்தனியாக ஒரு குழந்தையை வளர்ப்பதற் குரிய வலிமையும், திறமையும், அன்பும் உள்ள ஆண் உலகில் இல்லை. பிறந்த குழந்தையை பிறர் உதவியில்லாமல் வளர்க்கக் கூடிய ஆணும் இந்த உலகில் இல்லை.

கருணை, அன்பு, அழகு, நேர்மை, வாய்மை, நம்பகத்தன்மை இவை எல்லாம் பொதுவாக பெண்களின் குணங்கள். ஆண்மையின் குணங்களைவிட இவை மிக உயர்ந்தவை. ஆனால் ஆணின் குணம்தான் உலகை ஆளுகின்றன. போரை ஆண் குணம் தீர்மானிக்கிறது. ஆனால் கூடுதலாக பாதிக்கப்படுவது பெண்கள். போர்புரிவதற்கு வெறுப்பு வேண்டும், அழிக்கும் கொடுங்குணம் வேண்டும், மனித குலத்தை நிலைகுலைய வைக்கும் வலிமை இது. பரிணாம வளர்ச்சியில் நாம் இன்னும் வளர்ச்சியடையவில்லை என்றுதான் இந்த யுத்தங்கள், போர்கள் காட்டுகின்றன. மனிதகுலம் வெட்கப்பட வேண்டியதற்குப் பதிலாக பெருமை யாக அல்லவா எடுத்துக்கொள்கிறார்கள். எத்தனை பேர் மரணம் என புள்ளிவிவரங்களை வெளியிட ஆவலாக உள்ளார்கள். இறந்தவர்கள் தொகைகளைப் பார்த்து அதிருப்திபோல தொகை கூடியல்லவா இருக்கவேண்டும் என்பதுபோல வாயைச்

சுழித்துக்கொள்கிறார்கள். ஓர் ஆண் கடுமையான பயிற்சியால் மட்டும் பெறக்கூடிய குணங்களான அன்பு, கருணை, சாந்தம், பொறுமை போன்றவைகள் ஒரு பெண்ணிடம் இயல்பாகவே அமைந்திருக்கின்றன. ஆனால் ஓர் ஆணுடைய மிகப் பெரிய பலம் சவாலைச் சந்திக்கும் வீரம்தான்.

பெண்மையின் குணங்கள் உலகெங்கும் பரவியிருந்தால் மனித இனத்தைக் கொஞ்சம், கொஞ்சமாக அழித்து வரும் போர்கள் ஒழியும். நாட்டு எல்லைகள் மறைந்து ஒரே உலகமாக நாம் எல்லோரும் அமைதியாக அன்போடு வாழலாம். இந்த உலகத்திற்கே ஒரு தனி அழகு வந்துவிடும். மனதின் ஆழத்தில் நிகழும் நிரந்தரமான மாற்றங்கள்தான் இந்த உலகத்தை மாற்றமுடியும். தலைமைப் பொறுப்புகளில், நிர்வாகப் பொறுப்புகளில், ஆட்சிப் பொறுப்புகளில் பெண்கள் அதிகளவில் ஆண்களைவிட இருந்தால் போர் அதிகளவில் இடம்பெறாது, உலகம் வேறொரு உலகமாக அமையும். இராணுவத் தளபதியாக, பொலிஸ்மாஅதிபராக பெண்களிருந் தால் கலகங்கள், அநாவசியமான துப்பாக்கிச்சூடுகள் இருக்காது, அழிவுகள் இருக்காது, சமாதானத்திற்கான வழிகள் காணப்படும். இந்த உலகம் தாய்மை உணர்வால் நிரப்பப்பட வேண்டும். ஆண், 'பெண்ணை' நன்றாகப் புரிந்துகொண்டதுபோல் காட்டிக்கொண்டு, ஆனால் புரிந்துகொள்ளாமலே இருக்க விரும்புகிறார்கள். ஆண் - பெண் பாகுபாட்டின் மூலம்தான் ஆண், தன் குடும்பத்தலைவன் என்ற அந்தஸ்தை தன்னுடன் வைத்திருக்கிறான்.

*(இது தந்திராவின் அடிப்படைக் கருத்தை மையப்படுத்தி எழுதப்பட்ட அத்தியாயமாகும்.)*



## அத்தியாயம் - 14

# கௌரவமான பெண் என்பவள் ஆணின் படைப்பே!

கௌரவமான பெண் என்பவள் ஆணின் படைப்பு, உண்மையான பெண் பிரபஞ்ச இருப்புநிலையின் படைப்பு. உங்கள் மனைவியை, காதலியைத் துறந்தால்தான் உங்களுக்கு மெய்யறிவுகிட்டும் என்று மதங்கள் உங்களுக்குக் கூறுகின்றன. உடலுறவைக் கண்டிக்காத மதங்களே இல்லை. காதலையும் உறவையும் மதங்கள் இயல்பான நிகழ்வு என்று ஏற்றுக் கொள்வதில்லை. உங்களுக்குள் ஆழமாக ஊறிப்போயிருக்கும் இந்த மனக்கட்டுத்திட்டம் உங்களுக்கு உண்மையென்றே தோன்றுகிறது. கணவன் என்ன செய்தாலும் அவனை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று சமுதாயம் அவளை உருவேற்றியிருக்கிறது. 'கல் என்றாலும் கணவன் புல் என்றாலும் புருஷன்' என்று அவளுக்கு மனக்கட்டுத்திட்டம் போட்டு சமுதாயம் பெண்ணை பலிக்கடாவாக்குகிறது. அதையும் அவள் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று சமுதாயம் அவளை உருவேற்றுகிறது. அவளால் எப்படி மகிழ்ச்சியாக வாழமுடியும்?

கணவன் - மனைவியோடு சண்டைபோடும் அதே படுக்கை அறையில்தான் உறவும் கொள்கிறார்கள். 'வாதம்'புரிந்து களைத்த பின்பு ஒரு சமரசம் தேவைப்படுகிறது. அந்தச் சமரசம்தான் அந்த உடலுறவு. ஆனால் உண்மையில் அன்பானவராக இருந்தால், உங்கள் இருவரையும் இணைக்கும் அந்த அறையைச் சண்டைக்குப் பயன்படுத்தியிருக்கலாமா? 'உயிர்கள்' முதல் முதலில் உருவாவது அங்குதானே, அந்த இடம் இருவர் ஒருமையாகும் புனிதமான இடமல்லவா? உங்கள் வீடு பல உல்லாச அறைகளையும், மண்டபங்களையும், நீச்சல்

தடாகங்களையும், பூங்காக்களையும் கொண்ட பளிங்கு அரண்மனையாக இருந்தாலும் மிக்க சக்திவாய்ந்தது உங்கள் பள்ளியறைதான். அந்தப் பள்ளியறை ஒரு தியான மண்டபம் போன்று மனதை ஒருநிலைப்படுத்தி அதற்கும் அப்பால் செல்ல உதவகிறது. இருவரும் ஒருவராகி அவர்களை ஒருநிலைக்கு அப்பால் கொண்டு செல்வது பள்ளியறைதான். **'உறவும் ஒரு தியானம்தான்' என்கிறது தந்திரா.** தியான அறை எப்படிப் புனிதமாகிறதோ அதே மாதிரித்தான் புனிதமான படுக்கை யறைக்குள் ஆழ்ந்த பக்தியுடன் நுழைய வேண்டும்.

சினிமாக் காட்சிகள் படுக்கையறையிலே மணங்கமழும் மலர்களால் அலங்கரித்து தூபதீபங்கள் ஏற்றி தம்பதிகள் பக்தியுடன் நுழைவதாகக் காட்சிகள் அமைத்திருப்பார்கள். அங்குள்ள மலர்களின் மணங்களும், தூப வாசனைகளும் உணர்வுகளைத் தூண்டுவதாக இருந்தாலும் அந்த அறையை விசேடமாக அலங்கரித்து வித்தியாசப்படுத்தி முக்கியப் படுத்தப்பட்டிருக்கும். மனைவியும் கணவனும் சேர்ந்து சிறிது நேரம் நடனமாடி மகிழ்வாகப் படுக்கைக்குச் செல்வது நல்லது. தங்குதடையின்றி தன்னிச்சை செயலாக காதல் வெளிப்பட வேண்டும். ஒருவர் கையை ஒருவர் பற்றிக்கொண்டு நீங்கள் ஆடும் நடனம் அந்த இடத்தில் சூழ்ந்திருக்கும் நறுமணம் இந்த மாதிரி இதமான சூழ்நிலையில் உறவு தன்னிச்சை செயலாக ஏற்பட்டால் அந்த உறவிற்கும், அந்தக் காதலுக்கும் ஒரு புனிதத்தன்மை கிடைத்துவிடும்.

ஆணிற்கும் பெண்ணுக்குமுள்ள நுட்பமான வேறுபாட்டை இருவரும் தெரிந்துகொள்ள வேண்டும். பெண் சக்தியை வாங்கிக்கொள்கிறாள். அதுதான் இயற்கையின் நியதி. ஏனென்றால் அவள் தாயாக வேண்டும். அவளது தயக்கங்களை ஆண் களைய வேண்டும். இல்லாவிட்டால் வெறும் குழந்தை பிறக்கும் சாதனமாகத்தான் கணவன் மனைவி உறவு அமைந்துவிடும்.

கணவன், மனைவி சுவாரசியம் உள்ளவர்களாகவும் உண்மையுள்ளவர்களாகவும் வாழவேண்டும். அதுதான் 'ஹரி ஓம் தத்சத்.' இதன் பொருள் என்ன? இதுதான் உண்மை, இதுதான் சத்தியம் என்பதே. ஆண் பெண் உறவில் இந்தச்

சமுதாயம் உருவாக்கிய கோட்பாடுகளுக்கு நீங்கள் பலியாகி விட்டீர்கள். உங்கள் மனதில் குற்ற உணர்வை உருவாக்கி உங்கள் வாழ்க்கையை இலேசாக எடுத்துக்கொள்ளாமல் தடுத்த இந்தச் சமுதாயம் உங்களை பலிக்கடாவாக்கியிருக்கிறது. **'நீங்கள் உங்கள் மனைவியோடு உறவுகொள்ளும்போதுகூட ஏதோ பாவம் செய்வதாகத்தான் நினைக்கிறீர்கள். அதை ஒரு ஆழ்நிலைத் தியானமாக மாற்றுங்கள், ஒருவருக்கொருவர் சமர்ப்பணம் செய்துகொள்ளுங்கள்' என்கிறது தந்திரா.**

உறவைக் கண்டிக்காத மதங்களே இல்லை. மனைவியைக் கணவனைத் துறந்தால் உங்களுக்கு மெய்யறிவு கிட்டும் என்று அவை நிர்ப்பந்திக்கின்றன. உங்கள் சக்தியை ஆக்கபூர்வமாகப் பயன்படுத்தினால் குற்ற உணர்வு இருக்காது. இந்தப் பிரபஞ்சத்தின் ஆக்கப் பணிகளில் பங்குகொள்வது மன நிறைவைக் கொடுக்கிறது. ஆக்கும் திறம்கொண்ட ஒரு மனிதனிற்கு வாழ்க்கையின்மேல் ஒருபோதும் வெறுப்பு இருக்காது, வாழ்க்கையை எதிர்க்கமாட்டான், அதாவது அன்பை எதிர்க்கமாட்டான். நீங்கள் மாறுவதற்கான வழிகளை காணுங்கள், உங்களை மாற்றுங்கள். உண்மையான மனிதராக மாறுங்கள், ஒருவர் மேல் ஒருவர் நிபந்தனை போடாமல் கட்டுப்பாடற்ற சுதந்திரத்துடன், முழுமையாக, அன்பாக, காதலாக வாழ்ந்து கொள்ளுங்கள். காதலற்ற உறவு சலிப்படைய வைக்கும்.

ஆழ்நிலை சிந்தனையில், ஆழ்நிலை தியானத்தில் கரைகண்ட முனிவரான வாத்சாயனர் 5000 வருடங்களிற்கு முன்பே 84 நிலைகளை வகுத்து காம சூத்திரத்தை அருளி யிருக்கிறார். அந்த நூலிற்கு இணையான நூல் இதுவரை உலகில் இன்னும் வெளிவரவில்லை. மேற்கத்திய நாடுகளும் அந்த காம சூத்திரத்தை அடிப்படையாக வைத்துத்தான் ஆராய்ச்சிகள், ஆய்வுகள் செய்கிறார்கள். தெளிவாகச் சிந்திக்கும் திறன்கொண்ட ஆழ்நிலை சிந்தனையில் வசப்பட்ட ஒரு ஞானியால் மட்டுமே அப்படி ஒரு நூலை உருவாக்க முடிந்தது.

வாத்சாயனர் 3-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்ததாக சில ஏடுகள் தெரிவிக்கின்றன. எனினும் இது ஒரு ஊகமே. இவர் கங்கைக் கரையிலுள்ள பட்டாளிபுத்ரா (பட்னா)வில் கல்வி ஞானமுள்ள

பிராமண வேதியர் குடும்பத்தில் பிறந்தவர். காசியில் வேதம், உபநிடதம் கற்று பாண்டித்தியமானவர். அங்கு காம சூத்திரத்தைப் படைத்தார். தந்திராவும் கூறுவது போல இவ்ரும் மனமும் ஆத்மாவும் சேர்ந்ததுதான் 'காம' என்கிறார். 'புலன் இன்பம்' ஆசையைத் தீர்ப்பதற்காக அல்ல. அது ஆன்மிகத்துடன் தொடர்புடையது என்கிறார். வாத்சாயன முனிவர், சந்திரகுப்தர் காலத்தைச் சேர்ந்தவர். அவரது ஆட்சியில் இந்தியா செழிப்படைந்து இருந்ததாகவும் அப்போது இசை நடனங்கள் அதிக முக்கியம் அடைந்ததும், காம சூத்திரம் முக்கியம் அடைந்ததாகவும், விஞ்ஞானத்தை பற்றிய அறிவும் மக்கள் மத்தியில் நன்கு பரவியிருந்ததாகவும் பழைய ஏடுகள் குறிப்பிடுகின்றன. காம, அ(ர்)த்த, தர்மா மூன்றும் செவ்வனே செய்த ஒருவர் மோட்சமடையலாம் என்று காம சூத்திரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இதையே தந்திராவும் கூறுகிறது.

காமம் - அன்பு, காதல், உறவு.

அ(ர்)த்த - பொருளாத்ாரம், அரசியல், நடவடிக்கைகள்.

தர்ம - ஆன்மிக ஈடுபாடு.

இந்த மூன்றும் செவ்வனே ஈடுபட்டு முழுமையாக ஒருவர் தன்னை அவற்றில் சமர்ப்பித்து முழுமையாக அனுபவித்து பூரண வாழ்க்கை வாழ்ந்திருந்தால் அத்தகையவர் மோட்சத்தை அடைவார் என காம சூத்திரம் கூறுகின்றது. உடலுறவிலுள்ள பல நிலைகள் தெய்வங்களின் பெயரால் காம சூத்திரத்தில் குறிப்பிடப்படுகின்றது. **சாந்தோக்கிய உபநிடதத்தில் ஆனந்தம், மகிழ்ச்சி, இன்பம் இதுதான் வாழ்க்கையின் அடிப்படை என்றும் பாலியல் உறவின் ஊடாக மோட்சம் அடையலாம் என்றும் கூறுகின்றது.**

ஆண் - பெண் உறவு நிலைகளைப்பற்றி முதன்முதல் நூல் சீனாவில் கி.மு 2700 காலப் பகுதியில் வெளிவந்தது. அதற்குப் பின்பு பல நூல்கள் சீனாவிலும், இந்தியாவிலும் வெளிவந்தன. ஆனால் 'காம சூத்திரா'தான் பாலியல் தொடர்பான விஞ்ஞான ஆராய்ச்சி நூல் போல் முதன்முதல் உலகில் வெளியான நூல். இதைத் தழுவிப் பல நூல்கள் பல மொழிகளில் வெளிவந்து விட்டன. உலகில் அதிக மொழியில் மொழிபெயர்க்கப்பட்ட நூல் இதுதான். பேச்சாளர்கள், எழுத்தாளர்கள் ஏதோ, ஏதோ

நூல்கள் எல்லாம் பல நாடுகளில் பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டதாகக் கூறுவார்கள். ஆனால் காம சூத்திரம்தான் உலகிலே அதிக மொழியில் வெளிவந்த நூல் என்று கூறுவதில்லை. வாத்சாயனர்தான் இந்த உலகில் எல்லோராலும் ஏற்கப்பட்ட பொது மனிதர். மொழி, நிறம், மதம், நாடு என்று எல்லா எல்லைகளையும் கடந்த உலக பொதுநாயகன் இவர். இவரை உலகின் முதல் பொது பிரஜை என்று அழைக்கலாம். உலகத்தில் எந்தவிதத் தடையுமின்றி ஏற்றுக்கொள்ளப்பட்டது இவரது நூல்தான்.

இவர் மறந்த மனிதராகவே இருக்கிறார். ஏன்? மதம், சமுதாயம் ஆண்-பெண் உறவை அசிங்கமாக்கிவிட்டது. அதே சமுதாயம் உடலுறவும் கொள்கிறது. பெண்களை ஒரு மோகப் பொருளாக ஆண்கள் உபயோகப்படுத்தக்கூடாது என்கிறது தந்திரா. தங்கள் வேட்கையைத் தணிக்க சுயநலமாக அவள் உடலைப் பயன்படுத்தக்கூடாது என்பதே தந்திராவின் நிலை.

**'ஆண், பெண்ணின் அன்பான உறவின் மூலமாக அந்தப் பேரானந்த சமாதி நிலையை அடைய முடியும், அந்த சமாதி நிலையை அறிந்துகொண்டால் அந்த உறவு பேரின்ப நிலையை ஞாபகப்படுத்தும், அப்போது இந்த உலகத்திலுள்ள அனைத்துமே கடவுளால் நிரப்பப்பட்டிருப்பதை உணர்த்தும்' எனத் தந்திரா கூறுகிறது.**

**பெண்களுக்கு வரைவிலக்கணம் கூறுபவர்கள் ஆண்கள். பெண் எப்படிப்பட்டவளாக இருக்கவேண்டும், அவர்கள் எப்படி வாழ வேண்டும், என்னென்ன கடமைகள் செய்யவேண்டும் என்று பெண்களுக்கு விதிமுறைகளை உருவாக்கி வைத்துள்ளான்! கௌரவமான பெண் என்பவள் ஆணின் சௌகரியத்திற்கான ஒரு கற்பனைப் படைப்பே!**

ஆணின் வெற்றிக்குப் பின்னால் பெண் இருக்கிறாள் என்ற கூற்று பெண்ணைத் தந்திரமாக 2-ஆவது நிலைக்குத் தள்ளுகிறது. பெண்ணின் வெற்றிக்குப் பின்னால் ஆண் இருக்கிறார் என்று கூறுவதில்லை. ஏன்? ஆண் இரண்டாவது நிலையாகிவிடுவார்... பெண்ணுக்குப் பின்னால் என்றால் அது ஆணின் ஆணவ மனதைக் காயப்படுத்திவிடும் என்பதனாலேயே இருக்கலாம். இலக்கியங்களிலும் கதைகளிலும் பெண்ணை பொங்கியெழும்

ஆவேசம் கொண்ட பெண்ணாகவோ அல்லது சரணாகதி யடைந்த பயந்த பெண்ணாகவோ வெளிக்காட்டுகின்றனர். இவைகளெல்லாம் ஆண்களின் படைப்புக்களே. ஆண் என்றும் தன்னை உயர்த்துவதற்காக பெண்ணைப்பற்றிய ஒரு தோற்றத்தை உருவாக்கிக் கொண்டு இருக்கிறார்கள். பெண்களைப்பற்றி வரைவிலக்கணங்களும் கருத்துக்களும் கூறுபவர்கள் ஆண்களே.



## அத்தியாயம் - 15

# வாழ்க்கை அழகானது

**'எல்லாவற்றையும் ஐக்கியப்படுத்திக்கொள்ள வேண்டும்' - தந்திரா**

'எல்லாம் அழகே' என்கிறது தந்திரா. வழி தவறிச் செல்வதும் அழகே. ஏனெனில் திரும்பி வருதல் அதனால் வளம்பெறும் என்கிறது. 'எல்லாவற்றையும் ஏற்கவேண்டும்' என்று தந்திரா கூறுகிறது. தந்திரா ஏடுகள் காலப்போக்கில் அழிக்கப்பட்டுவிட்டன. 'வாழ்க்கை தரும் எல்லாவற்றையும் கொடையாக எடுக்க வேண்டும்' என்கிறது தந்திரா.

வாழ்க்கை மாறிக்கொண்டே இருக்கிறது. ஒவ்வொரு கணமும் புதிய சூழ்நிலை உருவாகிறது. அதை முழு விழிப்புணர்வோடு எதிர்கொள்ள வேண்டும். எனினும் நாம் பண்பாட்டின் மூலம் குற்றம் கூறவும், குறை காணவும், கருத்துக்கணிக்கவும், நியாயப்படுத்தவும் கற்பிக்கப்பட்டுள்ளோம்.

வாழ்க்கைக்கு பாதுகாபபு முக்கியம் என கருதி பாதுகாப்புக் குறித்து தேவைக்கு அதிகமாக கவலைப்படுகிறோம். பாதுகாப்புக் கருதியே திருமணம் உருவாக்கப்பட்டது. வாழ்க்கையில் ஒரு குறிப்பிட்ட பாதையை வகுத்துக்கொள்ளும் பாதுகாப்புக் கருதியே எல்லாப் பாதுகாப்பும் பொய், வெறும் கற்பனைதான்.

'வாழ்க்கை தன்வழியில் செல்லட்டும், எல்லாவற்றையும் ஒப்புக் கொள்ளுங்கள், தானாகச் செல்லும் பாதையில் வாழ்க்கை செல்லட்டும். ஏற்படும் ஆபத்துக்களிலும் வாழ வேண்டும்' என தந்திரா கூறுகிறது.

ஒவ்வொரு மனிதரும் ஒவ்வொருவருக்குரிய உலகில் வாழ்கிறார்கள். எவ்வளவு சனத்தொகையிருக்கிறதோ அவ்வளவு

உலகம் உண்டு. சில சமயம் நம் உலகங்கள் மோதிக் கொள்கின்றன, சில சமயம் நட்பாகவும் இருக்கின்றன. உலகத்தில் நாம் அடைபட்டுக் கிடக்கிறோம். இவை எல்லாம் மனதால் உருவாக்கப்பட்ட பொய் உலகங்கள்.

எல்லோரும் பிறக்கும்போது சுதந்திரமாகவே பிறக்கிறோம். இயல்பாகவும் நெகிழ்வாகவும் குழந்தையாக இருக்கும்போது இருக்கின்றோம். பல்வகை கட்டுப்பாடுகளும், நடைமுறைகளும், கொள்கைகளும், சம்பிரதாயங்களும், மரபுகளும், குடும்பத்தின் பிரத்தியேக பழக்க வழக்கங்களும், மத நம்பிக்கைகளும், விதிமுறைகளும், சட்ட திட்டங்களும், கட்டுப்பாடுகளும் நெகிழ்ச்சியை, இயல்பைக் கெடுத்து விடுகின்றன. நம்மைச் சுற்றி காவல் தேவையாக இருக்கிறது. பாதுகாப்பிற்காக ஒரு கோட்டையை எழுப்புகிறோம். அதனால் சுதந்திரம் பறிபோகிறது. மற்றவர் கருத்தை நோக்கியே வாழ்கிறோம். இதனால் மற்றவர்கள், வேறுயாரும், பிறர் போன்ற கற்பனை மனிதர்கள் முக்கியமாகவும், வாழ்க்கையில் நாம் நம்மை முக்கியமற்றவர்களாக கருதி அந்த கற்பனை மனிதர்களை வாழ்க்கையின் சாரதியாக மாற்றிவிட்டு நாம் பக்கத்தில் பிரயாணியாக அமர்ந்து முரண்பாட்டை உருவாக்காதீர்கள். சமுதாய வழியாகச் சென்று அதைக் கடக்க வேண்டும். குழந்தை தாய் வயிற்றில் தனித்தே இருக்கிறது. அப்பொழுது குழந்தைக்கு விதிமுறை ஏதும் தேவையில்லை. குழந்தை பிறந்த உடன் டாக்டர்கள் குழந்தை அழாமல் இருந்தால் அழச் செய்கிறார்கள். விதிகள், சட்டங்கள் பின்பற்றப்பட வேண்டும்தான், ஆனால் அவையே வாழ்க்கையில்லை. அந்த விதிகளையும், சட்டங்களை யும் ஒருவாறு கடந்துதான் செல்லவேண்டும். சமுதாயம் சட்ட திட்டங்களை திணிக்கிறதை மாத்திரம் செய்கிறது. ஆனால் அதை எப்படி கடந்து செல்லவேண்டும் என்று சொல்லிக் கொடுப்பதில்லை. மாற்றுவழிகளை காட்டிக் கொடுப்பதில்லை, சட்ட திட்டங்களையும், விதிமுறைகளையும் மாத்திரம் சொல்லிக்கொண்டேயிருக்கக் கூடாது.

விதிமுறைகள் எவ்வளவு முக்கியமோ அதேபோல் அவை களை ஏற்று கடந்து செல்லுதலும் முக்கியம். கடந்து செல்லுதலையும் சொல்லிக் கொடுக்கவேண்டும், பழக்க வேண்டும்.

வாழ்க்கையின் இறுதியில் மரணத்தின் தனிமை உலகத்தில் நுழைகிறோம். அங்கு எந்த சமுதாயமும் இல்லை. வாழும் போதே அந்த தனிமை உலகத்தை நமக்குள் சென்று கண்டறிய வேண்டும். அதை எப்படி அடைய வேண்டும் என்பதற்கு தந்திரா பாதை காட்டுகிறது.

'வேறுபாட்டினைப் பாராமல் இது நல்லது, இது தீயது என்று நினைக்காமல், எதனோடும் ஒன்றாமல், எவரையும் அல்லது எதையும் பற்றுக்கோடாக கொள்ளாமல் தனக் குள்ளேயே ஓய்வாக இருந்தால் 'அந்த உலகத்தை காணலாம்' என்று தந்திரா பாதை காட்டுகிறது. "அந்தத் தனிமை உலகத்தை நமக்குள் சென்று கண்டறிய வேண்டும். அதற்கு எந்த விதிமுறையும் இல்லை, எந்த நீதியும் இல்லை. நெகிழ்வோடு இயற்கையாக இருங்கள்" என்கிறது தந்திரா. நெகிழ்வோடு இயல்பாக இயற்கையாக இருந்தால் அது சாத்தியம் என்பதே தந்திராவின் கூற்று.

தந்திரா என்பது சமுதாயம், பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றிற்கு அப்பாற்பட்டது. ஒருவர் பண்பாடு, கலாச்சாரம், என அதிகமாக ஈடுபட, ஈடுபட இயல்பாக இருத்தலிலிருந்து விலகிச் செல்வார். வெறும் 'புரோகிராம்' (Programme) நிகழ்ச்சி நிரல் மாதிரி இயங்குவார்கள். தங்களைச் சுற்றி ஒரு வட்டம் போட்டுவிடுவார்கள். அவர்களது இயல்புத்தன்மை அழிந்து செயற்கைத் தன்மை நுழைந்துவிடும். பண்பாடு, கலாச்சாரம் என்ற வட்டத்திற்கு 'விழிப்பு' தேவையில்லை. ஒவ்வொரு கணமும் முடிவெடுக்க வேண்டியதில்லை. சூழ்நிலைக்கு தக்கபடி வாழத் தேவையில்லை. பண்பாடு, கலாச்சாரத்தில் விழிப்பைத் தவிர்க்க சமூகம் ஒரு தந்திரத்தை ஏற்படுத்தியுள்ளது. அதாவது குணநலன் (Character) என்பதை வலிந்து திணித்துக்கொண்டது. அந்த குணநலன் எல்லாவற்றையும் கவனித்துக்கொள்ளும் என்று அப்படியே விடப்பட்டுள்ளது. பண்பாட்டின் மூலம் குற்றம் குறை காணவும், பிறரைப்பற்றி கருத்துக்கணிக்கவும் பழக்கப் பட்டுள்ளோம். அதற்கு விழிப்புணர்வு தேவையில்லை. 'இயல்பாக இரு' என்கிறது தந்திரா.

சமூகம் போலிப் புன்னகையை வரவேற்றும் உண்மையான கோபத்தை நிராகரித்தும் வருகிறது. போலிப் புன்னகையை விட உண்மையான கோபம் எவ்வளவோ மேல். கோபத்தில் போலித்தனம் செயற்கைத்தனம் என எதுவுமே இல்லை.

**தந்திரா மனிதர்களை முழுமையாக ஏற்றுக்கொள்கிறது.** காமமும், கோபமும் மறையும்போது மனிதர்கள் உயர் வடைகிறார்கள். சிறிது கோபம் வாழ்க்கைக்குத் தேவைதான். ஆனால் அந்தக் கோபம் நம்மை அடக்கி ஆளும்போது அழகற்றதாகி விடுகின்றது. போலிப் புன்னகையைவிட உண்மையான கோபம் எவ்வளவோ மேல். கோபத்தில் போலித் தனமில்லை. புன்னகையில் போலித்தனமுண்டு. உண்மையாக கோபம் கொள்ளத்தெரியாதவர் உண்மையானவர் அன்று. உண்மையான கோபம் அழகானது. உண்மையான கோபம் உண்மையான அன்பைப் போன்றது. போலிப் புன்னகை அசிங்கமானது. போலித்தனத்திலிருந்தும் செயற்கையான வாழ்விலிருந்தும் மீண்டால் உண்மையான வாழ்வு தரும் அந்த அழகு முழுமை தரும்.

**ஒரு நிகழ்ச்சி:**

சென் மத குரு லின்சீ ஞானம் அடைந்த பின்பும் வழமைபோல் இயல்பாக இருந்தார். விறகு வெட்டுவது, தண்ணீர் விநியோகிப்பது, தோட்டங்களுக்கு நீர் இறைப்பது போன்றவை தொடர்ந்தும் செய்துதான் வாழ்ந்து வந்தார். இதைப் பார்த்த மக்கள் அவரிடம் கேட்டனர், 'நீங்கள் ஒரு ஞானி. நீங்கள் ஞானமடையு முன்பு எப்படி வாழ்ந்தீர்களோ அதே மாதிரித்தான் ஞானமடைந்த பின்பும் வாழ்கிறீர்கள். எந்தவித மாற்றமும் உங்களில் காண முடியவில்லை' என்றனர். அதற்கு லின்சீ, 'வாழ்க்கை முற்றிலும் இயற்கையானதே, தூக்கம் வரும்போது தூங்குகின்றோம், பசிக்கும்போது சாப்பிடு கின்றோம். வாழ்க்கையில் செயற்கைத் தன்மையில்லை' என்றார்.

'நெகிழ்வு, இயல்பு' என்கிறது தந்திரா. நெகிழ்வாகவும் இயற்கையாகவும் இருப்பது கடினமாகத் தெரியும். ஏனெனில் பழைய பழக்க வழக்கங்களை உடைத்தெறிவது கடினம். நாம்

வாழ்வதே போலித்தனமிக்க சமுதாயத்தில். போலி வாழ்க்கையில் முரண்பாடு உண்டு. அத்தகைய போலி வாழ்க்கையிலிருந்து விடுதலை பெறவேண்டும். அந்த அடைய வேண்டிய விடுதலை தூரத்தில்லை. எமக்குள் அது மறைந் துள்ளது. போலியாகவும், பொய்யாகவும் பல இருக்கிறதாலே விடுதலை எங்கோ தூரத்தில் இருப்பதாக நினைக்கிறோம். ஒவ்வொருவரும் தங்களுக்கு 'உண்மையாக இருப்பதேதான் விடுதலை.'

தந்திரா வாழ்க்கையை முழுமையாகப் பார்க்கிறது. அதற்கென தனிக்கோட்பாடும் தனித்துவமும் கிடையாது. அது சமயம் அன்று. அருளியலும் அன்று. வார்த்தைகளிலும் கோட்பாடுகளிலும் அதற்கு நம்பிக்கையில்லை. தத்துவம் ஏதுமின்றி, கோட்பாடு ஏதுமின்றி வாழ்க்கையை நோக்கவே அது விரும்புகிறது. பிளவுபடுத்தி வேறுபடுத்தும் மனதை அது ஒருபோதும் கொண்டு வராது. வாழ்க்கையை உள்ளபடி நோக்குகிறது. **'மனதை எல்லாவற்றோடும் கலந்தால் உள்ளதை உள்ளபடி அறிய முடியாது' என்கிறது தந்திரா.**

'ஆம், இல்லை' என்ற சொற்கோவை தந்திராவிடம் இல்லை. தந்திராவின் கூற்றுப்படி துறப்பவர் அகந்தைமிக்கவர், 'உலக' ஆசைகளைச் சேர்த்து கவனம் செலுத்திய அவர் இப்போது துறவு மேற்கொள்கிறார். கவனம் மீண்டும் உலகைப் பற்றியே அமைகிறது. **'மனதுடன் போரிட வேண்டாம்' என்கிறது தந்திரா.** எதிர்க்காமல், மறுக்காமல் ஏற்பது என்பது சாதாரணமாக ஒப்புக்கொள்ளுதலில் இருந்து வேறுபட்டது. வேறு வழியில்லாமல் ஒப்புக்கொள்ளுதலை தந்திரா ஏற்கவில்லை. காரணம் - அந்த ஒப்புக்கொள்ளுதல் நம்பிக்கையின்மையால், வெறுப்பால் ஏற்படுவது. அதில் மறுப்பும் குழப்பமும் உள்ளே யிருக்கும். ஆனால் மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது எல்லாம் சரிபோலத் தோன்றும்.

மதங்கள் பிளவுபட்ட மனிதர்களை உருவாக்கும். நல்லவர், தீயவர், பாவம், புண்ணியம் என மனிதர்களைக் கூறு போடுகிறது. இதனால் குற்ற உணர்வு ஏற்படுகிறது. இதனால் நமக்குள்ளிருக்கும் ஒன்றை ஏற்று நமக்குளிருக்கும் இன்னொன்றை வெறுக்கிறோம். நாம் கைகள், கால்கள்,

கண்கள், மூக்கு.... இவற்றுடன் பிறந்திருப்பதுபோல காமம், கோபம், பேராசை இவைகளும் வாழ்வில் உண்மையாக இருக்கின்றன. 'இருக்கும் எதையும் அழிக்க முடியாது. ஆனால் மாற்றலாம்' என்கிறது தந்திரா. பிளவுபட்ட மனிதர்களை தந்திரா உருவாக்காது. கோபமும் கருணையும் இரண்டல்ல, இரண்டும் ஒன்றே. கோபத்தின் மற்றொரு பக்கம் கருணை, கோபத்தின் மறுபக்கம் அன்பு, உண்மையான கோபமும், அன்பும் ஒரு மரத்தின் கிளைகள்தான். வன்முறையின் மறுபக்கம் அகிம்சை. நேசிப்பும் வெறுப்பும் வேறல்ல. நேசிப்பின் மறுபக்கம் வெறுப்பு, கருணை பற்றி நினைக்கும்போது அதற்குள் மறைந்து இருக்கும் கொடுமை பற்றியும் நினைக்கிறோம். கொடுமையைப் பற்றி எண்ணும்போது கருணையைப்பற்றிய எண்ணம் மறைந்து வரும். வன்முறையில்லாமல் அகிம்சையைப்பற்றி நினைக்க முடியுமா? அகிம்சை என்று சொல்லும்போதே இம்சை அதனுள் நுழைந்துவிடுகிறது. பாலியலை நினைக்காமல் பிரம்மச்சரியம் பற்றி நினைக்க முடியுமா? பிரம்மச்சரியம் என்று நினைக்கும் போது பாலியல் எண்ணம் நுழைந்து விடுகிறது. காமம் பற்றிய எண்ணத்தின் பின்னணிதான் பிரம்மச்சரியம். இயேசு கையில் சாட்டையை எடுத்து கோவிலில் வியாபாரிகளை அவர் துரத்தும் அந்தக் கோபத்திலும் அழகுண்டு. புத்தரிடம் இந்த அழகில்லை. காரணம் கோபத்தைச் சுவைக்காதவர். கோபம் கருணையாகவே அவருள் உள்ளது. இயேசு சாட்டையை கையில் எடுப்பதும் கருணையின் காரணமே. அவர் கோபமாகப் பேசுவதும் கருணையின் விளைவே.

'எல்லாவற்றையும் நமக்குள் ஐக்கியப்படுத்திக்கொள்ள வேண்டும்' என்கிறது தந்திரா. பாலுணர்வையும் ஐக்கியப் படுத்திக்கொள்ள வேண்டும் என்கிறது. அதன் பின்பு அது உள்ளேயே பெரிய ஆற்றலாகிவிடும் என்கிறது. 'காமம்' என்பது மனிதருள் இருக்கும் மிகப் பெரிய காந்தசக்தி. புத்தர், இயேசு, மகாவீரர், போதிதர்மர், லாவோட்சு, திலோபா, கொடாய் (சிரிப்பு புத்தர்) போன்றவர்கள் அந்த சக்தியை காந்த சக்தியாக மாற்றிவிட்டார்கள். போதிதர்மரின் படங்களைப் பார்த்தால் தெரியும், அவரது முகம் எவ்வளவு கோபம் நிறைந்தது என்று. அவர் பார்வை அச்சந்தரும், அவர் பேச்சு சிங்க கர்ஜனை போலவும், இடிமுழக்கம் போலவும்,

அருவியின் பயங்கரச் சத்தம் போலவும், பயங்கரமாக இருக்குமாம். ஆனால் அவர் கனிந்த இதயத்தையும் கருணையும், அன்பும் உடையவர். அதனால்தான் அவர் அப்படிக் காணப்படுகிறார், அவர் எதையும் மறுக்கவில்லை. எல்லாவற்றையும் தனக்குள் ஐக்கியப்படுத்திக் கொண்டவர், அவரை எளிமையாக எடை போட்டுவிட முடியாது. 'இரட்டையைக் (Duality) கடக்க வேண்டும்' என்கிறது தந்திரா.

**ஒரு நிகழ்வு :**

போதிதர்மர் சீனாவிற்குச் சென்று அங்கேயே இருந்தார். அரசர் ஒருவர் அவரைப் பார்க்க வந்தார்.

**அரசர்** : நான் சில சமயம் பாதிப்படைகிறேன். எனக்குக் கவலை, துக்கம், கஷ்டம் அதிகமாக ஏற்படுகின்றது.

**போதிதர்மர்** : நாளை அதிகாலை வாருங்கள். வரும்போது உங்கள் கவலை, தொல்லை, கஷ்டம், துக்கம் எல்லாவற்றையும் கொண்டு வாருங்கள். இந்தத் தடியால் அவற்றை சரி செய்கிறேன்.

**அரசர்** : அரண்மனை சென்றார். நாளை அதிகாலை போகவா அல்லது போகாமல் விடவா? ஆளைப் பார்த்தால் மூடன் போல இருக்கு. எனது பிரச்சினையை சரிசெய்வார் போலத் தெரியவில்லை. தான் வைத்திருக்கும் தடியால் என் பிரச்சினையைத் தீர்ப்பேன் என்கிறார். இவர் வேடிக்கை மனிதனா? என பலவாறாக எண்ணிக் குழம்பினார். எனினும் அதிகாலை சென்று போதிதர்மரைச் சந்தித்தார்.

**போதிதர்மர்** : நீங்கள் வந்துவிட்டீர்கள். மற்றவர்கள் எங்கே? என்று கேட்டார்.

**அரசர்** : என்ன கூறுகிறீர்கள், என் பிரச்சினைகள் ஆட்களும் இல்லை, பொருட்களும் இல்லை.

**போதிதர்மர்** : நீங்கள் உள்ளேயிருந்தாலும், வெளியிலிருந்தாலும், எங்கிருந்தாலும் அவைகள் உங்களுக்கு முக்கியமானவைதானே. சரி கண்ணை மூடுங்கள். 'உள்ளே' அவற்றைத் தேடிக் கண்டுபிடியுங்கள். அவற்றைக் கண்டுபிடித்ததும் உடனே எனக்குச் சொல்லுங்கள். என் கையிலிருக்கும் இந்தத் தடியால் அதைச் சரிசெய்துவிடுகிறேன்.

**அரசர்** : கண்ணை மூடினார். தனக்குள்ளே மிக மிக ஆழமாகச் சென்றுகொண்டே இருந்தார் போதிதர்மர் அவரைப் பார்த்தபடியிருந்தார். உள்ளே எதுவுமில்லை என்ற 'விழிப்புணர்வு' திடீர் என்று ஏற்பட்டது, கவலை, துக்கம், கஷ்டம், தொல்லை என்று எதுவுமே உள்ளே காணப்படவில்லை. பொழுது நன்றாக விடிந்து கொண்டிருந்தது. அரசர் முகம் மலர்ந்தது.

**போதிதர்மர்** : கண்களைத் திறவுங்கள் என்றார். எங்கே உங்கள் கவலை, தொல்லை, கஷ்டம், துக்கம்? உங்களால் அவைகளைக் கண்டுபிடிக்க முடிந்ததா? என்றார்.

**அரசர்** : நீங்கள் அவற்றைச் சரிசெய்துவிட்டீர்கள். நான் உள்ளே இல்லாதபோது அவைகள் உள்ளே இருந்தன. இப்போது நான் உள்ளே நுழைந்ததும் அவைகள் வெளியேறிவிட்டன. நீங்கள் பெரிய அற்புதத்தைச் செய்துவிட்டீர்கள். நான் மாறி விட்டேன் என்றார்.

**போதிதர்மர்** : **[உரக்கச் சிரித்தார், ஏன் சிரித்தார்?] எதுவாக மாற விரும்புகிறீர்களோ அது ஏற்கனவே உங்களுக்குள் இருந்தது. இருக்கிற ஒன்றாக மீண்டும் எப்படி மாறமுடியும்? இல்லாத ஒன்றாக மாற முயற்சி செய்தால் நீங்கள் தோற்பீர்கள், ஏற்கனவே இருக்கிற ஒன்றாக மீண்டும் மாறமுடியாது, [என்று சொல்லிச் சிரித்தார்.] எதுவாகவும் மாறத் தேவையில்லை. நமது உண்மை இயல்பை உணர்ந்தால் நமக்குள் மறைந்திருப்பதை உணர முடியும்.**

**பிறிறொரு நிகழ்ச்சி :**

திலோபா, போதிதர்மர் இருவரும் இளவரசர்களாக இருந்து, மதத் துறவிகளாக மாறி, பின்பு மதங்களைக் கடந்தவர்களாக இருந்தார்கள். திலோபா தன் ஞானத்தை திபெத்தில் விதைத்தார், போதிதர்மர் தன் ஞானத்தை சீனாவில் விதைத்தார். இந்த இருவரும் இந்தியாவிலிருந்து அந்த நாடுகளிற்குச் சென்றவர்கள்.

**திலோபாவிடம் திபெத்தில் தீட்சை பெற ஒருவர் வந்தார். திலோபா அவரைப் பார்த்ததும் உங்களுக்குப் பின்னால் என்ன பெரும் கூட்டம் என்றார். தீட்சைபெற வந்தவர் நான்கு பக்கமும் திரும்பிப் பார்த்தார். பின்பு யாரும் இல்லை என்றார். திலோபா 'திரும்பிப் பாராதீர்கள், உங்களுக்குள்ளே பாருங்கள் பெரும் கூட்டம் உங்கள் மனதில் இருக்கிறது' என்றார். நீங்கள் எதுவாக மாற வேண்டுமோ, எப்படி இருக்கவேண்டுமோ அவைகளெல்லாம் உங்களுக்குள்தான் இருக்கின்றன, வெளியில் இல்லை! என்றார் திலோபா.**

**இயேசுபிரான் கூறும் அழகிய கதை**

ஒரு தந்தைக்கு இரண்டு புத்திரர்கள், இளையமகன் சொத்தைப் பிரித்து வாங்கிக்கொண்டு ஓடிவிட்டான். மதுவிலும் கேளிக்கைகளிலும் செல்வத்தை வீணடித்து பிச்சைக்காரனாகி விட்டான். மூத்த மகன் தந்தையோடு பண்ணையில் தங்கியிருந்து அவருக்கு உதவிபுரிந்தான். கடைசி மகன் ஒருநாள் தந்தையிடம் திரும்பிவந்து தன் தவறுகளை மன்னிக்கும்படி வேண்டினான். மகிழ்ச்சியோடு தந்தை அவன் திரும்பிய நிகழ்ச்சியைக் கொண்டாடும்படி கூறினார். வழிதவறிச் சென்ற மகன் மீண்டும் வந்தமைக்காக விருந்து ஏற்பாடு செய்யப் பட்டது. சிலர் அவரது மூத்த மகனிடம் சென்று அவன் தந்தையின் செயலைக் குறை கூறினர். மூத்த மகனுக்கு இதைக் கேட்டதும் மிகக் கோபம் வந்தது. தந்தையிடம் சென்று முறையிட்டான். செல்வத்தை வீணடித்தவனுக்கு விழாவா? என்று கேட்டான். தந்தை 'நீ எப்போதும் என்னுடனேயே இருப்பதால் அதற்குத் தேவையில்லை. அவனோ வழிதவறிச் சென்று உணர்ந்து திரும்பி வந்திருக்கிறான். வாழ்க்கை தரும் எல்லாவற்றையும் கொடையாக எடுக்க வேண்டும், திரும்பி

வருதல் அதனால் வளம் பெறும்' என்றார். 'முழுமையற்ற தன்மையை உணர்ந்தால் அதுவும் முழுமையே' என்கிறது தந்திரா.'

தத்துவமேதை ஜே. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் சொல்கிறார் 'கவனமில்லாமல் இருக்க நேரிட்டால் கவனத்தோடு கவன மில்லாமல் இருங்கள்.' அதாவது கவனம் சிதறியபோது என் கவனம் சிதறிவிட்டது என்ற நினைவுமட்டும் இருக்கட்டும், மறுபடியும் திரும்பி வாருங்கள் என்பதே அதன் பொருளாகிறது.

''நிகழும் எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்ளுங்கள், அங்கே பாதை உண்டு' – தந்திரா.

**எல்லாம் அழகே!**



## அத்தியாயம் - 16

# உள் நிகழுவேண்டிய நிலைகளைக் காட்டும் சிலைகள்

'தந்திரா, மந்திரா, யந்திரா' என்ற வார்த்தைகள் முக்கிய மானவை. பிரக்ஞை நிலையை (Consciousness) விரிவுபடுத்தும் முறைக்கு 'தந்திரா' என்றும், உள் ஆன்மிக அதிர்வை (Inner - vibration) உணர்ந்து கொள்ளுதல் 'மந்திரா' என்றும், பார்த்ததும் ஆன்மிக உள் உணர்வை (Inner feelings) ஏற்படுத்தும் ஒரு குறிப்பிட்ட உருவத்தை 'யந்திரா' என்றும் அழைக்கிறார்கள்.

யந்திரங்கள் தாந்திரீக வழிபாட்டோடு தொடர்புடையவை. தாந்திரீகம் எனப்படும் வழிபாட்டு முறையை பெரும்பாலும் சாக்த சமயத்தவர்கள், வஜ்ராயன பௌத்த சமயப்பிரிவினர் மற்றும் சுவேதாம்பர சமண சமயத்தினர் கடைப்பிடிக்கின்றனர். இந்து சமயத்தில் தாந்திரீக முறையில் வழிபட மந்திரங்கள் மிகவும் முக்கிய இடத்தை வகிக்கிறது.

மந்திரத்தைச் சொன்னவுடன் ஓர் அதிர்வு ஏற்படுகிறது. சில ஓவியங்களைப் பார்த்தவுடன் ஒருவித பரபரப்பு, குழப்பம் - சில வேளைகளில் சஞ்சலம் ஏற்படுகிறது. தொடர்ந்து உற்றுப் பார்த்தால் உணர்வு மாறுகிறது. சில கொடுமையான காட்சிகளைக் கொண்ட ஓவியங்களைப் பார்த்தால் இரவில் கனவாக வருகின்றன, சில பொப் இசைகளைக் கேட்டால் பாலுணர்வால் உந்தப்படுவதை உணர்வீர்கள். இவை வெளியில் இருந்துவரும் ஒலிதான். நமக்குள்ளே இருக்கும் ஒலியின் அலைவரிசையை தாக்கி ஒருவிதமான உணர்வை ஏற்படுத்து கிறது. சங்கீதத்தை அல்லது இசையைக் கேட்டால் அவை அமைதியையும், சாந்தத்தையும் ஏற்படுத்துவதை உணரலாம். சிலரைப் பார்த்தவுடன் விலகுகிறோம், பிடிக்கவில்லை

என்கிறோம். எப்படி இது ஏற்பட்டது? உள்ளிருந்து வரும் எண்ண அலைகள்தான் காரணம். அன்பும், சாந்தமும் உள்ளே நிரம்பியிருந்தால் அதைத் தாங்கிய எண்ண அலைகள்தான் வெளிவரும். மனிதனின் உணர்வுகள், எண்ணங்கள், உணர்ச்சிகள் எல்லாம் உடலிலுள்ள அணுக்களிலிருந்தும் கலங்களிலிருந்தும் வெளிவருகின்றன.

**'ஒத்துப்போவது இலட்சியமன்று, முழு மாற்றமடைவதே இலட்சியம்' என்று தந்திரா கூறுகிறது.** மதம் என்பது முழு மாற்றம் பெற உதவி செய்யவேண்டும். கோவில், பிரார்த்தனை, மந்திரம் எல்லாம் ஒத்துப்போகவே துணை செய்கின்றன. நாம் மதங்கள் மாறுகின்றோம், ஆனால் மனங்களை மாற்றுவ தில்லை.

இப்போது புகைப்படப்பிடிப்பாளர்கள் நலிந்த மெலிந்த அழகற்ற ஒரு பிச்சைக்காரியையோ, பிச்சைக்காரனையோ படம்பிடிக்க விரும்புகிறார்கள். பிச்சைக்காரர்கள் அக்காலத்தில் இல்லை போலவும் இக்காலத்தில் இருப்பது போலவும் சித்திரிக்கிறார்கள். அவர்களது தோற்றம் உண்மையானதுதான், அதில் எந்தவிதச் சந்தேகமும் இல்லை. அவலங்கள், கோரங்கள், கொலைகள், கொள்ளைகள், போர்கள், மரணங்கள் இவைகளைத்தான் இந்த நூற்றாண்டு தேடிக்கொண்டிருக்கிறது. பத்திரிகைகள், வானொலிகள், தொலைக்காட்சிகள், மேடைப் பேச்சாளர்கள், இதைத் தேடுகிறார்கள். இவற்றைப் பேசினால் புரட்சியாளன் அந்தஸ்து சுலபமாகக் கிடைத்துவிடுகிறது. அவலங்களைக் காட்டி அடுத்த தேர்தலுக்குத் தயாராக அல்லது சமூகத் தலைவராகக் காட்டிக்கொள்ள அவலட்சணங்கள் அவர்களுக்குத் தேவைப்படுகின்றன.

மகிழ்ச்சி, இரம்மியமான காட்சிகள், அழகான இடங்கள் இவைகளில் எந்தப் புகைப்படக்காரருக்கும், பத்திரிகை, வானொலி, தொலைக்காட்சிகளுக்கும் அக்கறை இல்லை, காரணம், இவைகள் அவர்களைக் கவரவில்லை. அருவருப்புகள் அவர்களைக் கவருகின்றன. அவைகளைத்தான் தேடுகிறார்கள். யுத்தங்களும் திட்டம்போட்டு உண்டாக்கப்படுகின்றன. அழிவை விரும்பியவர்கள் அந்த அழிவை தங்கள் உயர்விற்கு எப்படிச் சாதகமாக்கலாம் என்பதற்குப் போரை ஆரம்பிப்பதற்கு முற்கூட்டியே திட்டம் வகுத்து விடுகிறார்கள்.

இந்தக் கொடூரங்கள் ஓவியம், சிற்பம், பாடல், இசை, நாடகம், கவிதை, நாவல், படம் இப்படி எல்லாவற்றிலும் பிரதிபலித்து எல்லா இடங்களிலும் அருவருப்பை உண்டாக்கி விட்டன. அருவருப்பான அனைத்தும் கலையம்சம் பொருந்திய தாகக் கருதப்படுகிறது. புகைப்படக்காரர்கள் அவலட் சணத்தையே படம்பிடித்துக் காட்ட விரும்புகிறார்கள். எவைகளெல்லாம் அழகாக இருந்தனவோ அவைகளெல்லாம் அலட்சியப்படுத்தப்படுகிறது. அவலட்சணங்கள்தான் உண்மை யானவை போலவும் நம்பப்படுகிறது

காலைச் சூரிய உதயம், சூரிய அஸ்தமனம், முழுநிலா, காலையில் மரங்களிற்கிடையில் சூரியக்கதிர்கள் புகுந்து வருவது எவ்வளவு அழகானகாட்சி. எந்தப் புகைப்படக்காரனுக்கும், அவலப் பேச்சாளர்களுக்கும் இயற்கையில் அக்கறை இல்லை. அது அவர்களைக் கவரவில்லை. எது எவரைக் கவருகிறதோ அது அவர்களது உள்ளத்தைக் காட்டுகிறது.

புத்தர் சிலைகள் அவருடைய உண்மையான உருவத்தைப் பிரதிபலிக்காது. காரணம் புத்தர் எப்படியிருந்தார் என்பது யாருக்குமே தெரியாது. அது போலவேதான் இராமர், சிவன், ஸ்ரீகிருஷ்ணர், முருகன், பிள்ளையார் சிலைகள் எல்லாம். ஆனால் இங்கு அது முக்கியமில்லை. உண்மையான உருவம் என்ன? அதுபற்றி நமக்கு வேண்டாம். நாம் அந்த முடிவான உண்மையில் தான் அக்கறைகொள்கிறோம், நமது ஆர்வம் அந்த முடிவான உண்மையைப் பற்றித்தான். புத்தர் சிலைகளில் ஆண் தன்மையைவிடப் பெண்தன்மை அதிகம். தாடி, மீசையுடன் புத்தர் சிலை கிடையாது. ஞானிகள், ரிஷிகள் என்றவுடன் நம்மை அறியாமலே ஓர் உருவம், தோற்றம் உடனே மனதில் ஏற்பட்டுவிடுகிறது அல்லவா! இதேபோல ஞானிகளது சிலைகளைப் பார்க்கும்போது நமக்குள்ளே ஒரு எண்ணத்தை ஏற்படுத்துகின்றது. அவ்வுருவம் சில இயல்பான ஆன்மிக அதிர்வுகளை ஏற்படுத்துகின்றன.

முழு நிலவை, மலர்களைப் பார்க்கும்போது, பறவைகளின் இசையைக் கேட்கும்போது உங்களுக்குள் என்ன நிகழ்கிறது? இவைகள் ஒரு அதிர்வைக் கொடுக்கிறது, புத்துணர்ச்சியை ஏற்படுத்துகிறது. மைக்கேல் அஞ்சலோவின் சிலைகள், டாவின்சியின், இரவிவர்மாவின் ஓவியங்களும் உள்ளுணர்வை

ஏற்படுத்துகின்றன. அந்த உணர்வு மூலம் நம்மை நாமே கண்டுபிடித்துவிடலாம். பார்ப்பதிலும், கேட்பதிலும், படிப்ப திலும் எங்கே செல்கிறீர்கள்? உங்களை எங்கே அழைத்துச் செல்கிறது? ஜாக்கிரதையாக, உணர்வாக, பிரக்ஞையாகக் கவனியுங்கள், உங்களை நீங்களே கண்டுபிடித்துவிடுவீர்கள். இந்தச் சிலைகளின் அடிப்படைத் தத்துவம் உங்களுக்குள்ளே நிகழவேண்டிய நிலைகளை வெளிக்காட்டுவது மட்டுமல்ல உங்களையும் உங்களுக்கு உணர்த்துகிறது.

ஒருவர் தான் விரும்பிய ஏதாவது ஒன்றை வைத்து தங்கள் நம்பிக்கைக்கு ஏற்ப பூசித்து வணங்கி பிரார்த்தித்து, தோத்திரம் இசைத்து தங்களுக்கேற்ற முறையில் வணங்கி வர தன்னளவில் எல்லாம் நிறைவடைந்தவராக உணர்வார். அதாவது தங்களுக்குத் தாங்களே சுய வசியம் self hypnosis செய்து கொள்கிறார்கள். சிலைகள், படங்கள் எல்லாம் சுய வசியத்திற்கு உதவுகின்றன.

**நான் வாசித்து அறிந்த செய்தி:**

*சீனாவில் ஒரு புத்தகோவிலில் 10,000 புத்தசிலைகள் இருக்கின்றன. அவைகள் அனைத்தும் ஒரே மாதிரி இருக் கின்றன. எங்கு பார்த்தாலும் மேல்கூரை, தரை, சுவர்கள் என்று எல்லா இடங்களிலும் புத்தர் சிலைகள்தான், பத்மாசனத்தில் உட்கார்ந்திருக்கும் அந்தச் சிலைகளிற்கு மத்தியில் நுழைந்தால் 10,000 புத்தர்களால் நீங்கள் சூழப்பட் டிருப்பது போல் உணர்வீர்கள்.* **அச்சிலைகள் உங்களை ஊடுருவுகின்றன, அப்போது நீங்கள் மறைகிறீர்கள். உங்க ளுடைய சாதாரண வாழ்க்கை நிலை அங்கே இல்லை. சில கணங்களுக்கு மேலான நிலையில் சஞ்சரிக்கிறீர்கள், அது உங்களுக்குள் நிகழ்கிறது.**

புகழ்பெற்ற ஓவியர் பிக்காசோவின் சில நவீன ஓவியங்கள் யுத்தங்களின் கொடுமை, கொடூரங்களை வெளிக்காட்டி மனிதநேயத்தை உணரச் செய்கின்றன. அவை மனிதன் தன் மனிதத்தன்மையை இழந்து, மனிதன் மனிதனுக்குச் செய்கிற கொடூரங்களை வெளிக்காட்டுகிறது.

புத்தர், கிருஷ்ணர், இராமர் போன்றவர்களின் ஓவியங்களில், சிலைகளில் தாடி, மீசை இல்லை ஏன்? சிற்பிகள்

அவர்கள் எந்த உருவத்தில் இருந்தார்கள் என்பதில் அக்கறை கொள்ளவில்லை, அவர்களுடைய உருவத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கவில்லை, அந்தச் சிலைகளைப் பார்க்கும் மக்களிடத்தில் தான் அக்கறையும், முக்கியத்துவமமும் கொடுத்திருக்கிறார்கள், மக்களுக்கு அது எந்த வகையில் உதவி செய்யும் என்பதில்தான் அக்கறை செலுத்தியிருக்கிறார்கள். ஆகவேதான் இவர்களுடைய உருவத்தைச் சற்று இளமையாக அமைத்திருக்கிறார்கள். புத்தர் முதியவராகத்தான் இருந்தார், நோயுடன் வாழ்ந்திருக்கிறார், 80 வயதில் மரணமானார். அவருடன் எந்த நேரமும் ஒரு வைத்தியரும் பிரயாணம் செய்வார். ஆனால் எந்தப் புத்தர் சிலைகளும் வயதானவராகவோ, அல்லது நோயாளராகவோ ஓவியம் தீட்டப்படவில்லை, சிலைகள் அமைக்கப்படவில்லை. காரணம், புத்தருடைய உள்ளம்தான் முக்கியம், தோற்றமில்லை. இளமையான புத்தர் சிலையைப் பார்க்கும்போதோ, ஓவியத்தைப் பார்க்கும்போதோ, பார்ப்பவர்களுக்குள்ளும் அந்த இளமை தொற்றிக்கொள்கிறது. புத்துணர்ச்சி ஏற்படுகிறது. இதனால்தான் இராமர், கிருஷ்ணர், சுவாமிபடங்கள், சிலைகள் எல்லாம் இளமையாக அமைக்கிறார்கள்.

ஏன் மகான்களின் சிலைகள் இளமை முகத்துடன் காணப்படுகின்றன? இவர்களில் அநேகர் முதுமையடைந்து உடல்களை நீக்கியவர்கள். இளமைத்தோற்றத்திற்கு வயது மாத்திரம் காரணமல்ல. மனதில் தோன்றும் எண்ணங்களும் காரணமாகும். எண்ணங்கள் நோயை கொடுப்பதோடு அதைக் குணப்படுத்தவும் உதவும். மன இறுக்கத்தை மாத்திரமல்ல மகிழ்ச்சியையும் கொடுக்கும், மரணத்தையும் கொடுக்கும். எண்ணங்கள் மிக சக்தி வாய்ந்தவை. உடலைக் கவனிப்பது போல் எண்ணங்களையும் கவனிக்க வேண்டும். மகான்கள் எண்ணங்களை நிறுத்தக்கூடியவர்கள், எண்ணங்களுக்கிடையில் இடைவெளி உருவாக்கக்கூடியவர்கள். சிந்தித்த யோசனையை திரும்ப, திரும்ப யோசிப்பதில்லை. கவலையாக துக்கமாக யோசிப்பதில்லை. புத்தம் புதிய எண்ணங்கள் இளமைபோல் புதிதாகத் தோன்றும். மனம் வழியாக எதையும் பார்ப்பதில்லை, எதனுடனும் கலப்பதில்லை. அதனால் இளமையாக காணப்படுகிறார்கள். இச்சிலைகள் ஓவியங்கள் நமக்கு எதை உணர்த்துகின்றன? எண்ணங்களைக்

கவனியுங்கள். விபரீத எண்ணங்களைத் தவிர்த்து, மகிழ்வான எண்ணங்களால் உங்களை நிரப்புங்கள் போன்ற உளவியல் காரணங்கள் இச்சிலைகள் அமைப்பின் பின்னணியில் உள்ளன.

சிலைகள் எந்த அமைப்பில் இருந்தாலும் நாம் தெரிந்து கொள்ள வேண்டியது, சிலைகளின் 'உள்மையம்' என்ன என்பதும், அதே நேரத்தில் அச்சிலைகள் பார்ப்பவர்களின் உள் மனங்களில் ஏற்படுத்தும் 'உள்நிலை' என்ன என்பதும்தான்.



## அத்தியாயம் - 17

# வழிபாட்டின் மாற்றம் மனித உறவில் தெரியும்

**'எப்போதும் நெகிழ்வாக இறுக்கமில்லாமல் இருங்கள்' - தந்திரா**

மனப்பண்புக்காகத்தான் வழிபாடும் தியானமும் மேற்கொள்கிறீர்கள். வழிபாடு ஓர் உத்தி. இதற்கு பொது வழி என்று ஒன்றும் இல்லை. ஒவ்வொரு பாதையும் தனி வழி. ஒருவருடைய உணர்வுபூர்வமான அனுபவம் மற்றொருவருக்கு பயன்படாது. தினம் வழிபாடு செய்பவர்கள் அல்லது தியானம் செய்பவர்கள் அல்லது தினத்துக்கு தினம் விரதம் இருப்பவர்கள் மதக் கொண்டாட்டங்களில் பங்கு பற்றுபவர்கள் ஒரு நாள் அவற்றைத் தவறவிட்டால் அல்லது ஒருமுறை தவறும்போது எதையோ இழந்ததைப்போல் உணருகிறார்கள். ஆனால் தினமும் செய்யும்போது அவர்கள் எதையும் உணர்வதில்லை. ஆனால் முறை தவறும்போது ஓர் இழப்பை உணர்கிறார்கள். அவர்கள் ஒரு பழக்கத்துக்கு அடிமையாகிவிட்டார்கள். புகைபிடிப்பது போல, மது அருந்துவதுபோல அந்த தியானம், வழிபாடு, விரதம் எல்லாம் ஒரு பழக்கமாகிவிடுகிறது.

வழிபாடு, தியானம் இவை எல்லாம் நீங்களே உங்களுக்கு செய்துகொள்ளும் வசியம்தான். வழிபாடு வளரும்போது கோபம், சினம், பொறாமை, போட்டி இவைகள் உங்களில் இருந்து படிப்படியாகக் குறையத் தொடங்கும். மனைவி, கணவன், மகன், மகள், தந்தை, தாய், சகோதரர்கள் இவர்களின் மேல் அதிக கோபம் சில வேளைகளில் ஏற்படுகிறது. ஆனால் அவ்வளவு கோபம் பிறருடன் ஏற்பட்டாலும் அக்கோபத்தை அடக்கி இணக்கமும் காண்கிறீர்கள். ஏன் உங்கள் குடும்ப அங்கத்தவர் மீது கோபம் ஏற்படும்போது அப்படி நடந்து கொள்வதில்லை? இவர்கள் உங்களுடன் நெருக்கமாக இருப்பவர்கள். உங்களுக்கு உங்கள்மேல் சிலவேளைகளில்

வெறுப்பு ஏற்படுவதால் இது உங்களின் இன்னொரு பகுதியின் மேல் அந்தக் கோபம் பரவுகிறது.

**தியானத்தை புரிந்துகொள்ள கோபம் குறையும், அன்பு, கருணை மிகும். பிறர் மீது அன்பும் கருணையும் உங்களுக்குள் தோன்றத் தொடங்கினால் உங்கள் வழிபாடு, தியானம் கைகூடுகிறது என்பது அதன் பொருள். இவைதான் பொதுவான அடையாளங்கள். கோபம் குறைதல், அன்பு மிகுந்திருத்தல், சொல்லிலும், எண்ணத்திலும், செயலிலும், வன்முறை இல்லாதிருத்தல், கருணையாயிருத்தல், இவைதான் உண்மையான மனவியல் மாற்றங்கள்.**

மனித உறவில் என்ன நடக்கிறது? மனைவியுடனோ, கணவனுடனோ எப்படி நடந்து கொள்கிறீர்கள். குழந்தைகளுடன், முதுமையானவர்களுடன், தெரிந்தவர்கள், தெரியாதவர்கள், அன்னியர்களுடன் எப்படி நடந்துகொள்கிறீர்கள்? விலங்குகள், பறவைகள், மரம், செடி, கொடிகள் இவைகளுடன் எப்படி நடந்துகொள்கிறீர்கள்? உங்களை நுட்பமாக கவனியுங்கள். ஏதாவது உங்களில் மாற்றம் தெரிகிறதா? **உங்களில் வழமையைவிட நல்ல மாற்றத்தை உணர்ந்தால் நீங்கள் தியானத்தில், வழிபாட்டில் முன்னேறுகிறீர்கள் என்பது அதன் பொருளாகிறது.** உங்கள் மேலதிகாரிகளுடன் பவ்வியமாக நடந்துகொள்கிறீர்கள். அதேபோல் உங்கள் வேலையாளுடன் நடந்துகொள்கிறீர்களா? உங்கள் வேலையாளுடன் எப்படி நடந்துகொள்கிறீர்கள்? உங்களுக்குக் கீழே இருப்பவர்களுடன் எப்படி நடந்துகொள்கிறீர்கள்? அதில் மாற்றம் தெரியவில்லை என்றால் வழிபாடு, தியானம், விரதம், பூசை, அபிஷேகம் என்ற பெயரில் உங்களை நீங்களே ஏமாற்றிக்கொள்கிறீர்கள். **உங்கள் வழிபாடு, தியானம் உங்களுக்குள் நல்ல உணர்வான மாற்றத்தை ஏற்படுத்த வேண்டும்.** ஒருவர் தனக்குள்ளே மகிழ்ச்சியைக் காணும்போது ஓர் அபூர்வ நிலையை அடைகிறார். அப்போது தெரிந்தவர், தெரியாதவர் அந்நியர்கள் எவருடனும் மகிழ்ச்சியாக இருக்க முடியும். தன்னுள்ளேயே மகிழ்ச்சியைக் கண்டுகொண்டவுடன் தன்மேலே தான் காதல்கொள்ளத் தொடங்குகிறான். உங்கள்மேல் காதல் ஏற்பட்டால் எப்படி கோபம் வரும்?

**உளவியல் ரீதியாக மாறுவதுதான் தியானத்தின் நோக்கம், வழிபாட்டின் நோக்கம். மனித உறவுகள் கண்ணாடிகள்**

போன்றவை, ஒருவர் அடையும் முன்னேற்றத்தின் அடையாளங்களை மனித உறவுகளின் மூலம்தான் அறியமுடியும். வழிபாடு, தியானம் இவைகள் ஒருவருக்குள் கருணை, நேர்மையைக் கொடுக்கும். அதே நேரத்தில் நம்பிக்கைத் துரோகம், வன்முறை, ஏமாற்று, மோசடி போன்றவைகளை அடியோடு அழித்துவிடும். அவைகள் தலைகாட்டினால் வழிபாடு, தியானம் என்று உங்களை நீங்களே ஏமாற்றுகிறீர்கள், அவ்வளவுதான். வழிபாடும், பிரார்த்தனையும், தியானமும் நீங்களே உங்களை அடையாளம் கண்டுகொள்ள உதவுகிறது. நீங்கள் தடுமாறும்போதெல்லாம் உங்களை நீங்கள் கையும் மெய்யுமாகப் பிடிக்க உதவுகிறது. அப்போது நீங்கள் உங்களிடமிருந்து தூர விலகிச் செல்கிறீர்கள் என்பதை அறிந்துகொள்வீர்கள். அத்தகைய நேரங்களில் உங்களை நீங்கள் உங்களிடம் திருப்பிக் கொண்டு வாருங்கள். நீங்கள் உங்களுக்குள் ‘உள்’ மாற்றத்தை உணர்ந்தால் உங்கள் வழிபாடு, பிரார்த்தனை, தியானம் கைகூடுகிறது என்று அர்த்தமாகும். நீங்கள் உங்களுடனே இருக்கிறீர்கள் என்பது புலனாகிறது. இல்லையேல் நீங்கள் உங்களிலிருந்து தூர விலகிச்செல்கிறீர்கள் என்பதை உணர்கிறீர்கள். வழிபாட்டுக்குள்ளும் தியானத்துக்குள்ளும் நீங்கள் பிரவேசிக்கவில்லை என்பதை அறிகிறீர்கள். வழிபாடு என்பதன் பேரில் உங்களை நீங்கள் ஏமாற்றுகிறீர்கள். கொடுமைகளுள் மிகப் பெரிய கொடுமை இதுவே. வழிபாடும், தியானமும் ஒருவர் தன்னை சரிசெய்துகொள்ள, தன்னைக் கண்டறிய, தன்னைத் தடுத்து நிறுத்த உதவும் பாதையில்லாப் பாதையாகும். ஏன் வழிபடுகிறீர்கள்? வழிபடவேண்டும் என்பதற்காக வழிபடுகிறீர்களா? அது ஒரு தனிப்பழக்கமாகி விட்டதா? வழிபாட்டுக்கு முன்பும் பின்பும் என்ன உணர்கிறீர்கள்? உங்களைச் சரியாகப் புரிந்து கொள்ளுங்கள்.

**உங்களுக்கு மிக நெருக்கமானவர் நீங்கள்தான்! உங்கள் உட்குரலைக் கேளுங்கள்!!**

**உங்கள் வழிகாட்டி நீங்கள்தான்!!! உங்கள் பாதையில்லாப் பாதையில் பயணிப்பவரும் நீங்கள்தான்.**

*வழிபாடு, தியானம் இவை எல்லாம் ஓர் அடிப்படையான மன மாற்றம் தரும் பாதையே. இந்த மாற்றத்தை உணர ஒரே*

வழி மனித உறவுகள்தான். எவர் மேலாவது ஆதிக்கம் செலுத்தினால், அதிகாரம் செலுத்தினால், நம்பிக்கைத் துரோகம், பொய் இழைத்தால் உங்களுக்குள் உள்மாற்றம் இன்னும் ஏற்படவில்லை. உங்களுடையது அல்லாதவற்றை உடமை யாக்கிக்கொள்ள வேண்டும் என்று சற்று நினைத்தால்கூட உங்களிடம் இன்னும் மனதில் ஏமாற்று, வன்முறை இருக்கிறது என்று அர்த்தம். யாரையும் உங்கள் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்க வேண்டும் என்று நினைத்தால் 'அதிகாரம்' இருக்கிறது என்று அர்த்தம். உங்கள் வழிபாடு, தியானம் உங்களுக்கு மனப்பக்குவத்தைத் தரவில்லை. அன்பு ஒருபோதும் உரிமை கொண்டாடாது, ஆதிக்கம் செலுத்தாது, கட்டுப் படுத்தாது! அது உங்கள் மனதுடன் தொடர்புடையது.

வழிபாட்டுடன் என்ன செய்கிறீர்களோ அதை விழிப் புணர்வுடன் செய்யுங்கள், விரைவில் உள்மாற்றம் ஏற்படும். மனித உறவுகளில் உரிமை, உடைமை போன்ற வார்த்தை களுக்கு இடமேயில்லை. ஆழ்நிலை சிந்தனை வளர, வளர படிப்படியாக அழுக்காறுகள் மறைந்துவிடும். மனித உறவுகளில் நம்மை நாமே பார்த்துக் கொள்ளலாம். மனித உறவுகளில் கண்ணை மூடிக்கொண்டு இருந்துவிட்டு வழிபாட்டிலும், தியானத்திலும் கண்ணை மூடிக்கொண்டு 'ஒளி'யைத் தேடாதீர்கள். உங்கள் மாற்றத்தை மனித உறவுகளில் ஆரம்பியுங்கள். நிபந்தனையற்ற அன்பு அதிகமானதை உணர்ந்தால், எந்தக் காரணமும் இல்லாமல் கருணை சுரந்தால், எந்த மனிதனிலோ, விலங்குகளிலோ அவற்றின் நலனில் ஆழமான அக்கறை ஏற்பட்டால், உங்களில் மாற்றம் ஏற்பட ஆரம்பித்துவிட்டது. உங்கள் சிந்தனை, செயல்கள் எல்லாம் உங்களை அறியாமலேயே positive ஆனவையாகிவிடும். பதட்டமில்லாமல் நெகிழ்வாகவே இருப்பீர்கள். உங்கள் வழிபாடு, பிரார்த்தனையில் ஆழமாக உண்மையாகிவிட்டீர்கள். உங்களுக்குள் அமைதி அதிகமாகும், கூடுதலான மௌனத்தை விரும்புவீர்கள். அந்த மௌனம் இயற்கையானது. 'எப்போதும் நெகிழ்வாக இறுக்கம் இல்லாமல் இருங்கள்' என்கிறது தந்திரா. மனிதநேயமே வழிபாடும் தியானமும் ஆகிவிடும்.

நீங்கள் எதையும் கடக்கவேண்டியதில்லை, உங்களை எல்லாம் கடந்து செல்லும்.

■■

## அத்தியாயம் - 18

# நிர்வாணமும் ஆடையும் வாழ்க்கையில் இயல்பானவையே!

**காமம் இன்றி படைப்பும், படைப்புச்சக்தியும் சாத்திய மில்லை. எல்லாப் படைப்புக்களும் காமத்திலிருந்து தோன்று கின்றன. பிரபஞ்சத்திலுள்ள அனைத்துமே காமத்திலிருந்து முளைத்தவைதான். வாழ்வின் பரிமாணம் முழுவதும் அதனுள் அடங்குகிறது. மலர் மலர்வது, பூத்துக் காய்ப்பது, பறவைகள் பாடுவது, அவை அழகாக இருப்பது, மயில் ஆடுவது, எல்லாம் காமத்தின் விளையாட்டுத்தான். காமக்கடலில் அலைகள் எழுந்து எல்லையற்ற வடிவங்களை உருவாக்குகின்றன.**

குழந்தைகள் எல்லாம் ஒருவர் மற்றவரின் நிர்வாணத்தைக் காண்பதில் விருப்பம் கொள்கிறார்கள். சிறுவர்களில் இந்த ஆர்வம் உண்மையில் இயல்பானது. ஒரு குழந்தை அது ஆணோ, பெண்ணோ தன் உடலை அறிய ஆவல் கொள்கிறது. ஒரு சிறுவன் தன் தங்கையின் உடல் தன்னிலும் வேறுபட் டிருப்பதை உணர்கிறான். இந்த விழிப்புணர்வு ஒரு பிரச்சினையல்ல. இது அவர்கள் பெரியவர்களாகும்போது புரிந்து கொள்ள வேண்டியதற்கு தயார்படுத்தப்படுகிறது.

ஆண் மனதிற்கும், பெண் மனதிற்கும் இடையில் எத்தனையோ வேறுபாடுகளில் ஒன்று பிரதானமாகவுள்ளது. பெண்ணை நிர்வாணமாகப் பார்க்க ஆண் ஆசைப்படுகிறான். ஆணை அப்படிப் பார்க்க பெண் விரும்புவதில்லை என்பதுதான் அந்த வேறுபாடு. அதனால்தான் உலகம் முழுவதிலும் ஏராளமான நிர்வாணப் பெண் சிலைகளைப் பார்க்க முடிகிறது. ஆணின் நிர்வாணச் சிலைகள் மிகக் குறைவு. மேற்கு உலக நாடுகளில் ஓரினச்சேர்க்கையை ஏற்றுக்கொண்ட இடங்களில்

அவற்றைப் பார்க்க முடியும். ஆண்கள் இரசிக்க ஆண்கள் தயாரித்த சிலைகள் அவை. ஆணின் நிர்வாணத்தை வரைத லிலும், ஆணின் நிர்வாணச் சிலையை வடிப்பதிலும் ஆணின் நிர்வாணத்திலும் பெண்ணுக்கு ஆர்வமில்லை. அதனால்தான் பெண்களின் சஞ்சிகைகளில் இதழ்களில் நிர்வாண ஆண் படங்கள் வெளியிடப்படுவதில்லை.

உறவில் ஆண்தான் தன் ஆசைக்குரியவளிடம் அவசரம் காட்டுகிறான். பெண் அப்பபடியல்ல. உறவில் ஆண் தன் கண்களைத் திறந்தே வைத்திருக்கிறான். பெண் தன் கண்களை மூடியே வைத்திருக்கிறாள். பார்ப்பதில் அவளுக்கு விருப்ப மில்லை. தன் ஆணை தனக்குள் உள்வாங்கி தன்னகத்தே கரைத்துக்கொள்ளவே விரும்புகின்றாள். ஆனால் ஆணுக்கு அவளைப் பார்க்கவே ஆசை. இந்த ஆசைதான் பெண்கள் தங்கள் உடலை மறைத்துக்கொள்ளத் தூண்டுதலாக அமைந்து விட்டது. உலகில் உள்ள எல்லாப் பெண்களும் தங்கள் உடலை பலவிதங்களில் மறைத்துக்கொள்கிறார்கள். இந்த விருப்பமே அவர்களுக்கு ஒரு பிரச்சினையாக அமைந்து விடுகிறது. அதிகமாக அவர்கள் தங்களை மூடமூட அவர்கள் அழகு இழந்து போய்விடுகிறார்கள். அதனால் அவர்கள் தங்கள் உடலை மறைக்கும் அதே சமயத்தில் மறைப்பது போலவே வெளிப்படுத்தவும் செய்கிறார்கள். மறைக்கப் பயன்படுத்தும் ஆடைகளைக் கொண்டே சாமர்த்தியமாக தம் உடலின் அழகை வெளிப்படுத்தி விடுகிறார்கள். அவர்கள் தங்கள் உடலை மறைப்பதற்குக் காரணம் ஆண்கள் திருட்டுத்தனமாகப் பார்த்து விடுவார்கள் என்ற பயமே. ஆண்கள் திருட்டு இரசிகர்கள் என்பது உலகில் உண்மைதான். பெண்கள், ஆண்களைக் கவரவும் உடல் அழகை வெளிப்படுத்தவும் செய்கிறார்கள். மறைப்பதும் வெளிப்படுத்துவதுமாக ஒரே சமயத்தில் அவர்கள் முரண்பட்டு விடுகிறார்கள். இந்த இரு ஆசைகளுக்குமிடையில் ஒரே சமநிலையை நிதானமாகப் பேணுகிறார்கள்.

பெண்ணை விரும்பாததுபோல் இருக்கும் ஆண் தன் வாழ்நாள் முழுவதும் பெண்ணை நிர்வாணமாக்குவது பற்றித் தொடர்ந்து கற்பனை செய்வான், கனவுகள் காண்பான். நிர்வாணத்தை உணர்ந்தவன் ஆடை அணிவிப்பதைப் பற்றித்தான் நினைப்பான்.

ஆடைகளுக்கு எந்தவிதமான ஒழுக்க மதிப்பீடும் கிடையாது. ஆடைகள் பயன்பாட்டுத் தன்மை கொண்டவை. ஒழுக்கத்தோடு எந்தத் தொடர்பும் இல்லை. குளிர்காலத்தில் குளிரைத் தாங்கக்கூடிய கம்பளி உடைகளும் கோடைக் காலத்தில் பருத்தி உடைகளும் வேண்டும். இதுதான் வேறுபாடு. பொது இடங்களில் நிர்வாணமாக யாரும் சென்று பிறரைப் புண்படுத்தும் உரிமை யாருக்கும் கிடையாது. அப்படிச் செய்வது பிறரது எல்லைக்குள் வரம்பு மீறிச் செல்வதாகும்.

பாதணி போலத்தான் உடைகளையும் பயன்படுத்த வேண்டும், நாம் வீட்டில் இருக்கும்போது பெரும்பாலும் பாதணியுடன் இருப்பதில்லையே. வெறுங்காலுடன்தான் வீட்டில் இருக்கிறோம். நம் பாதங்கள் நிர்வாணமாகத்தான் இருக்கின்றன. உடைகளை நாம் இயல்பாக ஏற்றுக்கொள்ள வேண்டும். இதில் கடுமை எதுவும் வேண்டாம். நிர்வாணத்தை இயற்கை என்று ஏற்றுக்கொள்ள முடியாவிட்டால் ஆடை அணிவதையும் இயல்பென்று ஏற்றுக்கொள்ள முடியாது. நிர்வாணமாகத்தான் பிறந்தோம், உடைகளை அணிந்திருந் தாலும் உடைகளுக்குள் நிர்வாணமாகத்தான் இருக்கிறோம். நிர்வாணம் இயல்பானது. இதன் பொருள் நிர்வாணமாகச் செல்லலாம் என்பதல்ல. நம்முடைய வசதிக்கும் மகிழ்ச்சிக்கும் ஏற்ப எதை வேண்டுமானாலும் தேர்ந்தெடுத்துக்கொள்ள நமக்குச் சுதந்திரம் உண்டு. ஆனால் பிறரைப் புண்படுத்தவோ அவமானப்படுத்தவோ நமக்குச் சுதந்திரம் அறவே இல்லை. நாம் எதை எதையோ முட்டாள்தனமாக தேவையில்லாமல் குறை கூறுகின்றோம், குற்றம் சாட்டு கின்றோம். ஒழுக்கக்கேடானது என்று கூறுகிறோம். நம்முடைய இந்தச் சிந்தனைகளுக்குக் காரணம் ஏகப்பட்ட குற்ற மனப்பான்மையை நாம் சுமந்து திரிவதுதான். நிர்வாணம் வாழ்க்கைகளின் ஓர் அம்சம். அதை விட்டு ஓடிப்போக வேண்டிய தேவையில்லை. ஆடை விடயத்தில் சுற்றிவளைத்து விலகிச்செல்ல பலவிதமான வழிமுறைகளைக் கண்டுபிடித்து வைத்திருக்கிறோம். நிர்வாணத்துக்குக் கடுமையான தடை விதித்தமையால் தோன்றியதுதான் ஆபாசச் சஞ்சிகைகள், ஆபாசப்படங்கள், ஆபாசச் சுவரொட்டிகள், நிர்வாண ஓவியங்கள், நிர்வாணச் சிலைகள், நிர்வாணக் கிளப்புகள்,

கேளிக்கை விடுதிகள். இவையெல்லாம் நிர்வாணத்தை இயற்கைக்கு எதிரானது போல ஆக்கியதால் ஏற்பட்ட பக்கவிளைவுகள்தான் இவை. நிர்வாணமும் ஆடைகளும் வாழ்வின் இயல்பானவை என சமுதாயம் ஏற்றுக்கொண்டால் ஆடைகளின் மோகம், ஆபாசம் எல்லாம் மறைந்துவிடும். பெண்களை கேலிபண்ணுவது, கற்பழிப்பு, பெண்கள் மீதான பாலியல் வன்முறைகள், கொலைகள் இதெல்லாம் நீங்கிவிடும். ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையிலான இடைவெளி குறைந்தால் இளம் குற்றவாளிகளும் குறைந்துவிடுவார்கள். கடுமையான ஒழுக்கக் கட்டுப்பாடு இலகுவாக ஒழுக்கக் கேட்டை உருவாக்கிவிடும்.

தடை இல்லாதபடியால் அழகிய மலரைக் கண்டாலும் சாதாரணமாகவே ஒரு கணம் அதனருகில் நின்று பார்த்துவிட்டுச் செல்கின்றோம், சிலவேளைகளில் அதைக் கவனத்தில் எடுத்துக் கொள்வதுமில்லை. அந்த மலரைத் தொல்லைப்படுத்த யாரும் முயல்வதில்லையே!

*(தந்திராவின் கருத்துக்களின் அடிப்படையில் இந்த அத்தியாயம் எழுதப்பட்டுள்ளது.)*



## அத்தியாயம் - 19

# ஆழ்நிலைச் சிந்தனையில் உறவு அன்பிலிருக்கும்

**'உடலுக்குள்ளே மகத்தான ஞானம் இருக்கிறது' - தந்திரா**

ஆணோடு சேர்ந்து வாழும் நரகத்தையும் பெண் அனுபவிக்கிறாள், ஆண் இல்லாமல் வாழும் நரகத்தையும் பெண் அனுபவிக்கிறாள். அதுபோலத்தான் ஆண்களும், ஏன் இந்த நிலைமை? உங்களால் உங்களுடனேயே ஒத்துப்போக முடியவில்லை. பின்பு எப்படி இன்னொருவருடன் இணைந்து இணக்கமாக வாழ முடியும்? ஆழ்நிலைச் சிந்தனையில் மட்டும் தனிமையிலும் மகிழ்ச்சியாக இருக்கலாம், பெரும் நெருக்கடிக்குள்ளும் கூட்டத்துக்குள்ளும் மகிழ்ச்சியாக இருக்க முடியும். சலிப்பு வராது, வெறுப்பு வராது, மன அழுத்தம் வராது. அப்படிப்பட்டவர்கள் முழுமை பெற்றவர்களாக ஒரு பரவச நிலையுடன் இருப்பார்கள்.

*தனியாக வாழ முடியாதவருக்கு அடுத்த மனிதனின் துணை தேவை. இத்தகையவர்கள் எளிதில் சலிப்படைந்து விடுவார்கள். தனியாக வாழ முடியாதவர் இன்னொருவரைக் கண்டதும் மகிழ்ச்சியடைகிறார். ஆண் பெண்ணைக் கண்டதும், பெண் ஆணைக் கண்டதும் காதல் வயப்படுகிறார்கள். உங்கள் நெருக்கம் அதிகமாக, அதிகமாக ஒருவரைப்பற்றியொருவர் அறிய அறிய நீங்கள் உங்களுக்குள் ஒருவராகிறீர்கள்.*

புன்னகைகள் எல்லாம் தங்களை மறைக்கும் வேஷங்கள் தான். அடுத்தவர்களைப் பார்க்கும்போது அவர்களது மேற்பரப்பை மட்டும்தான் கவனிக்கிறீர்கள், காதல் கொள்கிறீர்கள். நீங்களும் அவர்களும் பிச்சைக்காரர்களே. இந்த இரண்டு பிச்சைக்காரரும் ஒருவரையொருவர் சந்தித்து

'காதல் பிச்சை' எடுக்கிறீர்கள். இது ஆணைப்பற்றிய கருத்தல்ல, பெண்ணைப்பற்றிய கருத்தல்ல, இது அன்பைப் பற்றியது. ஆழ்நிலைச் சிந்தனையில் தோன்றிய அன்புதான் ஊற்றாக இருக்கும். மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்ளும் அளவிற்கு உங்களுக்கு மகிழ்ச்சி இல்லை என்றால் உங்கள் அன்பு சோர்வு அளிப்பதாகத்தான் இருக்கும். உண்மையான பிரச்சினை ஆணிடமோ பெண்ணிடமோ இல்லை. அன்பு பற்றியதில்தான் இருக்கிறது.

யாரும் தன்னைத் தெரிந்துகொள்ள ஆர்வம் காட்டுவதில்லை. அடுத்தவரைப் பற்றி அறிவதே வாழ்க்கையின் குறிக்கோள் என்று வாழ்கிறார்கள். நீங்கள் யாரையும் சார்ந்து இல்லை, உங்களைச் சார்ந்தும் யாரும் இல்லை என்பதைப் புரிந்துகொண்டால் வாழ்வு செம்மையாக அமையும், கணவன் மனைவி உறவு என்றும் நட்பாக அமையும். திருமணங்களை உற்று நோக்கினால் ஒரு பயத்தின் அடிப்படையில் அமைகிறது. வாழ்க்கையை நிபந்தனையுடன் ஆரம்பிக்கிறார்கள். உறவு அன்புடன் ஆரம்பமாவதில்லை. பொதுவாகத் திருமணத்தால் இணையும் இருவர் காலம்காலமாக அப்படியே இருப்பார்கள் என்று யாராலும் கூறமுடியாது. ஏனென்றால் மனிதர்கள் மாறிக்கொண்டே இருக்கிறார்கள். முதலில் சந்திக்கும்போது எப்படி இருந்தார்களோ இப்போது அப்படி இல்லை, திருமணத்தின்போது இருந்த இருவரும் இப்போது இல்லை, யாரோ இரண்டு அந்நியர்கள் சேர்ந்து வாழ்வது போல் நான்கு சுவருக்குள் வாழ்ந்துகொள்கிறார்கள். நான்கு சுவருக்கு வெளியில் நடித்து வாழ்ந்து கொள்கிறார்கள். நான்கு சுவருக்குள் நிஜமும், அதைத் தாண்டியதும் பொய்முகமும் ஆகிறார்கள். மரணம் நம்மைப் பிரிக்கும்வரை நாம் கூடவே ஒன்றாகவே சேர்ந்து ஒன்றாகவே இருப்போம் என்ற திருமண உறுதிமொழி என்னவோ உண்மைதான். ஆனால் அந்த வாக்குறுதியைக் கொடுத்த மனிதர்களாக அவர்கள் இப்போது இல்லை.

யாரும் இன்றிருப்பதுபோல் தொடர்ந்து இருக்கமுடியாது என்பதைப் புரிந்துகொள்ளுங்கள். இந்த உலகம் விநாடிக்கு விநாடி மாறிக்கொண்டே இருக்கிறது. மனக்கதவுகளைத் திறந்து வைத்திருங்கள், மாற்று வழிகளுக்குத் தயாராக

**இருங்கள். ஆழ்நிலைச் சிந்தனையின் மூலமாகத்தான் வளர்ச்சியும் பக்குவமும் வரும். ஒருசிலர்தான் வளர்ச்சி அடைகிறார்கள், பெரும்பாலானோர்களுக்கு வயதாகிக் கொண்டு போகிறதே தவிர வளர்ச்சி ஏற்படுவதில்லை. முதுமை அடையலாம். ஆனால் வளர்ச்சியும், பக்குவமும் இல்லாமலிருக்கும். முதுமை வந்துவிடுகிறது, ஏனோ உள்ளூர வளர்ச்சி மட்டும் வரமாட்டேன் என்று அடம் பிடிக்கிறது. ஆழ்நிலைச் சிந்தனையில் மட்டும்தான் ஒருவர் வளர்ச்சி யடையவும் உறவு அன்பில் இருக்கவும் முடியும்.**

வாழ்க்கை சொந்த அனுபவரீதியானது. நோட்டு புத்தகம் வைத்து மனப்பாடம் செய்வதில்லை. மிருகங்கள், பறவைகள், சகல ஜீவராசிகளும் copy பண்ணி வாழ்வதில்லை. அதனால் தான் அவைகள் அவைகளாகவே இயல்பாக, சொந்தமாக, சுதந்திரமாக வாழ்கின்றன.' யார் copy பண்ணி வாழ்கிறார்களோ அவர்கள் தன்னுணர்வும் விழிப்புணர்வும் இல்லாமல் வாழ்கிறார்கள். அவர்கள் தங்கள் தனித்துவத்தையும் இழக்கிறார்கள். அவர்கள் தங்களுக்குப் பொருந்துவதை இன்னும் கண்டுபிடிக்கவில்லை. சொந்த விழிப்புணர்ச்சி மட்டுமே அதைச் சாத்தியமாக்கும்.

**'உங்கள் உடலைக் கவனித்துக் கேளுங்கள். உடலுக்குள்ளே மகத்தான ஞானம் இருக்கிறது. அதன்படி சென்றால் எப்போதும் சரியாகத்தான் இருப்பீர்கள்' என்கிறது தந்திரா. நீங்கள் உங்கள் உடல் கூறுவதைக் கேட்காதுவிட்டால் மகிழ்ச்சியோடு இருக்க மாட்டீர்கள், ஏக்கத்தோடு இருப்பீர்கள் என்று மேலும் விளக்குகிறது.**

உங்களுக்குப் பொருந்துவதை நீங்கள் செய்யுங்கள். அதில் மகிழ்ச்சியை உணர்வீர்கள், மற்றவர்களுக்குப் பொருந்துவதை நீங்கள் செய்யாதீர்கள். அதில் மனக்குழப்பம் ஏற்படும். நாம் மூச்சு விடுகிறோம் - அதே மூச்சுத்தான், நீர் பருகுகிறோம் - அதே நீர்தான், தூங்கிக்கொண்டு இருக்கிறோம் - அதே தூக்கம்தான், இவை எல்லாம் பொருந்துகிறது. இயற்கையோடு முழுமையாக இணக்கத்தோடு வாழ்வோமானால் சென்றுவிட்ட நேற்றையது பற்றிக் கவலையே இல்லை, அதையே மனதில் சுமக்கத் தேவையில்லை. உங்கள் இன்றையதை உங்கள்

நேற்றயதுடன் ஒப்பிடாதீர்கள், உங்கள் நாளையதை முன்கூட்டியே கொண்டு வராதீர்கள். ‘இயல்பாக இப்போது இந்தக் கணத்தில் இப்பொழுதே இங்கேயே வாழுங்கள். அந்தக் கணத்தை மகிழ்ச்சியாகக் கொண்டாடுங்கள்’ எனத் தந்திரா விளக்குகிறது.

குடும்பத்தில் எதையும் ‘கடமை’யாக நினைக்கக்கூடாது. அப்பொழுதுதான் அது மகிழ்ச்சியாக இருக்கும். எப்பொழுது கடமையாகக் கருதப்படுகிறதோ அப்போது குடும்ப ஈர்ப்பு இறந்துவிட்டது என்று அர்த்தம். அப்போது வாழ்வு தீர்க்கமுடியாத பிரச்சினைகள் கொண்டதாகி விடுகிறது. இந்த உலகமே இப்படித்தான் இருக்கிறது. நீங்கள் பிரார்த்தனை செய்யலாம், தியானம் செய்யலாம், மனநல ஆலோசனை பெறலாம், சுவாமியார்களைச் சந்திக்கலாம், சோதிடரை அணுகலாம், வல்லுநர்களுடன் ஆலோசனை நடத்தலாம், இப்படிப் பலவற்றைச் செய்யலாம். ஆனால் உங்களுடைய அடிப்படையான பிரச்சினை அப்படியேதானிருக்கும். காரணம் நீங்கள் சந்திக்கும் அவர்கள் எல்லாம் வெறும் கடமையைத்தான் செய்கிறார்கள். அதில் ‘அன்பு’ கிடையாது. நீங்கள் சந்திக்கும் அவர்களும் ஏதோவொரு அடிப்படைப் பிரச்சினையில்தான் இருக்கிறார்கள். சில வேளைகளில் அடிப்படைப் பிரச்சினை ஏதோவொரு வகையில் பாலுணர்வுச் சக்தியோடு சம்பந்தப் பட்டிருக்கும். அவர்கள் அதைத் தீர்க்க வேறு எங்கேயோ முயன்று கொண்டிருப்பார்கள். பல மக்கள் துக்கமாகவே இருப்பதற்குக் காரணம் அவர்கள் எல்லோருடனும் கூடி சந்தோசமாக இருக்க விரும்புவதே இல்லை. அவர்கள் ஏதோவொன்றை எப்போதும் குறைகூறிக்கொண்டே இருப் பார்கள்.

‘அடக்கப்படாத மனநிலையில் உள்ளவர்கள் ஆனந்தம் மற்றும் கொண்டாட்டத்தைத் தவிர வேறு எதையும் தெரியாத நிலையில் மகிழ்ச்சியே வாழ்க்கையின் முக்கிய அம்சமாகக் கருதி அன்புடன் வாழ்வில் இரண்டறக் கலந்து வாழ்வார்கள்’ என தந்திரா எடுத்துச் சொல்கிறது.



## அத்தியாயம் - 20

# காதல் தனிச் சிறப்பு உடையது, திருமணம் மரபு வழிப்பட்டது

**'மனிதர்கள் ஆண், பெண் கலவையாக இருப்பதால் காதல் வயப்படுகிறார்கள்' - தந்திரா**

**திருமணத்தின் மூலம் காதலை நசுக்கி விடுகிறோம். காதல் சுதந்திரமானது. திருமணம் என்பது காதலின் நிழல். எந்த வினாடியில் சேர்ந்து வாழ்கிறோம் என்று நினைக் கிறார்களோ அந்தக் கணத்திலிருந்தே அவர்கள் ஒன்றாக வாழவில்லை. திருமணப் பந்தம் உண்மையான ஒன்றிணைப்பு ஆவதில்லை. திருமண அமைப்பு இந்த உலகிலிருந்து காதலை விரட்டிவிட வேண்டும் என்று விரும்புகிறது. இது மனிதனின் இயல்பான உணர்வுக்கு எதிரானது. காதலிக்கும்போது இருக்கும் தனித்தன்மையானது திருமணத்தின் பின்பு அது சாதாரணமாகி விடுகிறது. காதல் முதன்மையானது, தனிச்சிறப்பு உடையது. திருமணம் வெறும் மரபு வழிப்பட்டது. வாழ்வில் காதலுக்கு முதன்மை அளிக்கும்போது திருமணம் என்று சொல்லப்படுவது இல்லாமல் போய்விடும். அதனுடன் சேர்ந்து விவாகரத்தும் ஒழிந்துபோய்விடும். காதலுக்காகவும் மகிழ்ச்சிக்காகவும் வாழும் வாழ்வு அப்போதுதான் ஆரம்பமாகும்.**

காதல் என்பது முற்றிலும் வித்தியாசமான தன்மை கொண்டது. காதல் என்பது 'உண்மை நிலையுடன்' காதல் கொள்வது. காதலிலுள்ள இருவர் அது வளர்வதற்கு உதவி செய்கிறார்கள். ஒரு கண்ணாடி போல் ஒருவரில் ஒருவர் பிரதிபலிக்கிறார்கள். காதலில் இருவருக்கும் வளர்ச்சி, பக்குவம் ஏற்படாவிட்டால் அந்தக் காதலில் குறைபாடு உண்டு. ஏதோ

உள்நோக்கம் உண்டு. அன்பு என்பதே ஒரு வளரும் நிலைதான். காதலுடன் முழுமையாக அதனுள் செல்ல சுயநலன்கள் நீங்கத் தொடங்கும். ஒருவரை முழுமையாக மாற்றி புதிய பிறவியாக்கிவிடும்.

காதலன் - காதலியோ, கணவன் - மனைவியோ ஒருவரை ஒருவர் சொந்த உடைமையாகக் கருதினால் அது தனித் தன்மையை அழித்துவிடும். காதலன் - காதலியோ, கணவன் - மனைவியோ ஒரு கூரையைத் தாங்கும் இரண்டு தூண்கள் போன்றவர்கள்.

**பிற்காலத்தில் ஒருவரை ஒருவர் தன் உடைமையாகப் பார்க்கும்போது காதல் அழிந்துவிட்டது. திருமணம் சிக்கல் களைத் தோற்றுவித்துவிட்டது. பின்பு ஒருவரை ஒருவர் உபயோகப் பொருட்களாகப் பாவிக்கத் தொடங்கிவிட்டார்கள். திருமண அமைப்பு முறையில் திருமண ஒப்பந்தங்கள் என்ற முறை மறையும்போது தனி மனிதர்மீது ஒருவருக்கொருவர் உரிமை கொண்டாடும் நிலை முடிவுக்கு வந்துவிடும். சமுதாயத்தில் ஏற்படும் புதிய மாற்றமும் அதனுடைய பிரச்சினைகளுடன்தான் வரும். மனிதர்களுக்கு எப்போதும் விவகாரங்கள், சிக்கல்கள், பிரச்சினைகள் வெவ்வேறு வடிவங்களில், காலத்துக்குக்காலம் இருந்துகொண்டேதான் இருக்கும். திருமணத்தால் ஏற்படும் முரண்பாடுகள், சிக்கல்கள் நீங்கக்கூடியவை. இந்தப் பூமியில் வாழப் பிரச்சினைகள் எப்போதும் தேவைதான். சிக்கல்கள், பிரச்சினைகள் மூலமே நாம் பக்குவம் அடைகிறோம், விழிப்புணர்வும், தன்னுணர்வும், வளர்கிறது. சிதைந்து அழிந்து கொண்டிருக்கும் காலத்துக்குப் பொருந்தாத மரபுகளை, சம்பிரதாயங்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு ஏகப்பட்ட சிக்கல்களில் மாட்டிக் கொள்கிறோம். மாறுதல்கள் காரணமாகத் தோன்றும் பிரச்சினைகளை, சிக்கல்களை ஏற்று சமாளிப்பதன் மூலமாக புதிய மாற்றங்களைக் கொண்டு வருவதுதான் புத்திசாலித்தனம்.**

பிரச்சினைகளை எதிர்நோக்கவும், சமாளிக்கவும் துணிவு தேவை. அதுதான் உண்மையான வாழ்க்கை. மனிதனால் அவற்றைச் சமாளிக்க முடியாது என்பதற்கு எந்தக் காரணமும் இல்லை. நமது சமுதாய அமைப்பு முழுக்க முழுக்க எல்லா

விதமான ஏகப்பட்ட பயங்களின் அடிப்படையில் அமைந்திருக் கிறது. நம்மைச் சுற்றியுள்ள எதைக் கண்டாலும் பயம். அதிலும் கற்பனைப் பயம் அதிகம். வாழ்க்கையை பயத்தினால் எந்த அளவுக்குச் சிக்கல்கள் நிறைந்ததாக ஆக்கிவிட்டோம் என்பதை உணர்வதே இல்லை. என்ன நடக்குமோ என்ற பயம் நம்மைப் புதிய தளங்களில் கால் வைக்க முடியாமல் தடுத்து விடுகிறது. அதனால் யதார்த்த நிலையை காண நாம் மறந்து விடுகிறோம். புதுமையைக் கால்விலங்காக எண்ணி பழைய கால்விலங்கோடு இழுத்து இழுத்து நடந்து கொண்டு இருக்கிறோம். பயத்துடன் வாழப்பழக்கப்பட்டு விட்டதால் அவற்றை வித்தியாசமாக உணர்வதே இல்லை. கூண்டில் அடைக்கப்பட்ட பறவையைப் பொறுத்த வரையில் விசாலமான வானத்தில் பறப்பதற்கு அது நிறையச் சிரமங்களை சந்திக்கத்தான் வேண்டும் என்றாலும் அந்த வாய்ப்பை அது ஏற்கத்தான் வேண்டும். கூண்டில் வாழ்வதால் பாதுகாப்பும் உணவும் கிடைக்கிறது என்றாலும் வானத்தில் பறக்கும் சுதந்திரமும் ஆனந்தமும் அந்தப் பாதுகாப்பைவிடச் சிறந்தது.

இப்போது குழந்தைகளை சில தனி மனிதர்களின் பொறுப்பில், உறவினர் பொறுப்பில், சில பராமரிப்பு நிலையங் களின் பொறுப்பில் விட்டு வைத்திருக்கிறோம். எதிர்காலத்தில் குழந்தை பிறக்க தந்தை என்பவர் தேவையில்லை. ஓர் ஆணின் உயிர் அணுவை பல ஆண்டுகளிற்கு மருத்துவ விஞ்ஞான முறையில் பாதுகாத்து வைத்து அதை எந்தக் காலத்தில் என்றாலும் பாவித்து ஒரு குழந்தையைப் பிறப்பிக்க முடியும். குழந்தை பிறப்பதற்குத் தாயும் தேவைப்படமாட்டாள். பெண்ணின் முட்டையை எடுத்துக் கருக்கட்ட வைத்தால் சரிதானே. Cloning முறையில் ஒருவரைப்போலப் பிறிதொருவரைத் தோற்றுவிக்கின்ற இக்காலகட்டத்தில் தாயின் கருவறையில் கிடைக்கக்கூடிய எல்லா வசதிகளும் ஒரு கருவிமூலம் கிடைத்துவிடும். விரைவில் அறிவியல் அதற்கு ஒரு வழிமுறையைக் கண்டுபிடிக்கத்தான் போகிறது. நாம் வெறும் உபயோகப்படும் பொருளாக மாறும் காலகட்டத்தின் வாசற்படியில் நிற்கிறோம். ஒரு குழந்தையை 9-10 மாதங்கள் சுமக்க வேண்டிய தேவை ஒரு தாய்க்கு இல்லாமல் போய்விடும். அப்போது அக்குழந்தையின் பெற்றோர் யார் என்பதை அறிவது சிரமமாகி விடும்.

அப்போது அனைத்துப் பெண்களும் தாயாகவும், அனைத்து ஆண்களும் தந்தையாகவும் செயற்படவேண்டி வரும். குழந்தைகள் சமுதாயத்தின் கூட்டுப் பாதுகாப்பில் அப்போது வளர்வார்கள். நிச்சயமாக எல்லாமே மாறத்தான் போகின்றது. காலாவதியாகிப்போன சம்பிரதாயம், மரபு, போன்ற பழைய சிந்தனை முறையில் சிந்திப்பதால் கால மாற்றத்தை நாம் புரிந்து கொள்வதில்லை. குழந்தையின் நல்வாழ்வுக்காக சேர்ந்து வாழ்கின்றோம் என்ற பெற்றோர்கள், தற்போது குழந்தையின் நல்வாழ்வுக்காகப் பிரிந்து வாழ்கின்றோம் என்கிறார்கள். நல்ல டாக்டரையோ, நல்ல கல்லூரிகளையோ நாடுவதைப்போல காலப்போக்கில் நல்ல பிள்ளைகளைக் கொடுக்கும் மருத்துவ நிலையங்களை நாடப்போகின்றோம்.

ஒரு பெண்ணை ஒருவர் திருமணம் செய்யும்போது அவர் அவளை உரிமைகொண்டாட ஒப்பந்தம் செய்வதால் அவள் ஒரு கருவியாக ஏற்றுக்கொள்ளப்படுகிறாள் என்று பொருள். மனிதர்களை ஒப்பந்தம் மூலம் உரிமை கொண்டாடும்போது பொருட்களாக மாற்றப்படுகிறார்கள். மனிதர்கள் மீதான இந்த உடைமை உணர்வு பிழையானது. நடிப்புக்கலவாத காதலில் ஆணும் பெண்ணும் நல்ல நண்பர்களாக வாழ்வார்கள். அங்கு நிர்ப்பந்தங்களோ கட்டுப்பாடுகளோ உறவுகளில் இருக்காது, உரிமம் அறவே இருக்காது, அவர்கள் உறவு அன்பை மட்டுமே ஆதாரமாகக் கொண்டிருக்கும். அந்த வாழ்வு அன்பின் வெளிப்பாடாக மட்டுமே இருக்கும், ஒப்பந்தம் போட்டால் அங்கே அன்பு இறந்துவிடும். சட்டப்படியான திருணங்களில் இதுதான் பெரும்பாலும் நடக்கிறது. அங்கு ஒரு ஒப்பனை வாழ்வுதான் நடக்கிறது. நீ என் மனைவியாக இருப்பதால் நான் அன்பு செலுத்த வேண்டும் என்று எதிர்பார்க்கையில், நான் அவள் மீது சட்டப்படியான உரிமையை நிலைநாட்ட முற்படுகிறேன் என்று பொருள். ஒருவரையொருவர் புரிந்து கொள்ளாதவர்களாகவே இந்தத் திருமண ஒப்பந்தம் மூலம் திருமண பந்தத்தில் ஈடுபடுகிறார்கள். ஒருவர் எப்படி வாழவேண்டும் என்பதை அரசாங்கமோ, சட்டமோ, நீதிமன்றமோ கூறக்கூடாது. அந்தக் கணத்திலே அன்பு தொலைந்து விடுகிறது. அவநம்பிக்கையின் அடித்தளம்தான் திருமண ஒப்பந்தங்களே. ஆரம்பத்தில் அன்பு மின்னுவது போல இருந்தாலும் அது மெருகூட்டப்பட்ட மின்னல்தான் என்பதை

பின்பு காலம் உணர்த்திவிடும். அதனால்தான் சட்டப் பிரச்சினைகள் ஆரம்பித்து விடுகிறது.

**அன்பு அற்புத சக்தி உடையது – தந்திரா.** அன்பு இல்லாமல் போனதுதான் பல பிரச்சினைகளுக்கு அடிப்படைக் காரணம். வீடு, நாடு, உலகத்திற்கும் இது பொருந்தும். அன்பு இல்லாமல் போனால் வாழ்வில் வெறுப்பு ஏற்படும். கொடைகள், உபகாரம், பணம், அன்பளிப்பு, பரிசுகள், புன்னகை மூலம் அன்பைப் பெறமுடியாது. நிபந்தனையற்ற அன்புடன் பழக வேண்டும், வாழவேண்டும்.

மனைவி என்பவள் கணவனின் பாதியோ, கணவன் என்பவன் மனைவியின் பாதியோ அல்ல. அவர்கள் இருவரும் முழுத் தன்மையில் இருக்கிறார்கள். பெண் என்பவள் ஆணினுடைய 'பாதி' என்று காலம்காலமாக சொல்லப்பட்டு வருவது ஆண் ஆதிக்கத்தைத் தூண்டிவிடுகிறது. மனைவியும் கணவனும் ஒருவருக்கொருவர் அடிபணியாது 'அன்புக்கு' அடிபணிய வேண்டும். ஆண் எப்போதும் பெண் தன்னுடைய பாதி என்று எண்ணுகின்றான். ஆனால் தான் பெண்ணின் அடுத்த பாதி என்று எண்ணுவதில்லை. ஆண் தான் முழுமை யாக இருப்பதாகவும் பெண் தன்னில் அடுத்த பாதியாக இருக்கிறாள் என்று கருதிக்கொள்வதனாலோ என்னவோ திருமணத்திற்குப் பின் பெண் தன் பெயரோடு தன் கணவனின் பெயரையும் சேர்த்து தன்னை முழுமையாக்குகிறாள். ஆனால் ஆணிடம் மாத்திரம் எந்தவித மாற்றமும் இல்லை, அவனிடம் ஏதோ ஒன்று சேர்கிறது, ஆனால் பெண்ணிடமிருந்து ஏதோ ஒன்று எடுக்கப்படுகிறது.

ஒருவரை ஒருவர் உடைமையாக்கும்பொழுது காதல் முற்றிலும் மறைந்துவிடுகிறது. உடைமையாக்குவதும் உரிமை கொண்டாடுவதும் காதல் இல்லை. ஒரு பெண் தன்னுடைய தனித்தன்மையை இழக்கக்கூடாது, அவளது சுதந்திரத்தை அழிக்கக்கூடாது. 'ஒருவர் சுதந்திரத்தை மற்றவர் மதிக்க வேண்டும்' இதுதான் தந்திராவின் நோக்கம். ஒருவரில் ஒருவர் நம்பிக்கை வைத்தலே சுதந்திரமாகும்.

சுதந்திரத் தன்மையில்தான் அன்பு மற்றும் காதல் நிகழ்ந்து கொண்டு இருக்கும். நம்பிக்கை என்றால் என்ன?

அறிவுக்கூர்மையையும் புத்திசாலித் தன்மையையும், புரிந்து கொள்ளுதலையும், பிரக்ஞை உணர்வையும் மதித்தலே நம்பிக்கையாகும். தவறின் சச்சரவு, பிரிவு என்று பல பாதைகளைக் காட்டும். அன்பு என்பது உரம் போட்ட மண் போன்றது. அதில் அழகிய மலர்களின் விதைகளை விதைக்கா விட்டால் களைகளும் கோரைகளும் அதில் முளைக்கும். அன்பு ஆழமாகச் சென்றால் அது புலன்களுக்கு அப்பால் இயங்கும். அதனுடைய தன்மையில் எந்தப் பாலுணர்வும் இருக்காது (Non-sexual). அந்த நிலையில் காதலன் - காதலி, கணவன் - மனைவி ஒருவருக்கொருவர் தெய்வீகமாகத் தெரிவர். அன்பு பிரார்த்தனையாக மாறமாற உயர்ந்து செல்வார்கள்.

அன்புக்குப் பலவிதமான விளக்கங்கள் இதுவரை சொல்லப்பட்டுவிட்டன. ஒரே கருத்தைத்தான் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறுவிதமாக வெவ்வேறு பேர்கள் கூறியிருக்கிறார்கள். அன்பு என்பது ஏன் இப்படியாக இருக்க முடியாது? 'என் அதே இடத்தில் எனக்குப் பதிலாக பிறிதொரு வரை வைத்துவிட்டு நான் அவருக்குள் கரைந்துவிடுவது.'

ஒரு காலத்தில் தாயை மட்டுமே அறியப்பட்ட நிலைமை இருந்தது. அங்கே தாய் மட்டுமே குடும்பத் தலைவராக இருந்தாள். தந்தை என்பது தாய் போன்று பழமையானது அன்று. தந்தையைவிட மாமன் என்பது மிகப் பழமையான முறையாகும். அம்மா என்பதுதான் மிகமிகப் புராதனமானது. திருமணத்தை நிறுவன அமைப்பாக மாற்றிய பின்புதான் அப்பா வருகிறார். அதற்கு முன்பு அவர் இல்லை. புராதன காலத்தில் முழு ஆண்களும் தந்தை போல பாதுகாப்பை வழங்கினார்கள். தாய் மட்டுமே தெளிவான உண்மையாக இருந்தாள். முழு இனக்குழுவும் குழந்தைகளிடம் அன்பு செலுத்தினார்கள். அவர்கள் முழுச் சமுதாயத்திற்கும் சொந்தமானவர்கள் ஆனார்கள்.

நமது ஒழுக்கம் பற்றிய கருத்தே ஒழுக்கக்கேடானது. இந்த ஒழுக்கக் கட்டுப்பாடே ஒழுக்கக்கேட்டை வளர்க்கிறது. இந்த சமுதாயம்தான் காதலை விரட்டிவிட்டு நடிப்புக் கலந்த காதலை ஆட்சிப் பீடத்தில் ஏற்றி வைத்துவிடுகிறது. இத்தகைய திருமண அமைப்பால் உற்பத்தியானவைதான் இரவு விடுதிகள். வேறு

ஒரு பெண்ணுடன் தன் கணவன் நெருக்கமாகப் பழகுவதை போர்க்களமாக மாற்றும் மனைவி, தன் கணவன் இரவு விடுதிக்குச் செல்வதைத் தனக்கு ஆபத்தாக நினைப்பதில்லை.

- **ஒழுக்க வரையறைவுகளினதும், கௌரவ திருமண ஒப்பந்தங்களினதும் விளைவு இரவு விடுதிகள்.**
- **திருமண சட்டத்தின் விளைவு விவாகரத்து.**
- **கலாச்சாரம், பண்பாடுகளைப்பற்றி அதிக வலியுறுத்தல் களின் விளைவு நிர்வாண புகைப்படங்கள், ஆபாச சினிமாக்கள், ஆபாச சஞ்சிகைகள்.**
- **திருமண ஒப்பந்தங்கள், திருமண விதிகள் நீங்கும்போது மஞ்சள் பத்திரிகைகள், ஆபாச சஞ்சிகைகள், நிர்வாண புகைப்படங்கள் எல்லாம் தானாகவே அழிந்துவிடும், விவாக இரத்துக்களும் அற்றுவிடும்.**
- **திருமணங்கள் காதலுக்கான திருமணங்களாகவும் அன்புக்கான திருமணங்களாகவும் மாற வேண்டும்.**
- **அங்கே அவர்கள் தங்கள் முழுமையான சுதந்திரத்தில் இருப்பார்கள்.**
- **அந்தப் பிரிக்க முடியாத சுதந்திரம் அவர்களுக்கு எழுச்சியைக் கொடுக்கும்.**

உலகில் உள்ள அனைத்து மொழிகளிலும் காதலில் விழல் என்ற சொல்லே (Fall in Love) பாவிக்கப்படுகிறது. அது தவறானது, காதலில் எழல் (Rise in Love) என்பதே சரியானது. காதல் உலகின் மகத்தான கலை, காதல் என்பது புரிந்து கொள்ளல், காதல் ஆரம்பத்தை அறியும், முடிவை அறியாது. காதலை அறிந்ததாக நீங்கள் நம்புகிறீர்கள். நடனம் கற்க முயற்சி தேவை, ஒருவர் மட்டும் ஈடுபட்டால்போதும். காதல் அப்படியல்ல. காதலில் இருந்து இணக்கம், மகிழ்ச்சி எல்லாம் நிகழ்கிறது. காதலைப் பகிரும்போது திரும்ப வேண்டும் என்ற எண்ணத்துடன் கொடுத்தால் காதல் பேரமாகிவிடும்.

உண்மையில் இந்தச் சமுதாயம் திருமணத்திற்கு எல்லாத் தடைகளையும் விதிக்க வேண்டும், திருமணத் தடைச்சட்டம் பாதுகாப்பானது. திருமணத்துக்கு அவ்வளவு எளிதாக அனுமதி வழங்கக்கூடாது. இரண்டு மகிழ்ச்சி அற்றவர்கள் சேரும் பொழுது மகிழ்ச்சியின்மையைப் படைத்துக் கொள்கிறார்கள். உண்மையில் இந்தச் சமுதாயம் எல்லாத் தடைகளையும் திருமணத்திற்கு முன் விதிக்கவேண்டும். திருமணத்திற்கு எளிதாக அனுமதி வழங்கக்கூடாது. பெரும்பாலான திருமணங்கள் பதவி, அந்தஸ்து, அழகு கௌரவம் சாதி, மதம், பெற்றோரைத் திருப்திப்படுத்தல் போன்றவற்றுக்காக நிகழ்கின்றன. இவ்வாறான காரணங்கள் திருமணத்திற்குப் பின் அற்றுவிடும். அன்பு மட்டுமே நிலைத்திருக்க வேண்டும். அன்பைப் பகிர்வதற்காகவே திருமணங்கள் நடைபெற வேண்டும். திருமணங்களில் அன்பு மட்டுமே மையமாக வேண்டும். ஆணும் பெண்ணும் ஒருவரையொருவர் நன்கு புரிந்துகொள்ளும் அளவுக்கு அனுமதிக்கப்பட வேண்டும். ஒருவரையொருவர் புரிந்துகொள்ளாவிடின் அங்கு தடைச் சட்டம் விதிக்கப்பட வேண்டும். வாழ்வின் பொறுப்புணர்ச்சியையும், ஒருவருடன் இணைந்து வாழ்வதால் எழும் பிரச்சினைகளையும் முதலில் புரிந்துகொள்ள வேண்டும். அதன்பின்பே சேர்ந்து வாழத் தீர்மானிக்க வேண்டும். வாழ்க்கை மிகவும் யதார்த்தமானது. ஒருவருக்குள் என்ன மறைந்திருக்கிறதோ அதை வெளியில் கொண்டுவரக் கூடியது. உனக்குள் அன்பு மறைந்திருந்தால் திருமணம் அதை வெளியே கொண்டு வருகிறது. அது நடிப்பாக இருந்தால் அது விரைவிலே மறைந்து அசிங்கமான தன்மை வெளியே வருகிறது. நீ எதை உனக்குள் கொண்டு இருக்கிறாயோ அது வெளியே வருகிறது. திருமணம், காதலில் வளர்வதற்கான ஒரு மாபெரும் வாய்ப்பை வழங்குகிறது.

*காதல் தோன்றியவுடன் மறைந்துவிடக் கூடியதல்ல. காதல் நதி சாதாரணமானது அல்ல. அது தோன்றி மறைந்து வரட்சியில் காய்ந்து விடுவதல்ல. ஒவ்வொருவருக்குள்ளும் இயற்கையாக காதல் இருக்கிறது, அதற்குள் நடிப்பு கலப்பதால் அது விஷமாகிறது. காளிதாசர். ஷேக்ஸ்பியர், இரவீந்திரநாத் தாகூர், பாரதியார் கவிதைகள் தனிச்சிறப்பு உடையவை. இவர்கள் பாடல்களைக் கேட்டால் ஒருவர் தங்களுக்குள் மறைந்து*

இருக்கும் அன்பு, காதல் போன்ற சாத்தியக்கூறுகளை அறியும் முதல் வாய்ப்பு ஒருவருக்கு ஏற்படக்கூடும். காதல் தனக்கே உரித்தான சொந்த உள்ளார்ந்த மகிழ்ச்சியைப் பெற்று இருக்கிறது. காதலை எதுவும் அளிக்க முடியாது. அது இருந்தால் வளர்ந்து கொண்டே இருக்கும். வெறும் ஆண் - பெண் கவர்ச்சியே காதல் என்று பெரும்பாலும் ஒருவர் தன்னைத் தவறாகப் புரிந்துகொள்கிறார். திருமணத்தின் மூலம் கவர்ச்சி அழிந்துவிடும். ஆண் - பெண் உறவில் பால் கவர்ச்சி மறைந்து விடும். எனவே காதலை இனக்கவர்ச்சி, பாலுணர்ச்சி இவற்றுடன் இணைத்து தவறாகப் புரிந்துகொள்ளாதீர்கள்.

**ஒருவர் உங்களுடன் இருந்தாலே உங்களுக்குள் திடீர் மகிழ்ச்சியை உருவாக்குகிறது என்றால், நீங்கள் பரவச நிலை கொள்கிறீர்கள் என்றால், உங்கள் மனதின் ஆழத்தில் மற்றொருவரின் முன்னிலை ஏதோ ஒன்றை நிரப்புகிறது என்றால், மனதில் இணக்கம் ஏற்படுகிறது என்றால், உங்களை ஒன்றுபடுத்துகிறது என்றால், உங்கள் தனித்தன்மை, மையம், அடித்தளம் ஆகியவை வளர்கிறது என்றால் அப்போது அது காதல்.**

**காதல் என்பது ஆசை அல்ல**
**காதல் என்பது உணர்ச்சி அல்ல**
**காதல் என்பது கவர்ச்சி அல்ல**
**காதல் என்பது ஒரு புரிதலே!**

யாரோ ஒருவர் ஏதோ ஒரு விதத்தில் உங்களை முழுமைப்படுத்துகிறார் என்றால்,

யாரோ ஒருவர் உங்களை முழு வட்டமாக்குகிறார் என்றால்,

யாரோ ஒருவரின் இருத்தல் உங்களை விரிவுபடுத்துகிறது என்றால்,

அங்கே நீங்கள் நீங்களாக இருக்க அது சுதந்திரமளிக்கிறது என்றால்,

அதுவே காதல்.

ஒவ்வொரு மனிதரும் இருபால் பண்புடையவர்கள். ஆண்களிடம் பெண்ணின் தன்மை மேலோங்கியிருந்தால் அவர்கள் பெண் இயல்புடையவர்களாகவும், பெண்களில் ஆண் தன்மை கூடியிருந்தால் ஆண் இயல்புடையவர்களாகவும் இருப்பார்கள். பெண்களிடம் ஆக்கிரமிப்பு தோன்றும் போதெல்லாம் அவளுக்குள் இருக்கும் காருண்யம் அவளை அமைதியாக்க தயாராகவிருக்கும். ஒவ்வொரு ஆணுக்குள்ளும் பெண்ணுக்குள்ளும் இரண்டு பக்கங்கள் இருக்கின்றன, இருந்து கொண்டேயிருக்கும். இதைத்தான் 5000 வருடங்களிற்கு முன்பே ஒரு ஆண் முற்றிலும் ஆணாகவும் இல்லை, ஒரு பெண் முற்றிலும் பெண்ணாகவும் இல்லை என தந்திரா (Tantra) கூறியுள்ளது.

நாம் ஒவ்வொருவரும் உலகில் முதல் ஆணான 'ஆதாம்'ஐயும் (Adam), முதல் பெண்ணாக 'ஏவாள்'ஐயும் (Eva) நமக்குள் உள்ளடக்கியிருக்கிறோம். நாம் இரண்டும் கலந்த இரு வேறு மாறுபட்ட ஒருங்கிணைப்பு.

**உங்கள் உள்ளிருக்கும் ஆணும் பெண்ணுமே காதலுக்குக் காரணமாகும்.**

மனிதர்கள் ஆண் - பெண் கலவையாக இருப்பதால்தான் காதல் வயப்படுகிறார்கள். கோடிக்கணக்கானவர்கள் ஒரு குறிப்பிட்ட ஆளைப் பார்த்தவுடன் இவர்தான் எனக்குரியவர், இவர்தான் எனக்குரியவள் என்ற உணர்வு எப்படி ஏற்படுகிறது? ஏன் அந்த குறிப்பிட்ட பெண்மீது அந்த ஈர்ப்பு? ஏன் குறிப்பிட்ட அந்த ஆண் மீது ஒரு உந்துதல்? 'தந்திரா' இதற்கும் விடையளிக்கிறது. ஆணின் உள்ளே கலந்திருக்கும் அந்தப் பெண்ணின் உருவத்துடன் வெளியே இருக்கும் அந்தப் பெண்ணின் உருவமும் ஒத்துப்போகிறபோது காதலாக மாறுகிறது. இதேபோலத்தான் வெளியேயிருக்கும் ஆண், பெண்ணிற்கு உள்ளேயிருக்கும் ஆணின் உருவத்தோடு ஒத்துப்போவதால் அந்தக் குறிப்பிட்டவரோடு காதல் ஏற்படுகிறது. ஒவ்வொருவருக்கும் உள்ளேயிருக்கும் அந்த உருவம் ஆழமாக வேலைசெய்து கொண்டேயிருக்கிறது. இந்தப் பரவச உணர்வுதான் காதல் என்பது, ஈர்ப்பு என்பது, உந்துதல் என்பது. வெளியே உள்ளவர் ஒவ்வொருவருக்கும்

உள்ளேயிருக்கும் உருவத்துடன் பொருந்தவில்லை என்றால் விரைவிலேயே ஒருவருக்கொருவர் பிடிக்காத ஆயிரம் அம்சங்கள் இருப்பதை விரைவிலேயே அறிந்து வெறுப்படைவார்கள். அன்னியர்கள்போல் ஆகிவிடுகிறார்கள். ஒவ்வொருவருக்குள்ளும் காதல் இருக்கிறது. அதற்குள் நடிப்புக் கலப்பதால்தான் காதல் விஷமாகிறது. ஏதாவது காரணங்களுக்காகவோ உள்நோக்குடனோ நடைபெறும் திருமணங்களில் அவர்களுக்கு உள்ளே இருக்கும் உருவத்துடன் முழுமையாக ஒத்துப்போகாததால் அத் திருமணங்கள் மகிழ்ச்சியையும் துயரத்தையும் கொடுத்துக் கொண்டேயிருக்கும்.

இதற்கு 'தந்திரா' என்ன சொல்கிறது? நீங்கள் உங்களுக்குள்ளே செல்லுங்கள். அங்கேயிருக்கும் ஆணையும் - பெண்ணையும் கண்டுபிடியுங்கள். அந்த உருவத்துடன் சேருங்கள். அந்த இன்பநிலை தெய்வீகமானது. அந்த நிலையை வெளியேயிருப்பவருடன் அடைய முடியாது, அந்த இயற்கையான உணர்ச்சிமயமான நேரத்தில் நீங்கள் இந்த உலகில் இருப்பதில்லை என்கிறது. இந்த நிலையை ரிஷிகள், யோகிகள் போன்றோர் ஆழ்நிலைத் தியானத்தில் அடைகின்றனர்.

ஒருவர் தனக்குள்ளே ஆழமாகச் செல்ல, செல்ல இதுவரை கணவன், மனைவியாக இருந்தவர்கள் இப்பொழுது நல்ல நண்பர்களாகி விடுவார்கள். ஒருவருக்கொருவர் புரிந்து கொள்பவர்களாகி விடுவார்கள். ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்தல் என்பது எப்போதும் தற்காலிகமானது, அந்த விட்டுக்கொடுக்கப்பட்ட விஷயம் அது எங்கேயும் வெளியே போகாது. அது அடிமனதிற்கு சென்று அங்கு தூக்கநிலையில் இருக்கும். ஏதாவது ஒரு கசப்பு நிலையில் அது தனது தூக்க நிலையில் இருந்து விழித்துக்கொள்ளும். எனவே விட்டுக் கொடுத்தல் என்பது ஒருவரையொருவர் ஏமாற்றிக்கொள்ளும் ஒரு தந்திரம். அப்படியானால் எது நிரந்தரமான வழி? - இருக்கிறது, அதுதான் புரிந்துணர்வு. ஒருவரை ஒருவர் முழுமையான புரிந்துகொள்ளலால் குறிப்பிட்ட அந்த விஷயத்தில் உள்ள நல்லதையும், நல்லதற்றதையும் மனம் திறந்து பேசி அந்த சமாச்சாரத்துக்குள் உள்ளேபோய் வெளியேவர தீர்வு கிடைத்துவிடும். அங்கே முழுமனது

ஏற்படுகிறது. எதுவும் அடிமனதில் போய்ப் பதியாது, அடிமனம் வெறுமையாகத்தான் இருக்கும். புரிந்துணர்தல் பிரச்சினையான விசயத்தை மாத்திரம் தோற்கடிக்கும். ஆட்களை ஒருவரை ஒருவர் தோற்கடிக்காமல் சமநிலையில் வைத்திருக்கும். விட்டுக் கொடுத்தலில் அங்கு சமநிலை இல்லை. அங்கு ஒரு தற்காலிக சமரசம் ஏற்படும். விட்டுக்கொடுத்த விஷயமும் தூர விலகாது. புரிந்துணர்தல் மகிழ்ச்சியைக் கொடுத்துக்கொண்டேயிருக்கும் அது ஆன்மிகமானது.

ஆண் பெண் இனக்கவர்ச்சியை, பாலுணர்ச்சியை காதல் என்று எண்ணாதீர்கள். இதைக் காதல் என்று எண்ணினால் நீங்கள் ஏமாந்து போவீர்கள். உங்களுக்குள்ளே மலர்தலைப் போன்ற உணர்வு தோன்றுமானால் நீங்கள் காதலில் இருக்கிறீர்கள். அது இருந்தால் அது வளர்ந்து கொண்டே போகும். காதல் ஆரம்பத்தை அறியும், ஆனால் முடிவை அறியாது.

**ஒப்பந்தங்களால், வாக்குறுதிகளால், எதிர்பார்ப்புகளால் தம்பதிகள் இணையாது காதலால் இணையவேண்டும். அவர்கள் சுதந்திரம் இருவரையும் சமமாகவும் கௌரவமாகவும் பேணும்.** பெண் ஆணைச் சார்ந்து இருப்பதால் ஆண் எஜமானனாகிறான். அதனால் அவனிடம் அதிகாரம் குவிகிறது. அவனுக்கு வெளியுலக சுதந்திரம் இருப்பதால் அவன் தன் இச்சைப்படி நடக்க முற்படுகிறான். சில ஆண்களின் இத்தகைய போக்கினால் சில பெண்கள் உளவியல் ரீதியானதும் உடல் ரீதியானதுமான பாதிப்பு நிலைக்குக்கூடத் தள்ளப்படுகிறார்கள். பெண்ணை அழித்துக்கொள்ள அத்தகைய ஆண்கள் செய்யும் மிக மோசமான யுக்தி இது. பெண்களுக்குப் பெரும்பாலான ஆண்கள் பாதுகாப்பான நிலையை அளிக்கும் அதே சமயத்தில் சில ஆண்களினால் பாதுகாப்பு அற்ற நிலையும் உருவாகிறது. சமூகம், சமுதாயம், அரசியல், மதம், மார்க்கங்கள், கடவுளின் இராச்சியம் எல்லாம் ஆண்மயமாகத்தான் இருக்கிறது. ஆண் தன் விருப்பத்துக்கு ஏற்றமாதிரி, தன் தேவைக்கு ஏற்றமாதிரித் தன்னை வைத்துக்கொள்கிறான். பெண் தனிமையில் செல்ல ஆண்களுக்குப் பயப்படுகிறாள். பெண்ணானவள் இயற்கையாகவே அன்பு, சாந்தம், கருணை, காருண்யம், பரிவு, இரக்கம் உள்ளவள். இது அவளுக்கு இயற்கை கொடுத்த வரம்.

பெண்ணுடன் பழக ஆண் பயப்பட வேண்டிய இடத்தில் பெண்ணல்லவா ஆணுடன் பழகப் பயப்படுகிறாள். கவிதைகள், இலக்கியங்கள், கதைகள் என்பவை பெண்களின் கடமைகளைப் பற்றிக் கூறுகின்றன. யாரால்? ஆண்களால்தான். பெண்ணுக்கு இலக்கணம் கூறுபவர்கள் ஆண்கள் தான். இவர்கள் பெண்களை மனிதர்களாகப் பார்ப்பதில்லை. பெண்ணின் வாழ்க்கையில், ஆண்களினால் ஏற்படும் பல வலிகளைச் சுமக்கிறாள். மகளாக, சகோதரியாக, மனைவியாக, தாயாக, பெண்ணாக பல வலிகளைச் சுமக்கிறாள். இதற்கும் மேலாக அவள் பிரசவ வலியையும் அனுபவிக்கிறாள். தனது பாதுகாப்புக்கு ஆண்களை அச்சுறுத்தலாகக் கருதுகிறாள். அனைத்தையும் அவள் சகித்துக் கொள்கிறாள். அவள் மனதின் அடிஆழத்தில் செக்ஸை வெறுத்தாள். அதனால் பிரம்மச்சரியம் ஏற்றுக்கொண்ட சுவாமியார்களுக்கு அதிக மதிப்பும் மரியாதையும் கொடுத்தாள். ஆண்களின் பிரம்மச்சரியம் அவளைக் கவர்கிறது.

'ஆழமான ஆனந்தம் உடலிலிருந்து தோன்றுகிறது' என்கிறது தந்திரா. குழந்தைப் பருவத்திலிருந்தே சொந்த உடலுக்கெதிராக ஒரு குழந்தை வளர்க்கப்படுகிறது. நிர்வாணமாக நின்றால் அவமானப்படுத்துவது, எப்பவும் வெட்கப்பட்டு கூச்சப்படும்படி பழக்குவது, தன் சொந்த உடலுக்கு மாறாக எல்லாம் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. பூவைப் பார்த்து ஆச்சரியப்படுகிறோம், இரசித்துப்பார்த்து அதிசயிக்கிறோம், வானத்தில் சந்திரனை ஆசையாகப் பார்க்கிறோம். ஆனால் இவையெல்லாம் உங்கள் உடலைப் போன்று அழகானதல்ல. இவையெல்லாம் ஆச்சரியப்படவோ அதிசயிக்கப்படக் கூடியதோ அல்ல. பலவற்றைப் பார்த்து பாராட்டக் கற்றுக் கொண்டோம். ஆனால் சொந்த உடலைப் பாராட்டுவதில்லை. சரி பாராட்ட வேண்டாம், மதிக்கக்கூட கற்றுக்கொள்ளப்படவில்லை. காரணம் உடல் நம்முடனே இருப்பதால் சுலபமாக மறந்து விடுகிறோம். பறவைகளைக் கண் இமைக்காமல் பார்க்கலாம், பூக்களுக்குப் பக்கத்தில் நின்று படம் எடுக்கலாம், ஆனால் ஒரு ஆண் கண்ணிமைக்காமல் பெண்ணைப் பார்த்தால் உடனே அது போலீஸ் விவகாரமாகிப் போகிறது. மிகப் பெரிய ஆழமான தவறு நடக்கிறது.

தந்திரா ‘நேசம், அன்புடன் இரு, உன் உள்மையத்துள் பிறர் ஒருவர் செல்ல முடியுமென்றால் அந்த உறவுநிலை தியானம்’ எனக் கூறுகிறது. நேசம், அன்பு, இணக்கம், காதல் இல்லாத இடத்தில் மாற்று ஏற்பாடாக அங்கு மதச்சடங்குகள் நிறையத் தேவைப்படுகிறது. உன்னுள் காதல் இல்லை என்றால் உலகில் எதுவும் உனக்கு தெய்விகமாக முடியாது. காதலில் ஆழ்மனம் என்றும் புத்துணர்வுடன் இருக்கும். இல்லையேல் வெளிவட்டத்துடன்தான் நிற்போம். வயதாக அந்த வெளிவட்டம் மாறும். அன்பினால், காதலால் ஏற்படும் புத்துணர்வு வயதாவதில்லை. இது காலத்தைச் சேர்ந்ததில்லை. இது உங்கள் உள்வட்டத்துடன் சேர்ந்தது. உன் நேச உறவில் நீ தவறிப்போனால் குறைகூறாதே. இது எதிர்கால வளர்ச்சிக்கான பாதையைத் தடுத்து விடும், உனக்கு நீதான் எப்போதும் பொறுப்பு, நேசத்தை, அன்பை உன் சுயநிலை மாற்றத்துக்குப் பயன்படுத்து, உன் அணுகு முறையை மாற்றிக்கொள், நீ சிந்திப்பதை மாற்றிக்கொள், உன் தெரிவு முறையை மாற்றிப்பார், உன் சுய நிலையை மாற்று, எல்லாம் சரிவரத் தொடங்கும்.

பெண் படைக்கும் திறன் உடையவள். பெண்ணின் படைப்புத்திறன் குழந்தை பெறுவதிலேயே நின்றுவிடுகிறது. ‘ஒவ்வொரு குழந்தையும் கன்னித்தன்மையுள்ள தாயிடமிருந்தே பிறக்கிறது, கன்னித்தன்மை ஆற்றல் உடையது, ஒரு தாய் குழந்தையை ஒவ்வொரு முறை பெற்று எடுக்கும்போதும் அத்தாயை கன்னி என்று தந்திரா விளக்குகிறது.’ ஓர் உயிரை உருவாக்கும் பெண்ணால் பல வித்தியாசமான படைப்புக்களை அவளால் உருவாக்க முடியும். குழந்தை பெறுவதிலும் பராமரிப்பதிலும் அவளது காலம் முழுக்கச் செல்கிறபடியால் அவளது வித்தியாசமான ஆற்றலையும் திறனையும் இந்த உலகம் இழக்கிறது, அவளது முழு ஆற்றல்கள் வெளிவரவில்லை. யுத்தம் ஆண் நடத்துகிறான். ஆனால் பெரும் இழப்பைப் பெண் சந்திக்கிறாள். பெண்கள் மாதிரித் தியாகி உலகில் யாருமே இல்லை. ஒவ்வொரு நிலையிலும் தியாகம் செய்கிறாள். ஆண் அவள் பின்னால் செல்ல வேண்டியவன், ஆனால் பெண் ஆணின் பின்னால் செல்ல ஆண் ஆதிக்க சமுதாயம் உருவாக்கியுள்ளது. பெண் ஆணைப்போல தன்னைப் பாவனை பண்ணக்கூடாது. ஆணைப்போல தன்னை மாற்ற முற்பட்டால்

அவள் தனது இயல்பான குணங்கள் அனைத்தையும் இழந்து அவள் போலியாகி விடுவாள். போலி எப்போதும் போலிதான்.

ஒவ்வொருவரிலும் ஆணும் பெண்ணும் இருக்கிறார்கள் என்கிறது தந்திரா. பெண்ணின் உடல் அடையாளம் ஆணிலும் ஆணின் உடல் அடையாளம் பெண்ணிலும் இருக்கிறது. ஆணும் பெண்ணும் ஒவ்வொருவரிலும் இருக்கிறார்கள். பெண்ணைவிட ஆண் உயர்ந்தவனல்ல, ஆணைவிட பெண் உயர்ந்தவளல்ல. ஆணும் பெண்ணும் தனித்தன்மை கொண்டவர்கள்.

**தந்திரா உடலுக்கு மிக முக்கியம் கொடுக்கிறது, தந்திரா உலகுக்குப் பொதுவானது, உடலைப்பற்றி மிக ஆழமாகவும் அற்புதமாகவும் கூறும் புராதன ஏடு இது, உங்களை உங்களுக்குள்ளே திருப்பிவிடுகிறது, உடலில் ஊன்றி நிற்கிறது, வாழ்வை ஆழமாய் உணர்ந்து வாழச் சொல்கிறது.**

**உடல்மீது கொண்ட தவறான எண்ணங்களை, நம்பியவற்றை, நீக்குங்கள்.**



## அத்தியாயம் - 21

# தோற்றத்தைக் கைவிடுங்கள்

**'உங்களுடைய உண்மைத் தன்மையில் வெறுமனே நீங்களாக இருங்கள். அதுதான் உயிர்த்தன்மை' - தந்திரா**

நீங்கள் யாரென்று அறியாதவரை உங்களுக்குள் குழப்பம் இருக்கத்தான் செய்யும். நீங்கள் ஒரு தோற்றத்தை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். அந்தத் தோற்றம் உண்மையாக நீங்கள் இல்லை. மற்றும் நீங்களாகவும் இருக்க முடியாது. அந்தத் தோற்றம் உங்களுடைய மனம் செய்த வேலைதான். உங்களுக்குள் நீங்கள் ஒரு தோற்றத்தை ஏற்படுத்தியிருக் கிறீர்கள், அதைத்தான் நீங்கள் என்று, நீங்களாகக் கருதிக் கொண்டிருக்கிறீர்கள்.

நீங்கள் வளர்வதற்குத் தேவையான இடத்தை ஏற்படுத்த அந்தத் தோற்றத்தை வெளியே தூக்கியெறிய வேண்டும். அந்தத் தோற்றம் உங்கள் வீட்டை முழுமையாக ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறது. நீங்களோ வீட்டின் தாழ்வாரத்தில்தான் வசித்துக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் ஒரு அழகான தோற்றத்தை மனதில் உண்டாக்குகிறீர்கள். பின்பு அதனோடு உங்களை ஒப்பிடும்போது உங்களையே அலங்கோலமாகப் பார்க்கிறீர்கள். நீங்கள் உங்கள் கற்பனைத் தோற்றத்திற்கும் கீழான காரியங்களில் ஈடுபடும்போது நீங்கள் உங்களையே வெறுக்கிறீர்கள். கற்பனையான உங்களுக்கும், நிஜமான உங்களுக்கும் செயல்கள் மிகவும் அபத்தமாக இருக்கிறது.

சஹாறா அரசனுக்கு 'தோற்றத்தைக் கைவிடுங்கள், கைவிடும்போது எது சரி, எது தவறு என்பதையும் சேர்த்துக் கைவிடுங்கள். அப்போது நல்லது, கெட்டது, ஞானி, பாவி,

புண்ணியம், பாவம் எதையும் ஒப்பிட்டுப் பார்க்க உங்களிடம் எதுவுமே இல்லை' என்கிறார். நீங்கள் யார்? நீங்கள் பாவியா? நீங்கள் ஞானியா? நீங்கள் நல்லவனா? நீங்கள் கெட்டவனா? அழகானவனா? அசிங்கமானவனா? இப்பொழுது நீங்கள் யார்? உங்கள் கற்பனையில் நீங்கள் இல்லாதபோது வெறுமனே நீங்களாக இருக்கிறீர்கள். உங்களுடைய உண்மைத் தன்மை யில் வெறுமனே இருக்கிறீர்கள், இதுதான் உங்களுடைய இருத்தல் (Being), இதுதான் உங்களுடைய உயிர்த்தன்மை. தோற்றத்திலிருந்து விடுதலை அடையுங்கள், எல்லாவற்றையும் அப்படியே ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவம் ஏற்படும். நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அப்படியே கடவுளுக்கும் ஏற்றவாறு இருக்கிறீர்கள். 'நீங்கள் இருக்கும் அதே நிலையில், நீங்கள் கடவுளால் ஏற்றுக்கொள்ளப்படுகிறீர்கள்.' தந்திராவின் செய்தி யும் அதுவேதான்.

ஏதோவொன்றிற்கு எதிராக இருந்தால் அதிலிருந்து வெளியேவர நீங்கள் ஏதாவது வழியைக் கண்டுபிடிக்கத்தான் செய்வீர்கள். மனம் மிகவும் தந்திரமானது. போலிச்சந்நியாசிகள் பெண்ணாசையை அடக்குவதாகக் கூறுகிறார்கள். ஆனால் அவர்கள் உடலுறவைப்பற்றித்தான் அதிகமாகக் கனவு காண்பார்கள். பகலில் அதை மறுப்பதாக வேடம் போடலாம், பிரக்ஞையாக இருக்கும்போது அதை மறுக்கலாம், அடக்கலாம். ஆனால் அவர்கள் ஏற்படுத்திக்கொண்ட தோற்றம் அவர் களுடைய கனவாக அடக்கிய ஆசைகள் மேலே வரும். அவை மனதின் அடியாழத்திலிருந்து வருகிறது. காலையில் எழுந்ததும் குற்ற உணர்வு கொள்கிறார்கள். இந்தக் குற்ற உணர்வினால் அந்த ஆசையை மேலும், மேலும் அடக்குகிறார்கள். அடக்க, அடக்க கனவு மோசமாகிறது. இவைகள் அவர்களது எண்ணத்தைப் பொறுத்தது. பகல் தோற்றம் மறையக் கனவில் ஆனந்தப்படுகிறார்கள் பின்பு பகலில் கஷ்டப்படுகிறார்கள். அவர்கள் இரு கூறுகளாக்கப்படுகிறார்கள். பகலில் அடக்கியவை எல்லாம் ஒருவரை விட்டுச் செல்லாது. அது மேலும்மேலும் சக்திமிக்கதாகிவிடும்.

'உடல் இன்பத்தைத் தாண்ட வேண்டும், அடக்குவதால் அல்ல, வெறுப்பதால் அல்ல, அத்தாண்டுதல் புரிந்து கொள்வதால் ஏற்பட வேண்டும் என்கிறது' தந்திரா.

முழுமையாகப் புரிந்துகொண்டால் அதன் பிடியிலிருந்து வெளியே வரலாம். ஏற்படுத்திய தோற்றத்திற்கு அடிமையாக வேண்டியதில்லை.

உண்ணாவிரதம் இருப்பவர்கள் உணவைப்பற்றி யோசிப் பார்கள், பசியோடிருந்தால் உணவின் மீது ஆசை அதிகரிக்கும், அதைக் கடந்து செல்ல வேண்டுமென்றால் சரியான ஆகாரத்தை சரியான நேரத்தில் சரியாகச் சாப்பிட வேண்டும். ஆண், பெண் இன்பத்தை மறுப்பதால் அதைக் கடந்து செல்ல முடியாது. அதில் மிக ஆழமாக ஊடுருவிச் சென்றால்தான் அதைக் கடந்து செல்லுதல் நிகழும்.

புத்தர் திருமணமானவர், அவருக்கு இராகுல் என்று ஒரு மகன் இருக்கிறார். புத்தர் ஞானமடைந்ததும் தான் போய் மனைவியைச் சந்தித்து தன் நன்றியைச் சொல்லவேண்டும் என்றார் சீடர்களிடம். 'உலகம் உங்களைத் தப்பாக எடைபோடும்' என்றனர் சீடர்கள். அதற்குப் புத்தர் 'என் மனைவியின் உதவி இல்லாதிருந்தால் இந்த நிலையைத் தான் அடைந்திருக்க முடியாது' என்றார். புத்தர் திருமணமாகி மனைவியுடன் வாழ்ந்து திருமணபந்தத்தில் ஈடுபட்டு அதைக் கடந்தவர். மகாவீரர் ஒரு அரசன், அவர் திருமணமானவர். அவருக்கு ஒரு புதல்வன் இருக்கிறார். திருமணபந்தத்தில் ஈடுபட்டு அதைக் கடந்தவர். இவர்கள் எல்லோரும் ஆழமாக ஊடுருவிச் சென்றதால்தான் அதைக் கடந்தவர்கள். இந்துமதக் கதைகளின்படி இந்துமதக் கடவுள்கள் திருமணம் செய்து குடும்பமாக வாழ்ந்தவர்கள.

மனிதர்கள் எப்பொழுதும் தங்கள் வருங்காலத்தைப் பற்றி அறிய முயற்சி செய்கிறார்கள், மற்றும் தங்கள் இறந்த காலத்தை திருத்தி மாற்றியமைக்க நினைக்கிறார்கள். என்ன நிகழ்ந்ததோ அது நிகழ்ந்ததுதான், அது எல்லைக்கு அப்பால் சென்றுவிட்டது, அதைத் தொடக்கூட முடியாது, அதைத் திருத்தி நல்லதாகவோ அல்லது கெட்டதாகவோ மாற்றமுடியாது. இறந்த காலம் முடிந்துவிட்டது. அது தன் பாதையை நிறைவு செய்துவிட்டது. அதை மாற்றியமைக்கவும் முடியாது. இதுவும் நல்லதுதான். இல்லாவிடில் நீங்கள் அதற்குள் சென்று உங்கள் இஷ்டப்படி என்னவென்றாலும் செய்ய ஆரம்பித்து விடுவீர்கள். மனிதன்

அதை மாற்றியமைக்க அதில் திருத்தம் செய்ய நினைத்துக் கொண்டேயிருக்கிறான். நீங்கள் உண்மை என்று நம்பும் உங்கள் தோற்றம் கற்பனையில் அதைச் செய்துகொண்டுதான் இருக்கும்.

நடந்து முடிந்ததை சீர்செய்ய முடியாது, நடக்கக்கூடியதை அறிந்துகொள்ள முடியாது. அது இன்னும் நிதர்சனமாகவில்லை. அது சாத்தியத்தில்தான் இருக்கிறது. வருங்காலத்தைப்பற்றி வருங்காலத்திற்கே எதுவும் தெரியாது. ஆனால் மனிதன் வருங்காலத்தை முன்கூட்டியே தெரிந்துகொண்டு அதைத் தனக்கு ஏற்றவாறு சாதகமாக்க முயற்சி செய்கிறான். வருங்காலத்தை முன்பே அறிந்துகொண்டால் அது இறந்த காலமாகிவிடுகிறது. எனவே எப்பொழுதும் வருங்காலம் வருங்காலமாகவே இருக்கும். அது அறிந்துகொள்ள முடியாத நிலையிலேயே இருக்கும். இதுதான் அதனுடைய இயல்பான தன்மை. தன்னை வெளிப்படுத்திக்கொள்ளாதது எதிர்காலம். நடக்கக்கூடிய சாத்தியங்கள் உண்டு. ஆனால் நிச்சயமில்லை, இதுதான் வருங்காலம். எல்லாம் நடந்து முடிந்துவிட்டது இனிமேல் நடப்பதற்கு எதுவுமில்லை, இதுதான் இறந்தகாலம். நிகழ்காலம் என்பது நடந்து முடிந்ததிலிருந்து நடக்க வேண்டியதற்கு நடுமையமாக இருக்கிறது. அது இறந்ததிலிருந்து உயிர்த்து எழும் நிலையில் இருக்கிறது. இறந்த காலத்தின் நினைவுகளும், எதிர்கால சிந்தனையிலும் இருப்பதால் அநேகமானோர் நிகழ்காலத்தைத் தவறவிடுகிறார்கள். நிகழ்காலம், அந்த வாழும் நேரம் கஷ்டமாகவும், சுமையாகவும், துன்பமாகவும் மாற்றப்படுகிறது. **தந்திரா மகிழ்ச்சியில் நம்பிக்கை வைக்கிறது. மகிழ்ச்சிதான் கடவுள் என்று தந்திரா சொல்கிறது. மகிழ்ச்சியிலேயே இருங்கள். ஆனந்தமும் கடவுளாக இருக்கட்டும். எப்போதும் நீர்போல இளகி ஓடுவீர்கள்.**

நீங்கள் உங்கள் கற்பனையான தோற்றத்திலிருந்து நீங்கி உண்மையான நீங்களானால் ஏன் வருங்காலத்தைப்பற்றி நினைக்க வேண்டும்? வருங்காலத்தைப்பற்றி நினைப்பது என்பது நிகழ்காலத்தைத் தவறவிடுவதாகும். இப்போது இந்தக் கணம் மகிழ்ச்சியாக இல்லை. அதனால் எதிர்காலத்திற்குச் செல்கிறீர்கள். இப்போது நீங்கள் அதைத் தவறவிட்டுக் கொண்டு இருக்கிறீர்கள். இப்போது மகிழ்ச்சியாக வாழத் தெரியாததால்தான் எதிர்காலத்திற்குத் தாவுகிறீர்கள். வருங்

காலம் என்பது நிகழ்காலத்தைத் தள்ளி வைக்கவும், தவிர்க்கவும் செய்யும் ஒரு யுக்தி. இது உங்களையே நீங்கள் தவிர்க்கவும் உங்களிடமிருந்து தப்பிச் செல்லவும் செய்யும் ஒரு தந்திரம். இப்போது மட்டும் தான் உண்மை. கடவுள் எப்போதும் நிகழ்காலத்தில்தான் இருக்கிறார். ஆனந்தமாக, பிரக்ஞையாக இப்பொழுதே வாழுங்கள். இந்த உலகம் அன்பற்று, காதலற்று, வறண்டு வெறுமையாக இயங்கும் காரணம் அகிம்சையும், அன்பும், காதலும் அற்ற மக்கள் ஒருவரை ஒருவர் தந்திர நிலையில் பிடித்துக்கொண்டு இருப்பதால்தான், இல்லாவிடில் இந்த உலகம் அன்பால் நிறைந்துவழியும்.

மகிழ்ச்சியைத் தேடி அலைந்துதிரிய வேண்டியதில்லை, மகிழ்ச்சிக்காக பல பிரயத்தனங்கள் செய்யத் தேவையில்லை, முயற்சி எதுவும் எடுக்கத் தேவையில்லை. நீங்கள் கருப்பையில் உருவாகும்போது பெற்றோரின் மகிழ்ச்சியூடாக, மகிழ்ச்சி, உன் கருவிலே சேர்ந்துவிட்டது, மகிழ்ச்சி எல்லோருக்குள்ளும் மறைந்துள்ளது, மகிழ்ச்சியை தெரிவுசெய்ய முடியாது, மகிழ்ச்சியைத் தேட முடியாது, மகிழ்ச்சியைப் பிறர் தர முடியாது. மகிழ்ச்சி என்பது உணர்வு, மகிழ்ச்சி என்பது அனுபவித்தல் ஆகும். 'நீங்கள்'தான் என நம்பும் 'உங்களை' நீங்கள் நீக்கினால் உங்களுக்கு நீங்கள் 'நீங்களே' தடையாக இருக்கமாட்டீர்கள். உங்களுக்குத் தடை 'நீங்களே' எனப் புரிய நீங்கள் ஏற்படுத்திய தோற்றம் தானாகவே உங்களுக்குள் வீழ்ச்சி அடைந்துவிடும். **தோற்றத்தைக் கைவிட்டு உங்கள் நிஜத்தைச் சந்திக்கவும். உங்களை அப்படியே ஏற்றுக்கொள்ளுங்கள். விழிப்புணர்வும், புரிதலும் உங்களுக்குள் பெரிய மாற்றத்தை ஏற்படுத்திவிடும். மகிழ்ச்சியை அனுபவிக்கும் மனக்கண் உங்களுக்குள் ஏற்பட்டுவிடும்' என சஹாறா அரசனுக்கு விளக்கினார்.**

நீங்கள் உங்களுடைய இருத்தலில் (Being) கவனம் செலுத்துங்கள். பெற்றிருப்பதில் (Having) கவனமாக இருக்க வேண்டாம். இந்த உலகம் முழுவதையும் பெற்றிருக்கலாம். எந்த விதத்திலும் உபயோகப்படப் போவதில்லை. துறவிகளும் தங்கள் வீடு, வசதிகள், செல்வத்தை துறந்தோம் என்கிறார்கள். துறவு கொள்ளாதவர்கள் தங்கள் வீடு, வசதிகள், செல்வத்துடன் வாழ்கிறார்கள் என்று கூறுகிறார்கள். இந்த இரு பகுதியினரும்

'வீடு, வசதிகள், செல்வங்கள் இவை பற்றித்தான் எண்ணு கிறார்கள், பேசுகிறார்கள். அந்தத் துறவிகள் மனமும் அதையேதான் சுற்றிக்கொண்டு இருக்கிறது. அந்த 'எண்ணுதல் இருவரிடமும் தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது. வரவு செலவு' குறிப்பு அப்படியே தொடர்கிறது.

நீங்கள் யாரென்று அறிந்து கொள்வதுதான் உங்களை முழுமையாக மாற்றும். 'இருத்தலில்' (Being) முழுமையாக இருக்கிறீர்கள். பெற்றிருப்பதில் நீங்கள் ஒரு ஏழையாகத்தான் இருக்கிறீர்கள். இரண்டு வகையான ஏழைகள், ஒருவர் பெற்றிருந்தும் (Having) ஏழையாக, மற்றவகை பெறாமல் ஏழையாக இருக்கிறீர்கள். அடைந்தும் மனத்தளவில் ஏழையாக இருக்கிறார்கள். அடுத்தவகை வெளியிலும், உள்ளும் ஏழையாக இருக்கிறார்கள். உடமை இல்லாதவர்கள் எப்படி வாழ்வது? என்று மலைக்கிறார்கள். உடமை மிகவும் பெற்றவர்கள் இதை வைத்துக்கொண்டு எப்படி வாழ்வது? என்று குழப்பம் உண்டு. எந்த திருப்தியும், எந்த நிறைவும் இல்லை அவர்களது வாழ்க்கையில். மனத்தளவில் கொண்டாட்டம் இல்லை. உடமையில் ஏழையாக இருந்தாலும் 'இருத்தலில்' (Being) செல்வந்தனாக வாழுங்கள். நீங்கள் உங்களை அடைவீர்கள், நீங்கள் நீங்களாக இருப்பீர்கள்.

மனிதன் ஒரு இயந்திரம் தன்னுடைய பிரக்ஞை நிலையில் இயங்குவதில்லை, இறந்த காலத்தையொட்டியே இயங்கு கிறார்கள். உண்மை நிலைக்கு ஏற்றவாறு தங்களை மாற்றிக் கொள்வதில்லை. பழைய எண்ணங்களிலும், பழைய பழக்க வழக்கங்களிலும் வாழ்ந்து கொண்டு இருக்கிறார்கள்.

**ஒரு நிகழ்ச்சி:**

ஒரு நாள் ஒருவர் மலர்கண்காட்சிக்குச் சென்றார். அங்கு விதவிதமான மலர்களைப் பார்த்தார். தன் மனைவிக்கு மலர்க் கொத்து வாங்கிச் சென்று அவள் தலையில் சூடுவோம் என்று எண்ணினார். இதற்கு முன்பு ஒருநாளும் அவர் தன் மனைவிக்கு மலர் வாங்கிச் சென்று சூடியதோ அல்லது கொடுத்ததோ இல்லை. இன்று வித்தியாசமாக யோசித்துவிட்டார். வித்தியாசமாக செயல்பட விரும்பிவிட்டார். இது அவரது

வழமையான செயல்பாடுகளிலிருந்து முற்றும் முழுமையாக மாறுபட்டது.

வாங்கிய மலர்க்கொத்துடன் வீடு சென்றார். எப்பொழுதும் தானே கதவைத் திறந்து வீட்டுக்குள் செல்பவர் இன்று கதவைத் தட்டினார். இதுவும் ஒரு வழமைச் செயலுக்கு வித்தியாசமானது. மனைவி யார் கதவைத் தட்டுவது? என்றவாறு கதவைத் திறந்தாள். என்ன ஆச்சரியம்! கணவர் வழமைக்கு மாறாக புன்னகை பூக்கிறார். இவருக்கு என்ன ஆச்சு? மனைவியின் தலையில் பூச்சூடி விட்டு முத்தமிட்டார். அவள் ஓவென்று கதறி அழுதாள். மனைவிக்கு மயக்கம் வந்தது. தன்னை சுதாகரித்துக்கொண்டு அவரிலிருந்து தூரவிலகினாள். இவருக்கு என்ன நடந்தது? என்று யோசித்தாள். கணவன் இதை சற்றும் எதிர்பார்க்கவில்லை. என்ன நடந்தது? ஏன் அழுகிறாய்? என்று கேட்டார்.

மனைவி இன்று ஒரு மோசமான நாள். முகம் பார்க்கும் கண்ணாடி நிலத்தில் விழுந்து உடைந்து விட்டது. காலையில் நித்திரையால் எழும்பியபோது பூனை குறுக்காக ஓடியது. உங்களுக்கு என்னமோ நடக்கிறது என்று கணவனை கைத்தாங்கலாகக் கூட்டிச்சென்று கதிரையில் உட்கார வைத்து விட்டு குடும்ப டாக்டரைத் தொலைபேசியில் அழைத்து 'வீட்டுக்கு உடனே வாருங்கள். கணவரது நடவடிக்கைகள் வித்தியாசமாக இருக்கு. அவருக்கு மூளையில் ஏதும் பாதிப்பு ஏற்பட்டுவிட்டதோ என்று பயப்படுகிறேன்' என்றாள்.

மனிதன் ஒரு இயந்திரம்தான். பிரக்ஞையாக செயல்பட மாட்டார்கள். ஒரே சிந்தனை, ஒரே பழக்கவழக்கங்கள், பழைய எண்ணங்களிலும், பழைய பழக்கங்களிலும் (Programmed) வாழ்ந்து கொண்டு இருக்கிறார்கள். அப்போதைக்கப்போது (Spontaneous) நிகழ்காலத்தைப் பார்ப்பதில்லை. உண்மை நிலைக்கு ஏற்றவாறு தங்களை மாற்றிக்கொள்ள முடிவதில்லை. பாடமாக்கிய மாதிரி ஒரே மாதிரியான பேச்சு, வாழ்க்கை முறையில் ஊறிவிடுகிறது. நேரத்திற்கும், காலத்திற்கும், சூழலுக்கும் அனுசரித்துப்போக பழகிக்கொள்வதில்லை. கற்பனையில் வாழ விருப்பம், நிஜத்தில் வாழ விரும்புவதில்லை. அதனால் நிகழும் மாற்றங்கள் புரிந்துகொள்வதில்லை. வாழ்க்கையை serious ஆகவே வாழ்வது.

நீங்கள் இயந்திரத்தனமாக செயல்படும்போது பார்க்கும் எல்லாமே இயந்திரம்தான், நீங்கள் இயந்திரமாக இருக்கும் பொழுது மற்ற உங்கள் செயல்பாடுகளை வேறுவகையில் எப்படி நினைத்துப் பார்க்க முடியும்.

உங்களால் இந்தக் கணம் இப்பொழுது எண்ணங்களோ அல்லது எதிர்கால எண்ணங்களோ குறுக்கிடாமல் அப்படியே வெறுமனே பார்க்க முடியுமா? மிகவும் கஷ்டம், ஒப்பிட்டுப் பார்க்காமல் மனதை அப்படியே வெறுமமையாக வைத்திருக்க முடியாது. அதைப்பற்றி எந்தக் கருத்தும், எண்ணமும் இல்லாமல் பார்க்க முடியுமா?

நீங்கள் ஒரு வைதீக இந்து என்று எடுத்துக் கொள்வோம். இன்னொருவரைச் சந்திக்கிறீர்கள். அவர் ஒரு இந்து மத குருவாக இருக்கலாம் என்று மிகவும் பௌவியமாக நடந்து கொள்கிறீர்கள். தொடர்ந்து உரையாடும்போது அவர் ஒரு மாமிசக்கடை நடத்துபவர் என்று அறிந்துகொண்டீர்கள். உங்களது மனக் கற்பனைகள் இடிந்துவிட்டன. இப்பொழுது உங்களுடைய ஆர்வம் விழுந்துவிட்டது. நீங்கள் சுருங்கிப் போய்விட்டீர்கள்.

நிலையான பழைய கற்பனைப் பெட்டியில் உடனே அவரைப் போட்டு அடைத்துவிட்டீர்கள். அவர் உண்மையிலே மத ஆசாரமுள்ளவர், நீதியானவர், நேர்மையானவர், ஏழைப் பிள்ளைகளிற்கு கல்வி கற்க பண உதவி செய்பவர், கண்ணியமானவர், ஒழுக்க சீலர், ஆஸ்பத்திரி சென்று தன் பிறந்த தினம், திருமணத்திற்கு இரத்த தானம் செய்பவர். அவரைப் புரிந்துகொள்ளும் முன்பே நீங்கள் உங்கள் கொள்கைகள், அனுமானம் என்ற பழைய பெட்டியில் போட்டு அடைத்துவிட்டீர்கள்.

இப்படி எல்லாவற்றையும் பிரித்துப் பார்ப்பதுதான் உங்களுடைய மனதின் முக்கிய வேலை. 'இப்பொழுது, இங்கே' என்ற தன்மையில் உண்மை நிலையைப் பார்க்கிறீர்களா அல்லது ஏற்கனவே மனதில் உள்ள கொள்கை, கோட்பாட்டின்படி பார்க்கிறீர்களா? நீங்கள் ஒன்றில் ஈடுபடும்போது பிரக்ஞையாக செய்கிறீர்களா? அல்லது ஒரு இயந்திர மனிதன் (Robot) போலச் செய்கிறீர்களா? முழுமையான பிரக்ஞையற்ற நிலையில் நீங்கள்

ஒரு முழுமையான இயந்திரம்தான். பிரக்ஞை நிலையில் மட்டும்தான் மனிதனாக உண்மையாக இயங்குவீர்கள். நீங்கள் உங்களை உணர்வீர்கள்.

மக்கள் துன்பத்தில் இருக்கும்போது கண்ணீர் விடுவதைப் பார்க்கிறோம். மகிழ்ச்சியில் கண்ணீர் விடுபவர்கள் குறைவு. காரணம் மகிழ்ச்சியாக மனிதர்கள் இருக்க விரும்புவதில்லை. ‘ஆனந்தக்கண்ணீர்’ என்பது பாடல் வரிகளாகத்தான் உள்ளது. மக்களின் கண்களில் அல்ல.

துன்பத்திற்கும், கண்ணீருக்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை. துன்பத்தை கத்திக் கதறித்தான் வெளிப்படுத்து கிறார்கள். குழந்தைகளைப் பாருங்கள். நன்றாக சிரித்த பிறகு அழ ஆரம்பிக்கும். அந்த மகிழ்ச்சி நிறைந்து இருக்கும்போது அதனால் தாங்க முடியாது. ஆகவே குழந்தை அழ ஆரம்பிக்கிறது. அந்த தாங்க முடியாத நிலையில் கண்ணீர் வெளியே வருகிறது.

நீங்கள் நீங்களாகவே இல்லை. நீங்கள் உங்கள் இருப்பு நிலையில் இல்லை. நீங்கள் மற்றவர்களது அபிப்பிராயங்களைத் தாங்கும் தூணாக இருக்கிறீர்கள். நீங்கள் மற்றவர்களது அபிப்பிராயத்தைத் தவிர வேறு ஒன்றுமில்லை. உண்மையில் நீங்கள் யார்? உங்களைப் பற்றி பிறர் சொல்வது, ஒவ்வொரு அபிப்பிராயத்தை கூறும்பொழுது நீங்கள் அதையெல்லாம் சேர்த்து வைத்துக்கொண்டிருக்கிறீர்கள். அவைதான் உங்க ளுடைய தோற்றம், நீங்கள் மாறுபட்டு இப்படியும் அப்படியுமாக இருக்கிறீர்கள். ஒருவர் உங்களை கூடாதவர் என்கிறார். ‘ஒருவர்’ நல்லவர் என்கிறார். முதல் சொன்னதை மறக்க நினைக்கிறீர்கள். ஆனால் அதை உங்களால் மறக்க முடியாது. அது உங்கள் உள்ளேதான் ஆழமாக இருக்கிறது. இப்பொழுது உங்களுடைய நிலை அல்லது தோற்றம் இரண்டும் கெட்டான் நிலையில்தான் இருக்கிறது.

நீங்கள் உண்மையிலே யார் என்று உங்களுக்கே தெரியவில்லை. நீங்கள் பலரது கருத்தின் அபிப்பிராயங்களில் மற்றவர் உங்களைப் பற்றி என்ன நினைக்கிறார் என்ற எண்ணங்களின் எல்லாம் சேர்ந்த ஒரு கலவைதான் நீங்கள்.

உங்களுக்கென்று எந்தத் தனித்தன்மை இல்லை. உங்களிடம் எந்த ஒருங்கிணைந்த மையமும் இல்லை. நீங்கள் வெறும் அடுத்தவர்களது குப்பைதான். அதனால்தான் எப்பொழுதும் ஒரு பயத்தில் இருக்கிறீர்கள். அடுத்தவர் உங்களைப்பற்றி என்ன நினைப்பார், என்ன சொல்லுவார் என்ற பயம் என்றும் இருக்கும். அடுத்தவர்களது பிடியில் உங்களை நீங்கள் வைத்துள்ளீர்கள்.

சமூகத்திற்கென்று ஒரு தந்திரமான முறை இருக்கிறது. அதாவது சமூக அங்கீகாரத்திலும், மதிப்பிலும் நீங்கள் அக்கறை கொள்ளவேண்டும் என சமூகம் உங்களைத் தயாராக்குகிறது. அதன் மூலமாக நீங்கள் சமூகத்திற்கு 'ஆட்டம் போடுகிறீர்கள்.' நீங்கள் அதனுடைய கொள்கைகள், கோட்பாடுகளை மதித்தால் அது உங்களுக்கு மதிப்புக் கொடுக்கிறது. அப்படியில்லை என்றால் அது உங்களை மிகவும் அவமதிக்கிறது. அந்தச் சமூகத்திற்கு இணங்க நடந்தால் நீங்கள் விரைவில் அடிமையாகிவிடுவீர்கள். அப்படி அடிமையானால் அது உங்களை முழுமையாக மதிக்கிறது. நீங்கள் சுதந்திர மனிதனாக இருக்க விரும்பினால் உங்களுடன் சமூகம் ஒத்துழைக்க மறுக்கிறது. நீங்கள் சுதந்திரமாக வாழ்வது கஷ்டமாகிறது.

சமூகம் அடிமையைப் போல் உள்ள மனித உருவத்தைத்தான் விரும்புகிறது. படைவீரர்கள் எப்படி ஒரு தலைவருக்கு கட்டுப்பட்டு நடக்கிறார்கள்? 'Attention' அட்டென்ஷன் 'கவனம்' என்று ஒரு குரல் கொடுத்ததும் எவ்வளவு வேகமாக வரிசையை ஏற்படுத்தி நிற்கிறார்கள். மிகவும் இயந்திரத்தனமாக 'ஏன்' என்று கேள்வி கேட்பதில்லை, அங்கு ஒருவரைப் பார்த்து மற்றவர் நடிக்கிறார்கள். இராணுவத்திற்கும், இராணுவம் போன்ற அமைப்புக்களுக்கும் சுதந்திரத் தன்மைக்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை. அதற்கு மதிப்பு, அந்தஸ்து, கௌரவம், பரிசு, தங்கப்பதக்கம் எல்லாம் தாராளமாகக் கொடுக்கப்படுகிறது. சமூகம் அப்படித்தான் இயங்கும். அவர்களெல்லாம் ஒரு முழுமையான அடிமைத் தனத்தில் இயங்குகிறார்கள். ஆனால் அவர்களுக்கு அத்தகைய அங்கீகாரம் வழங்கப்படுகிறது. இது ஒரு சுதந்திரம்தான். ஒரு சுதந்திரமுள்ள மனிதனுக்கு, சுதந்திர எண்ணமுள்ள மனிதனுக்கு அது எந்த மதிப்போ, பரிசோ ஒருக்காலும் கொடுக்காது.

ஒழுங்கற்ற சமூகத்தில் ஒழுக்கமுள்ள சுதந்திர மனிதன் பகைவன்தான், எந்தக் கொள்கை கோட்பாடுகளுக்கும் அவன் சரியாகப் பொருந்தி வரமாட்டான்.

எப்பொழுதும் அடுத்தவர்களது கருத்துக்களைக் கேட்டு ஏன் பயப்படுகிறீர்கள்? நீங்கள் நீங்களாக இல்லை. நீங்கள் அடுத்தவர்களது அபிப்பிராயங்களாகவே இருக்கிறீர்கள். ஆகவேதான் அந்தப் பயம். ஏனென்றால் அந்த அபிப்பிராயங்கள் எந்த நேரமும் திரும்ப எடுத்துக்கொள்ளப்படலாம். ஒருவர் உங்களைப் பார்த்து நல்லவர் என்று சொன்னால், நீங்கள் அவர் அபிப்பிராயப்படி வாழ்ந்ததால் நீங்கள் நல்லவர்தான். மாறாக நீங்கள் உங்கள் விருப்பப்படி வாழ்ந்தால் உங்களை நல்லவர் என்று கூறியவரே மாறாக கூறத்தொடங்குவார். நீங்கள் அவரது ஒழுக்கக் கட்டுப்பாட்டுக்கு மாறாக நடக்கிறீர்கள். நீங்கள் மதவிதிகளுக்கும் பழக்க வழக்கங்களுக்கும் மாறாக நடக்கிறீர்கள், நீங்கள் பாவக்குழியில் விழுவீர்கள் என்று எச்சரிப்பாக உங்களைப்பற்றிய அபிப்பிராயத்தை அவர் மாற்றிக் கொள்வார். நீங்கள் இதுவரை உங்களை நல்லவன் என்று கருதிக்கொண்டது பிறரது அபிப்பிராயத்தின் அடிப்படையில் தான், உங்களுடைய அபிப்பிராயத்தில் அல்ல.

முதலில் தைரியமாக உங்களையே சார்ந்து இருங்கள். அப்பொழுது உங்களைத்தவிர வேறுயாரும் உங்களை நல்லவர் என்றோ அல்லது கெட்டவர் என்றோ கூறமுடியாது. இந்தப் பொய்யான பிறருடைய அபிப்பிராயத்திற்கும் நீங்கள் கனவுலகில் சஞ்சரிப்பதற்கும் எந்த வித்தியாசமும் இல்லை.

**உதாரணம்:** டாக்டர் ஒரு ஆளைப் பார்த்துக் கூறினார்: நீ மருத்துவ சரித்திரம் படைக்கப் போகிறாய். இதுவரை உன்னைத் தவிர வேறு எந்த ஆணும் கர்ப்பம் தரித்ததில்லை என்று அவனது முதுகில் தட்டினார். இதை கேட்டதும் அந்த நோயாளி பிறர் தன்னைப்பற்றி என்ன நினைப்பார்கள் என்றார். அடுத்தவர்கள் என்ன சொல்வார்கள் என்றுதான் குழம்புகிறான்.

அடுத்தவரது அபிப்பிராயங்களை சேர்த்து வைக்காமல் இருங்கள். 'சிந்தனையாளர்', 'பரோபகாரி' என்று எத்தனையோ சொல்லலாம், அவைகளை விலக்கி விடுங்கள். தவறின் நீங்கள் உங்களை புகழ்பவர்களுக்கும், புகழாரங்களுக்கும், அடிமையாகி

விடுவீர்கள். பிறர் பிடிக்குள் நழுவிச்சென்று விடுவீர்கள். பிறருடைய அபிப்பிராயத்தை ஒருபோதும் ஏற்றுக் கொள்ளாதீர்கள். நீங்கள் நீங்களாகவே இருங்கள். உங்களை யாராலும் ஆட்டிப்படைக்க முடியாது. நீங்கள் உங்களைச் சார்ந்து இருங்கள். நீங்கள் சுதந்திர மனிதராக இருங்கள். நீங்கள் பிரக்ஞையாக இருங்கள். சுதந்திரம்தான் மகிழ்ச்சி.



## அத்தியாயம் - 22

# எது தூய்மை?

**'பிரித்துப் பார்ப்பது தூய்மையற்றது பிரித்துப் பாராமல் வாழ்வது தூய்மையானது' - தந்திரா**

ஒருவர் தூய்மையோடு இருப்பதற்குக் காரணம் அவருடைய நெறிமுறைகள் என்கின்றனர். அவர் திருட வில்லை அதனால் தூய்மையானவர், அவர் நேர்மையானவர், எனவே அவர் தூய்மையானவர், சமுதாயத்தின் ஒழுக்கமுறை களுக்கும் விதிகளுக்கும் கட்டுப்பட்டு நடப்பதால் அவர் தூய்மையானவர் என்கின்றனர். சமுதாயமே தூய்மையற்ற தாயிருந்தால் எப்படி அவர் தூய்மையானவராக முடியும்? அதன் விதிமுறைகளின்படி வாழ்பவரிடம் எப்படித் தூய்மை இருக்க முடியும்? சமுதாயமே நேர்மையற்றதென்கிற நிலையில் அதன்படி நடக்கிற நீங்கள் எப்படித் தூய்மையாக இருக்க முடியும்? அந்தச் சமுதாயத்துடன் அனுசரித்துப்போவதும் மிகவும் நெறியற்ற செயலாகத்தானிருக்க முடியும்.

எந்தளவு ஒருவர் நெறியைக் கடைப்பிடிக்கிறாரோ அந்தளவு அவர் சமுதாயத்திற்கு எதிராகப் போகும்படி ஆகிவிடும். காரணம், அவரால் ஒத்துப்போக முடிவதில்லை. இயேசு சிலுவையில் அறையப்பட்டார். சோக்கிரட்டீஸ்க்கு நஞ்சு கொடுக்கப்பட்டது ஏன்? நெறியற்ற சமுதாயத்தில் உண்மையான நெறியுள்ள இவர்களால் வாழ முடியவில்லை. நெறியற்ற சமுதாயம் ஒருவரை நெறியாளர் என்று கூறிப் போற்றுமானால் அந்த ஆள் அனுசரித்துப்போகிறவர் என்பதே பொருள். சமுதாயம் சொல்வதை எல்லாம் ஒருவர் பின்பற்று கிறார் என்றால், அவர் செயலற்றவர்தான். அவருக்கென்று சொந்த மனச்சாட்சி இல்லாமலிருக்கும். அவர் தனது உரிமையை

வலியுறுத்த முடியாதவர் ஆகவும், அதிகமாகவே நெறிமுறை களுக்குக் கட்டுப்பட்டவர் ஆகவும் ஆகிறார். நெறிமுறையோடு கூடிய உட்கருத்து தூய்மையாக இருக்கிறது. அதுவே சமுதாயத்தின் சிந்தனையாக காலம் காலமாக கருதப்படுகிறது. தூய்மை என்பது தீங்கற்று இருப்பது. சமூகம் இயேசுவிற்கு குற்றத் தீர்ப்பளித்தது. அவரிடமிருந்த விஷயங்களை நெறியற்றதாய் அந்தச் சமூகம் எண்ணிக்கொண்டது. ஒரு பெண் அவரைத் தன்னுடைய வீட்டிற்கு அழைத்தார், அவர் சென்றார். சமூகம் கூறியது, இயேசு நெறிகெட்ட வீட்டிற்குப் போகிறார் என்றது. சென்றவர் அன்று இரவு முழுக்க அந்த வீட்டிலே தங்கியும்விட்டார். அங்கு ஒழுக்க முறையில் என்ன நடக்குமோ அவை நடந்தன. ஆனால் சமூகம் அவருக்கு எதிரானதாகி விட்டது. நண்பர்கள் அவரிலிருந்து விலகினர். அவரைப் பின்பற்றியவர்கள் தங்களை தூர நிறுத்திக்கொண்டனர். கிராமம் திரண்டு, நெறிமுறைகள் என்னவாயிற்று? என்று கேட்டது. இயேசு மாசற்ற தூய்மையானவர். இயேசுபிரான் சிலுவையில் அறையப்பட்டபோது எல்லோரும் விலகிப் போய் விட்டார்கள். அந்த இடத்தில் அப்பெண் மேரி மக்டலேன் (Mary Mcdalene) ஒருவர் மட்டும் இறுதிவரை நின்றார்.

தந்திரா எதையும் பிரிப்பதில்லை. பொதுவாக நல்லது, கெட்டது என்று பிரிக்கிறோம். இதனால் வாழ்க்கை இரண்டாகப் பிரிபடுகிறது. வாழ்க்கையை எந்தவிதப் பகுதி களாகவும் தந்திரா பிரிக்கவில்லை. கோபம் கெட்டது, பாலுணர்வு கெட்டது, பேராசை கெட்டது, நல்லது, கூடாது என ஒரு பெரிய பட்டியல் தயாரிக்கலாம். இந்துக்கள், இஸ்லாமியர்கள், கிறிஸ்தவர்கள், பௌத்தர்கள், சமணர்கள், சென், தாவோ, சின்ரோ, சியோனிஸ்டுகள்(யூதர்) போன்றவர் களது நல்லதும், கெட்டதும், பாவம், புண்ணியம் மதத்திற்கு மதம் முரண்படுகிறது. நரகலோக, சொர்க்கலோக வழியமைப்புகள் வித்தியாசப்படுகின்றன. இந்த மதங்கள் கூறும் நல்லதை, கெட்டதை அம்மதங்கள் ஒன்றுக்கொன்று ஏற்றுக் கொள்வதில்லை. ஒவ்வொரு மதமும் வித்தியாசமான அளவு கோல்கள் வைத்திருக்கின்றன. சில மதங்கள் நல்லது என்று ஏற்றுக்கொள்வதை சில மதங்கள் அவைகளைத் தீமைகள் என்று வரையறுக்கின்றன. ஒவ்வொரு மதமும் தூய்மைக்கு வித்தியாசமான விளக்கம் கொடுக்கிறார்கள். மதத்திற்கு மதம்

'தூய்மை' வித்தியாசப்படுகிறது. உலகத்திலும் நல்லது, கெட்டது நாட்டுக்கு நாடு மக்களுக்கு மக்கள் வித்தியாசப் படுகிறது. 'தூய்மை என்பது என்ன?' இந்தக் கேள்விக்கு 'தந்திரா' என்ன பதில் கூறுகிறது? 'பிரித்துப் பார்ப்பது தூய்மையற்றது. பிரித்துப் பாராமல் வாழ்வது தூய்மையானது.'

பிரித்துப் பார்க்கத் தெரியாத, நல்லது, கெட்டது தெரியாத, பாவம், புண்ணியம் தெரியாத, நரகலோகம், சொர்க்கலோகம் அறியாத, அந்த அப்பாவித்தனம், அந்த வெகுளித்தனம், அந்தக் குழந்தைப் பிள்ளைத்தனம் இவைகள்தான் தந்திராவைப் பொறுத்தவரை தூய்மை என்பதன் அர்த்தம். வித்தியாசப் படுத்திப் பார்க்கத் தெரியாத அப்பாவித்தனம் தூய்மையானது.

ஒரு குழந்தை நல்லது, கெட்டது, பாவம், புண்ணியம், நன்மை, தீமை இந்தப் பிரிவினை பற்றி உணர்ந்திருப்ப தில்லை. அந்த நிலைதான் வெகுளித்தனம், அப்பாவித்தனம். குழந்தையின் கோபம்கூடத் தூய்மையானது. தந்திரா சொல்கிறது; ஒருவர் குழந்தையைப்போல மாறும்போது அவர் தூய்மையாகிறார். ஆனால் அவர் குழந்தை அல்ல. ஒரு குழந்தை ஆடை எதுவுமின்றி நிற்கும்போது அதற்குத் தன் உடலைப்பற்றி உணர்வில்லை. அந்நிலையில் குழந்தையைப் பார்ப்பவர்களும் அந் நிர்வாணத்தை உணர்வதில்லை. குழந்தையின் அம்மணத்தில் வெகுளித்தனம், அப்பாவித்தனம் எல்லாம் உள்ளது.

மகாவீரர் தனது உடலை மறந்துவிட்டார். அவர் உடம்பாக இருக்கவில்லை, உடம்பில் ஆடை எதுவுமின்றியே கிராமம் கிராமமாக, நகரம் நகரமாக, மாநிலம் மாநிலமாக உலாவினார். அவரிடத்தில் அப்பாவித்தனம், வெகுளித்தனம், குழந்தைப் பிள்ளைத்தனம் எல்லாம் இருந்தன. எது தூய்மையற்றது? நல்லது, கெட்டது, புண்ணியம், பாவம், நன்மை, தீமை இந்தப் பிரிவினைகள் தூய்மையற்றது என்பதே தந்திராவின் கருத்து. ஜீசஸ் 'நீ குழந்தை போல மாறாதவரை என் இராச்சியத்தில் நுழைய முடியாது' என்கிறார். அதேதான் தந்திராவின் கருத்தும்.

நன்மை, தீமை, நல்லது, கெட்டது, பாவம், புண்ணியம் எல்லாவற்றையும் கடந்து செல்லும்போது வெகுளித் தன்மையுடையவராகவும், அப்பாவித்தன்மை உள்ளவராகவும்,

குழந்தைத் தன்மை உள்ளவராகவும் ஆக்கும். பிரித்துப் பார்த்தல், வித்தியாசப்படுத்தல், பாகுபாடு அனைத்தும் அதனுடைய அர்த்தத்தை இழக்கச் செய்துவிடுகிறது. பாவம், புண்ணியம், நன்மை, தீமை, நல்லது, கெட்டது, சொர்க்கலோகம், நரகலோகம் என வித்தியாசப்படுத்தும் அறிவு மறையும்போது இந்த உலகத்தை வெகுளியாகவும், மீண்டும் குழந்தைபோல் பார்க்க முடியும்.

**ஒரு நிகழ்வு:**

லாவோட்ஸ் சொல்கிறார், சொர்க்கத்தையும், நரகத்தையும் காட்டுவதே மனப் பிரிவினைதான்.

(Confucius) கொன்பியூசியஸ் இவர் ஒரு சட்டவாதியும்கூட. இவர் லாவோட்ஸிடம் கேட்டார் எது நல்லது? எது கெட்டது? என்று வரையறுத்துச் சொல்லுங்கள்.

**லாவோட்ஸ்:** வரையறைகள் குளறுபடிகளை உருவாக்கும். வரையறை என்பது பிரித்துப் பார்த்தல், வரையறை செய்வது உண்மையற்றதை உருவாக்கும். வரையறை செய்ய வேண்டாம், எது நல்லது, எது கெட்டது என்று சொல்லாதீர்கள் என்றார்.

**கொன்பியூசியஸ்:** என்ன சொல்கிறீர்கள், எப்படி மக்களை ஒழுக்கமுள்ளவர்களாகவும், நல்லவர்களாகவும் இருக்கக் கற்றுக் கொடுப்பது.

**லாவோட்ஸ்:** வழிகாட்டுதல்கள், குழப்பங்களை உருவாக்கும், வழிநடத்த நீங்கள் யார்? அவர்களை அவரவர்களிடமே விட்டுவிடுங்கள்.

**கொன்பியூசியஸ்:** தொடர்ந்தும் கேள்விகள் கேட்டார்.

**லாவோட்ஸ்:** இயற்கையே போதுமானது. எந்த ஒழுக்கமும் தேவையில்லை. திணிக்கப்பட்ட சட்டங்கள், திட்டங்கள், விதிகள், முறைகள் ஒழுக்கப்பயிற்சிகள் தேவையில்லை. வெகுளித்தனம் போதுமானது, இயற்கையே போதுமானது.

கொன்பியூசியஸ் திரும்பிச் சென்றார். அவரது சீடர்கள் கேட்டனர். 'என்ன நடந்தது?' லாவோட்ஸ் ஒரு அபாயமானவர் நீங்கள் அவரைச் சந்திக்காதீர்கள் என்றார்.

லாவோட்ஸிடம் கன்பியூசியஸின் சந்திப்பைப் பற்றி சீடர்கள் கேட்டனர். அதற்கு லாவோட்ஸ் 'புரிந்துகொள்வதற்கு ஒருவருடைய மனம் தடையாக உள்ளது, ஒழுக்கத்தை யாரும் உருவாக்க முடியாது, ஒழுங்கு அதன் இயல்பாகவே இருக்கிறது. ஒருவர் ஒழுங்கை உருவாக்க முயற்சி செய்யும்போது அவரே சீர்குலைவை உருவாக்குகிறார், ஒழுங்குகள் இயல்பாக இருக்கின்றன' என்றார்.

'எல்லோரும் நல்லவர்களாகவே பிறக்கிறார்கள். அது அப்படியேயிருக்கிறது. நீ உன்னில் மையம்கொள். நீ ஒரு முழுமையானவர்' என்கிறது தந்திரா. லாவோட்ஸ் அவர்கள் தந்திரா ஞானத்தைப்பற்றி அறிந்திருக்கமுடியாது. ஆனால் அவரது வாழ்வு தந்திராவாகவே இருந்துள்ளது.

லாவோட்ஸ் கூறுகிறார் 'மிகவும் ஆதிகாலத்தில் மதங்கள் இல்லை, சட்டம் இல்லை, அக்காலத்தில் எது எதுவாகவோ அது அதுவாகவே இருந்தது. மதங்கள் தோன்றிய பின் மதச் சண்டைகள், சட்டம் தோன்றிய பின் சட்டமீறல்கள், ஒழுக்கம் வலியுறுத்தப்பட்ட பின்பு ஒழுக்கக்கேடுகள் தோன்றின'. ஒழுக்கத்திலே ஒழுக்கமென்பது இல்லையே. ஒழுக்கம் காலத்திற்குக் காலம், இடத்திற்கு இடம், சூழ்நிலைக்குச் சூழ்நிலை, நாட்டுக்கு நாடு, மதத்திற்கு மதம், நடைமுறைக்கு நடைமுறை, கலாச்சாரத்திற்குக் கலாச்சாரம், மொழிக்கு மொழி, பண்பாட்டுக்குப் பண்பாடு, இனத்திற்கு இனம் மாறிக்கொண்டேயிருக்கும். தூய்மை என்ற சிந்தனையுடன் சேர்ந்து பிறந்ததே நல்லது கெட்டது, பாவம் புண்ணியம், நரகலேகம் சுவர்க்கலோகம் போன்றவை. ஒருவரது 'வெகுளித்தனம், அப்பாவித்தனம், குழந்தைத்தனம் தூய்மை யானது' என்கிறது தந்திரா.



## அத்தியாயம் - 23

# பபக்சுடித் : உடல் அதிர்வால் சக்தியை மாற்றினார்

இந்தோனேசியாவில் பபக்சுடித் என்ற அரிய மனிதர் ஒருவர் இருந்தார். லதிஹன் (Lathihan) என்ற வழிமுறையைத் தம்மை அறியாமலே அடைந்திருந்தார். அது தந்திராவில் இருந்த ஒரு பழைய முறை, மகாமுத்திரையின் முதற்படி, உடலை ஆற்றலாக்கி அதிர்வடையச் செய்து உருவமில்லாமல் ஆக்குவது. பபக்சுடித் ஒரு முகமதியர். அவரது மார்க்கம் 'சுபுத்' (Subud) எனப்பட்டது. அது ஒரு பௌத்தச் சொல், சுபுத் என்பதன் பொருள் சுசீல புத்ததர்மம் என்பதே. லதிஹன் முறை மிக எளிமையானது. ஓய்வாக, நெகிழ்வாக, இயல்பாக இருக்க வேண்டும். லதிஹன் தெரிந்தவர் அருகிலிருந்தால் அவர் ஆற்றல் மற்றவருக்குள் ஊடுருவிவிடும்.

இயல்பாகவும், நெகிழ்வாகவும் இருக்க உடல் அசையத் தொடங்கும், கைகள் மேலெழும், நுட்பமான அசைவுகள் ஏற்படும், சிறு நடனம் தொடங்கும். கையில் ஏற்படும் அசைவை அதன் வழியில் அதுவாக இயங்க அனுமதிக்க படிப்படியாக வெள்ளைத்தாளில் கை எழுத ஆரம்பிக்குமாம். அவர்கள் கேள்விக்கு விடை தானாகவே கிடைக்குமாம். கையை நெகிழ்வாகவும் இயல்பாகவும் அதன் வழியில் விடுகிறார்கள். அதுபோல லதிஹனின் உடல் முழுவதையும் நெகிழ்வாகவும் இயல்பாகவும் விட வேண்டும் என்கிறார்கள் தந்திரா ஞானிகள்.

அண்டவெளிக்கும் ஞானிக்குமிடையே லதிஹன் மூலம் சந்திப்பு நிகழ்கிறது. லதிஹன் ஞானிக்கு உடலில் மாற்றம் ஏற்பட்டு, முற்றிலும் புதியவராகி, அவர்களில் ஆற்றல் நிரம்பி

வழியும். நடனம் உடலினுள்ளேயும் வெளியேயும் நடக்கிறது. பிரபஞ்சத்தின் சத்தத்தை அவர்களால் கேட்கமுடியும் என்கிறது தந்திரா. லதிஹன் ஞானிகள் தங்கள் உடல்களில் அதிர்வுகளை ஏற்படுத்தி அந்த அதிர்வுகள் மூலம் தங்கள் சீடர்களிற்கு தங்கள் மகா சக்தியை மாற்றி விடுகிறார்கள். தங்கள் மகாசக்தியை பிறருக்குள் ஊடுருவச் செய்து, அவர்களை சக்தி மிக்கவர் களாக மாற்றக்கூடியவர்களாக லதிஹன் ஞானிகள் விளங்கி னார்கள். இவர்களும் தந்திரா ஞானிகளே, ஒவ்வொரு தனி மனிதருக்குள்ளும் ஏற்படவேண்டிய உள் மாற்றத்திலே தந்திரா ஞானிகள் அக்கறை கொள்கிறார்கள்.



## அத்தியாயம் - 24

# திலோபா : இல்லாத பாதையே உங்கள் பாதை

இவர் இந்தியாவில் வங்காளத்திலுள்ள ஜகோராவில் (Jahora) அரச குடும்பத்தில் பிறந்தவர், இவர் ஒரு இளவரசர் ஆவர். இவர் கி.பி. 988-1069 காலப்பகுதியில் வாழ்ந்தவர் என்று கருதப்படுகிறது. ஞானமடைய ஒரு பாதையாக மகா முத்திராவை அறிமுகப்படுத்தினார். இவருக்கு ஞான மார்க்கத்தைக் காட்டிய குரு ஒரு பெண்ஞானி, அவரது பெயர் தாகினி. திலோபாவிற்கு அவர் இட்ட கட்டளை 'ஊர் ஊராகத் திரிந்து தான் பெற்ற ஞானத்தை மக்களுக்கு விளக்கும்படியும், பிச்சையெடுத்து உண்ணவேண்டும் என்றும், அவர் தனக்கென்று ஒரு பிரதான சீடனைக் கண்டுபிடித்து அவர் மூலம் மகா முத்திராவை வெளிப்படுத்த வேண்டும் என்றும், பின்பு அச்சீடன் ஒரு பிரதம சீடனைக் கண்டறிய வேண்டும் என்றும், கண்டறியப்பட்ட சீடன் பிறிதொரு முக்கிய சீடனைக் கண்டறிய வேண்டும் என்றும், இவ்வாறு தத்தமது சீடர் மூலம் மகா முத்திரா எடுத்துச் செல்லப்பட வேண்டும்' என்றும் கூறினார்.

திலோபா இந்தியா பூராவும் பிரயாணம் செய்தபோது பல 'குரு'மார்களிடம் இருந்து பலவிதமான வழிகாட்டுதல்களைப் பெற்றார். ஞானி சரிப்பாவிடம் (Sarypa) உள் உஷ்ணத்தைப் பற்றிய அறிவும், ஞானி நாகர்ஜுன் (Nagarjun) இடமிருந்து ஒளியையும், ஞானி லோபா (Lawapa) விடமிருந்து யோகாவை யும், ஞானி இந்திரபூதியிடமிருந்து அக உட்பார்வையையும், ஞானி சுகசித்தி (Sukhasiddhi) யிடமிருந்து மரணத்துக்கு அப்பால் உள்ள நிலையையும், ஞானி மாதங்கியிடமிருந்து இறந்த உடலிலிருந்து உயிர்த்தெழுதலைப் பற்றியும் கற்று அறிந்துகொண்டார்.

இவர் தந்திரா மார்க்கத்தின் ஞானத்தை உலகிற்கு வெளிப்படுத்தினார். கட்டுப்பாடுகளும், நிபந்தனைகளும், மறுத்தலும், மதங்களின் உபதேசமாக இருக்க, ஞானி திலோபா அவர்கள் முழுவதையும் முழுமையாக ஏற்றுக்கொள்ளுங்கள், இயல்பாக நெகிழ்ச்சியோடிருங்கள் என்றார். அன்பும், ஓய்வும், விழிப்பும், ஏற்றலும் கொண்ட வழியை சீடர்களிற்குக் காட்டினார். தமது மாணவர் நரேபா அவர்கள் முழுமையான ஏற்றலுக்குத் தயாராக இருந்தபோது தமது இறுதி அனுபவத்தை மகாமுத்திரையை வெளிப்படுத்தினார். பயமறியாதவர் திலோபா, அதனால் கடவுளிடம் ஒருபோதும் தன்னைக் காப்பாற்றுங்கள் என்று அவர் கேட்டதில்லை. அவரது புரிந்துகொள்ளுதல் என்றும் காப்பாற்றப்பட்டே வந்தது. நல்லது தீயதுபற்றி ஒருபோதும் கவலைப்படுவதில்லை. இயல்பாக, நெகிழ்வோடு, எளிய வாழ்க்கை வாழ்ந்தவர், அவர் எதையும் முற்கூட்டியே முடிவெடுத்துக் (Predetermined concept) கொள்வதில்லை, அவரை எடைபோட முடியாது. வினாடிக்கு வினாடி, நிமிடத்துக்கு நிமிடம் கணத்துக்குக் கணம் வாழ்ந்துகொண்டே இருப்பார். அவர் மற்றவர்களின் புரிதலைக் கடந்தவர், அடையாளம் காணப்பட முடியாதவர். திலோபா இந்தியாவில் வசித்த மிகப்பெரும் தந்திரா ஞானி (Tantric sage). கணத்திற்குக் கணம் அவரது போக்கு அந்தக் கணத்திற்கு ஏற்புடையதாகவே இருக்கும். தோன்றும் சூழ்நிலைகளில் திலோபா என்ன செய்வார் என்று பிறரால் சொல்லமுடியாது. அவருக்கு விருப்பு, வெறுப்பு இல்லை, அவர் செயல்படுபவரே தவிர அவரிடம் எதிர்ச்செயல் இருக்காது. இறந்தகால, எதிர்கால அடிப்படையில் அவரது செயல்கள் அமையாது. ஆனால் அவரது பங்கேற்பு முழுமையாக இருக்கும், அவரைப் புரிந்துகொள்வது கடினம்.

*அவர் இந்தியாவில் இருந்தபோது அவர் பேச்சை யாரும் கேட்கவில்லை. அவரே தன்னிடமிருந்த மிக உயர்ந்த ஞானத்தைக் கொடையாக கொடுக்கத் தயாராக இருந்தார். கடன் வாங்கப்பட்ட அறிவும், சேகரிக்கப்பட்ட விஷய ஞானமும் மனிதர்களைக் குறுகிய வட்டத்தில் சுழலவிடும். அத்தகைய மனிதர்களை 'உண்மை' ஊடுருவுவது சிரமம், அதனால் சில சமயம் சீடனைக் கண்டுபிடிக்கக் குருமார்கள் பல்லாயிரக்கணக்கான மைல்கள் நடந்திருக்கிறார்கள். ஆனால்*

என்ன நடந்தது? மாணவர்கள் கிடைக்காதால் பல குருமார்கள் பெற்றவை அவர்களோடு மறைந்து போய்விட்டன.

போதிதர்மர் சீனா சென்றார். திலோபா திபெத் சென்றார். அவர்கள் வாழ்ந்து நடமாடிய இந்திய தேசத்தில் 'அந்த ஞான விதைகளை' விதைக்க முடியாமல் போய்விட்டது. ஏற்றுக் கொள்ளும் தயார் நிலைக்குத் தேவை விவாதம் அல்ல, ஏற்றுக் கொள்ளத் தயாரான தன்மை மாத்திரம்தான். போதிதர்மர் சீனா சென்றதும் திலோபா திபெத் சென்றதும் தற்செயலாக நடந்த விஷயம் அல்ல. இயேசுபிரான் தமது சீடர்களிடம் சிறிது காலம் இங்கேயிருப்பேன், இருக்கும்போதே என்னைப் பருகுங்கள் என்றார். அதாவது வாய்ப்பைத் தவறவிடாதீர்கள், நழுவவிடாதீர்கள், இருக்கும்போதே பயன்படுத்துங்கள் என்கிறார்.

இந்தியா முழுவதும் அலைந்து திரிந்த திலோபா திபெத்திற்குச் சென்றபோது அங்கே நரேபாவை கண்டறிய வேண்டியதாயிற்று. அவர் திலோபாவின் சீடனாகிவிட்டார். நரேபா முற்றிலும் மாறிவிட்டார். திலோபா அவரைப் பார்த்து இப்போது நீ சென்று இன்னொரு சீடனைக் கண்டறிய வேண்டும் என்றார். அவருக்கு மார்பா என்றொரு சீடர் கிடைத்தார், மார்பாவிற்கு மிலரேபா என்பவர் சீடனாகக் கிடைத்தார், ஆனால் மிலரேபாவிற்கு சீடர் யாரும் கிடைக்கவில்லை. திலோபா கொடுத்த 'மகாமுத்திரை' மூன்று தலைமுறையுடன் மறைந்துபோயிற்று. பல மதங்கள் பூமிக்கு வந்து மறைந்தது போல திலோபா கண்ட 'மகாமுத்திரையும்' எடுத்துச் செல்ல சீடர் இல்லாததால் மறைந்துவிட்டது.

**திலோபா கடவுளைப் பற்றி இவ்வாறு கூறுகிறார்: 'தேடமுயற்சி செய்யாமல் இருங்கள், எங்கும் போக வேண்டாம், யாரும் கடவுளை அடைவதில்லை, தெய்விகத்தை எங்கே கண்டறிவது? கடவுள் எங்கே இருக்கிறார் என்று சொல்ல யாருமே இல்லை. கடவுளை ஒருபோதும் யாரும் அடைவதில்லை, நீங்கள் தயாராக இருக்கும்போது அவர் உங்களை அடைகிறார், தயார் என்பது ஏற்கும் தன்மையாகும். ஏற்கத் தயாராகும்போது அகந்தை அங்கில்லை, உள்ளே எதுவுமில்லாத ஒருவருமில்லாத வெறும் கோவிலாகுகிறீர்கள்,**

அங்கு எண்ணங்கள் இல்லை, அங்கு தெய்விகம் பிரவேசிக்கிறது', என்கிறார்.

**ஒரு நிகழ்ச்சி:**

திலோபா திபெத்தில் ஒரு கோவிலில் தங்கியிருந்தார். அங்கே வந்த ஒருவர் தான் 'எண்ணங்களை' நிறுத்த விரும்புகிறேன் என்றார். திலோபா சொன்னார், 'அது மிக எளிது. நான் ஒருவழியைச் சொல்கிறேன். அதன்படி செய்யுங்கள், குரங்குகளைப்பற்றி நினைக்காதீர்கள்' என்றார். மிக எளிதான வழிமுறை ஒன்றைக் கூறியிருக்கிறீர்கள் என்று கூறி சந்தித்தவர் விடைபெற்றார்.

அவருக்கு ஒரே குரங்கு யோசனை, எங்கே சென்றாலும் குரங்கும் சேர்ந்து வருவது போல இருந்தது. இப்போது மனதில் தோன்றிய புதிய எண்ணம் குரங்கு, குரங்குத் தொல்லை அவரால் தாங்க முடியவில்லை. மறுநாள் திலோபாவைச் சந்தித்தார். "குரங்கு எண்ணத்திலிருந்து விடுபட முடியவில்லை'' என்றார். திலோபா கூறினார், 'ஓர் எண்ணத்தைத் தடுக்க நினைக்கும் முயற்சியே அந்த நினைப்பிற்கு வலு ஊட்டுகிறது. அதைத் தடுக்க நினைக்கும் முயற்சியே அதை மேலும் கவனிப்பதாகிறது. எனவே ஒன்றைத் தவிர்க்க நினைக்கும்போது நாம் அதன்மேல் அதிக கவனம் செலுத்துகிறோம். ஒரு எண்ணத்தை நீக்க நினைக்கும்போது நாம் அது பற்றி அதிகம் சிந்திக்கின்றோம். எண்ணங்களைத் தடுக்கத் தேவையில்லை. வெறுமனே கவனியுங்கள், பங்குபற்றாதீர்கள், காலப்போக்கில் அவை மறைந்துவிடும்' என்றார்.

திபெத்தில் ஆதிகாலத்தில் ஞானிகளைப் பைத்தியக்காரர்கள் என்று சொன்னார்கள். பைத்தியக்காரர்கள் முழுமையாக வெளியேறியவர்கள்தான், ஞானிகளும் வேறுவிதத்தில் முழுமையாக வெளியேறிவர்கள்தான். ஞானிகள் பைத்தியக்காரர்கள்போல் திரிவார்கள், சில மனிதர்களின் கண்களை உற்றுநோக்குவர், இந்த ஞானிகளின் அந்த உற்று நோக்குதலைப் பெற்றவர்கள் தங்களுக்குள் உள்மாற்றம் நிகழ்வதை உணர்ந்திருக்கிறார்கள்.

'உடம்பால் ஒன்றும் செய்யாமல் ஓய்வெடுங்கள்' என்கிறார் திலோபா. உடல் ஓய்வும், மன ஓய்வும் ஓய்வில்லை, ஓய்வென்பது அனைத்தும் நின்றுபோதல் எனக் குறிப்பிடுகிறார். நின்று போதல் ஏற்பட்டால் எல்லாம் தானாக நிகழும் என்கிறார். இதையேதான் புத்தர் வேறுவிதமாகக் கூறியுள்ளார். 'ஆசையில்லாமல் இருங்கள்' என்கிறார். ஆசையிருந்தால் ஓய்வெடுக்க முடியாது, 'நின்றுபோதல் ஏற்படாது', எல்லாம் தானாக நிகழ ஆசை தடை என்கிறார். இயேசு இதையே எளிய முறையில் கூறுகிறார், 'வயலிலுள்ள அல்லிகளைப் பாருங்கள். அவை ஒன்றும் செய்வதில்லை. ஆனால் எல்லாம் நிகழ்கிறது' என்கிறார்.

திலோபாவினது புரிந்துகொள்ளுதல், யாரும் புரிந்துகொள்ள முடியாத அளவிற்கு மிக ஆழமானது.

**ஒரு நிகழ்ச்சி:**

திலோபா ஒரு குகையில் தங்கியிருக்கும்போது ஒரு சாதகர் அவரைக் காண வந்தார். அப்பொழுது இவர் மனித மண்டையோட்டில் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். வந்தவர் இதைப் பார்த்ததும் பயந்துபோய்விட்டார். ஒரு நாயும் இவர் சாப்பிடும் அதே சாப்பாட்டை அதே மண்டையோட்டிலிருந்து திலோபாவுடன் சேர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தது. சாதகரைப் பார்த்து திலோபா 'சரியான நேரத்தில் வந்திருக்கிறீர்கள். நீங்களும் வந்து சாப்பிடுங்கள்' என்றார்.

**சாதகர்:** நீங்களும் நாயும் சேர்ந்து மண்டையோட்டில் சாப்பிடுவது வெறுப்பாக இருக்கிறது.

**திலோபா:** மண்டையோட்டைக் கண்டு ஏன் பயப்படு கிறீர்கள்? நீங்கள் தலைக்குள் மண்டையோட்டைச் சுமக்கிறீர்கள், நான் அதில் உணவுதானே சாப்பிடுகிறேன். மனம், புனிதம், நீதி, நன்மை, புண்ணியம், சொர்க்கம் எல்லாம் உங்கள் மண்டையோட்டில்தான் இருக்கின்றன. கடவுள் இந்த மண்டையோட்டில்தான் வசிக்கிறார், ஏன் வெறுப்படை கிறீர்கள்?

**சாதகர்:** இந்த நாய்...

**திலோபா:** நாயாக இருப்பதில் என்ன தவறு? உங்களுக்கு ஆசை, வெறுப்பு, பயம், நல்லது, கெட்டது எல்லாமிருக்கு, பின்பு நீங்கள் ஏன் உயர்ந்தவர்கள் போல பாசாங்கு செய்கிறீர்கள்?

அசுத்தம், நன்மை, தீமை, விருப்பு, வெறுப்பு சகலதும் முழுமையான நோக்கில் நீங்கிவிடும். எல்லா எல்லைகளும் மறைந்து விடும், அந்த முழுமைக்குள் எல்லாம் கரைந்துவிடும் என்றார். திலோபாவினது கண்களும் சாதகரின் கண்களும் ஒன்றாகச் சந்தித்தன. திலோபா அவரை உற்று நோக்கினார்.

**சாதகர்:** தனக்குள் ‘உள்’மாற்றம் நிகழ்வதை உணர்ந்தார், திலோபாவையும் நாயையும் மண்டையோட்டையும் வணங்கி நின்றார். (கண் பார்வையில் காதல், சஞ்சலம், ஏமாற்றம் கண்டு கொள்கிறோம். அதே போல ஞானிகளின் பார்வை பெறுவோர் உள்மாற்றம் அடைகிறார்கள்.)

**திலோபா:** ‘இயல்பாக இருங்கள்’ என்றார்.

அவரது போதனை நெகிழ்வாகவும், இயல்பாகவுமிருங்கள் என்பதே. முயற்சி செய்தால் அகந்தை வலிமை பெறும் என்கிறார். ஏன் நீதி நெறிப்படி இரு என்று அவர் சொல்ல வில்லை? நீதி நெறியோடு கடமை, கண்ணியம், கட்டுப்பாடு இவை போன்ற நெறிகளுடன் இருப்பவர் இயல்பாக இருக்க முடியாது. செயல்கள் செயற்கையாகத்தானிருக்கும், கோபம் கொள்ள நினைத்தால் கோபம்கொள்ள முடியாது. நேசிக்க நினைத்தால் நேசிக்க முடியாது. நீதி, நெறி, ஒழுக்கவிதிகள், கடமை, கண்ணியம், கட்டுப்பாடு எல்லாம் குறுக்கே வரும்போது இயல்புத்தன்மை நீங்கி மனனம் செய்த நீதி நெறி ஒழுக்கப்படியே செயற்கையாக நடப்பார். இயல்பிற்கு மாறாக செயற்கையாக நடந்தால் மகா முத்திரை நிலையை அடைய முடியாதென்பதால் நெகிழ்வாகவும், இயல்பாகவும், இயற்கை யாகவும் சொந்த வெகுளித்தனத்துடன் இருக்க மகாமுத்திரை நிலையை அடைய ‘இயல்பாக இரு’ என்கிறார். மகாமுத்திரை என்பது மனமற்ற நிலை, இதைப் பரவெளி நிலை என்கின்றனர். எல்லையில்லாப் பரவெளி இதில் எல்லாம் மறைந்து விடுகின்றன. மனமற்ற நிலைதான் இந்தப் பிரபஞ்சத்தின் ஆரம்பநிலை என்கின்றனர் ஞானிகள். அதை திலோபா மகா முத்திரை என்கிறார். திலோபா அவர்கள்

**மகாமுத்திரை பற்றி தனது சீடர்களிற்கு பின்வருமாறு கூறுகிறார்: 'தேட முயற்சி செய்யாமல் சும்மா இருங்கள், எங்கும் போக வேண்டாம். யாரும் கடவுளை அடைவதில்லை. காரணம் அவரது முகவரி நமக்குத் தெரியாது, எங்கு செல்வது? தெய்விகத்தை எங்கே கண்டறிவது? வரைபடம் ஏதுமில்லை, வழியும் இல்லை, கடவுள் எங்கிருக்கிறார் என்று சொல்ல யாருமில்லை, கடவுளை ஒருபோதும் யாரும் அடைவதில்லை, நிகழ்வது எப்போதுமே நேர்மாறானது. கடவுள் நம்மிடம் வருகிறார், நாம் தயாராக இருக்கும்போது அவர் நம்மை அடைகிறார்' என்கிறார்.**

திலோபா போன்றவர்களைப் பற்றி அறிந்துகொள்வது சிரமம். காரணம் அவர்கள் வரலாற்றின் ஒரு பகுதியாவதில்லை. மனித சமுதாயம் இயங்கும்போது அவர்கள் இயங்குவதில்லை. ஆசையின் மூலம் மனிதகுலம் இயங்கும்போது அவர் போன்றோர்கள் ஆசையின்மைக்குள் நுழைகின்றனர். சமுதாயம் தேடும் வரலாற்றிற்கு அவர்கள் போன்றோர்கள் வர மாட்டார்கள், ஏனெனில் காலத்தைக் கடந்து நித்தியத்தில் வாழ்வதால் இந்நிலை ஏற்படுகிறது. நம்முடைய சாதாரண நிலையிலிருந்து பார்க்கும்போது அவர்கள் புலப்பட மாட்டார்கள். திபெத் நாட்டிற்குச் சென்றே அங்கு ஞானம் பெறத் தயார் நிலையிலிருந்த நரேபாவைக் கண்டார். மகாமுத்திரா பலமுறை பூமிக்கு வந்து மறைந்து போயிருக்கிறது.

திலோபா தனது சீடனான நரேபாவிற்கு மகாமுத்திரையைப் பற்றிக் குறிப்பிடும்போது வார்த்தைகளுக்கும் குறியீடுகளிற்கும் அப்பாற்பட்டது என்கிறார். அதாவது சீர்தூக்கிப் பார்ப்பதாகத் தனக்கு என ஒரு மனம் இல்லாத தன்மையோடு உள்ள சீடனுக்குச் சொல்ல வார்த்தைகளும் குறியீடுகளும் தேவையில்லை. ஆகவே 'வழி' என்பது கிடைக்கும் சீடனைப் பொறுத்தது. இதனால் பல குருமார்கள் அறிந்தது அவர்களோடு மறைந்து போய்விட்டது. காரணம், ஏற்கும் நிலையிலுள்ள மாணவர்கள் கிடையாததால். மிலரேபாவிற்கு ஏற்கும் நிலையில் பக்குவப்பட்ட மாணவன் கிடைக்காததால் அவருக்கு அப்பால் திலோபாவின் பொக்கிஷம் கொண்டு செல்லப்படவில்லை. திலோபா யாரும் அறியாத ஆளாக இன்றுவரை உள்ளார். ஞானிகள் பாலைவனச் சோலை போன்றவர்கள், பாலைவனச் சோலை சில சமயம் தோன்றுகிறது, பின் மறைகிறது.

மகாமுத்திரை என்பது வெறுமை அனுபவம். 'நாம் இல்லை' என்பதே அது. நாம் இல்லை என்றால் துன்பப்படவோ, கவலைப்படவோ, மகிழ்ச்சியடையவோ அங்கு யாரும் இல்லை, நாம் முழுமையாக இல்லாதபோது இன்பமும் இல்லை, துன்பமும் இல்லை என்கிறார் திலோபா. இதுவே உண்மையான ஆனந்தநிலை என்கிறார். வெறுமையை அடைவது எல்லாவற்றையும் அடைவது போன்றது. வெறுமையை, வெற்றிடத்தை அடைய நெகிழ்ச்சியோடும், இயல்பாகவும், இயற்கையாகவும் இருங்கள் என்கிறார்.

நெகிழ்வு, இயல்பு, இயற்கை என்றால் என்ன? நம்மோடு நாம் போராடினால், நம்மை நாம் வருத்தினால், நம்மை நாம் கட்டுப்படுத்தினால், அவைகளுடன் பந்தமாகி விடுவோம் என்கிறார். நெகிழ்வாக மிதந்துகொண்டிருங்கள், சூழ்நிலையோடு நகருங்கள், நீரைப்போன்று நெகிழ்வாகவும், நீரோட்டம்போல் இயற்கை அழைத்துச் செல்லும் வழியில் செல்லுங்கள், எதையும் எதிர்பாராதீர்கள், எதையும் உங்கள் மீது திணிக்காதீர்கள், நீங்கள் எந்த நிபந்தனையும் அற்றவராகுங்கள் என்கிறார். ஆனால் மனிதர்கள் சார்ந்த சமுதாயம் நல்லதோ, தீயதோ ஏதோ ஒன்றை திணித்துக்கொண்டேயிருக்கும்.

தந்திரா என்பது சமுதாயம், பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றிற்கு அப்பாற்பட்டது. பண்பாடு என்று கூறும்போது அதிகம் இயல்பாக இருத்தலிலிருந்து விலகிச் செல்கிறோம். வெறும் இயந்திரத்தனமாக ஆகிவிடுகிறோம் என்கிறது தந்திரா. சமுதாயம், பண்பாடு, நாகரிகம், கலாச்சாரம் என்பதெல்லாம் தருணத்திற்கேற்ப முகமூடிகளை மாற்றி மாற்றி அணியும் ஒரு பயிற்சித் தளமாகும். ஒரு போலி நடிப்பே வாழ்வாகிவிடும்.

திலோபா அவர்கள் நீதிநெறியோடிருங்கள் என்று கூறவில்லை, நெகிழ்வோடிருங்கள் என்கிறார். நெகிழ்வாக இருந்தால் இயல்பாக இருக்கலாம். ஒழுக்கத்தோடிருப்பவன் இயல்பாக இருக்கமுடியாது. கோபம்கொள்ள நினைத்தால் கோபம்கொள்ள முடியாது, நேசிக்க நினைத்தால் நேசிக்க முடியாது, அங்கே 'ஒழுக்கம்' குறுக்கே வந்துவிடும். அவர்கள் ஒழுக்கக் கோட்பாட்டின்படிதான் இருக்கிறார்கள், அவரது இயல்பிற்கு ஏற்றபடியன்று.

கோபம் வந்தால் கோபப்படுங்கள், ஆனால் சரியான விழிப்புணர்வை இழக்கக்கூடாது, உணர்வுகளை ஆக்கிரமிக்கக் கூடாது. விழிப்புணர்வோடு கோபத்தைக் கவனித்தால் கோபம் படிப்படியாக விலகிவிடும். அவை தாமாகவே அழிந்துவிடும். உண்மையான கோபம் அழகானது, கோபத்தில் போலித்தனம் இல்லை, போலிப் புன்னகை அழகற்றது, அதில் போலித்தனம் உண்டு. இயல்பாக இருக்கும்போது விவேகமிருக்கும். விவேகம் யாருக்கும் துன்பம் கொடாது. முட்டாள்தனம் துன்பம் விளைவிக்கும், செயல்களில் புண்ணியம், பாவம் என எதுவுமில்லை 'அறிவை' புண்ணியம் என்றும் அறியாமையைப் 'பாவம்' என்றும் அழைப்போம். நெகிழ்ச்சியோடு இயல்பாக இருக்கும்போது அறியாமை அறிவாக மாறும் என்கிறார் திலோபா.

**தந்திரா இயற்கையான வழிகளைக் காட்டுகிறது. இயற்கையாக நெகிழ்வாக இருத்தலையே மேலும் மேலும் கூறுகிறது. ஏனெனில் நாம் வாழ்வதோ போலித்தனத்தையும் நடிப்பையும் வலியுறுத்தும் சமுதாயத்தில் அவற்றை உடைத்தெறிவது கடினமாகத் தெரியும்.**

ஆனால் அவற்றைக் கடந்துதான் செல்லவேண்டும். அவற்றைக் கடக்கும்போது நாம் தனிமையில் இருப்பதுபோலத் தோன்றும். நாம் தனி ஒருவராகச் சமுதாயத்தில் நிற்போம். ஆனால் அந்த நிலை உண்மையோடு தொடர்புடையது. உண்மை எந்த வடிவத்திலும் அழகானதே, உயர்வில் வாழும் போலியான மனிதனைவிட ஏழ்மையில் வாழும் உண்மையான மனிதன் மேல், உண்மையான வெறுப்பு அழகானது, போலியான அன்பு அழகற்றது. 'அழகு' எப்போதும் உண்மையோடு தொடர்புடையது. உண்மையுடன் வாழ படிப்படியாக போலிகள் தாமாகவே நீங்கிவிடும். இதற்கு முயற்சியே தேவையில்லை. அதனால்தான் திலோபா கூறுகிறார் 'முயற்சியற்று இருங்கள்' என்கிறார். திலோபா மேலும் கூறுகிறார்: **'விடுதலை' என்பது எங்கோ தூரத்தில் இல்லை, எமக்குப் பின்னால் மறைந்திருக்கிறது. தெளிவும், உறுதியும் அதைக் காட்டித்தரும் என்கிறார். நாமோ பொய்களாகவும், போலிகளாகவும் அல்லவா இருக்கிறோம். அதனால் 'விடுதலை' எங்கோ தூரத்திலிருப்பதாக நினைக்கிறோம். உண்மையின் இயல்பே விடுதலைதான். வாழ்வில் இயல்புத்**

தன்மை இல்லையென்றால் அங்கே விடுதலை இல்லை, வாழ்க்கை முற்றிலும் இயற்கையானதே, பசிக்கும்போது சாப்பிடுவது, தூக்கம் வரும்போது தூங்குவது, வாழ்க்கையில் செயற்கைத் தன்மையே இல்லை. முற்றிலும் இயல்பானதே வாழ்வு. நாம் நாமாகவே இருப்பது விடுதலையாகும். செயற்கைத்தனம் நீங்கினால் வாழ்வின் இயல்பான ஓட்டம் சாத்தியமாகும். வெற்றிடமாக, நெகிழ்வாக, இயல்பாக இருப்பதே விடுதலை, அதுவே 'முத்தி' என்கிறார்.

யோகநெறி அது செயல்முறைகளையும், பயிற்சிகளையும் கூறுவதால் பலருக்கும் அது பிடிக்கிறது, புரிகிறது. திலோபா செயல்களைப்பற்றிக் கூறவில்லை. தந்திரா நாம் 'யார்' என்பதே முக்கியம் என்கிறது. ஏற்படும் ஒவ்வொரு விளைவுகளின் மையத்தை அறியுங்கள் என்கிறது. அகஒளி ஏற்றுவதிலே தந்திராவின் கவனம் பதிகிறது. எமது மனம், செயல்களை, தர்க்கத்தை நாடுகிறது. அதனுடன் தொடர்புடையவையை விரும்புகிறோம். அதனுடன் தொடர்புடையவர்களும் எங்களைக் கவருகிறார்கள். செயல்களைப் பெரிதும் விரும்பு வதால் விபூதி எடுத்தல், தங்க ஆபரணங்கள், சிவலிங்கம் எடுத்தல் போன்ற செயல்களின் பின்னால் செல்கிறோம்.

திலோபா போன்றவர்கள் உள் மாற்றத்தை ஏற்படுத்து கின்றனர். அந்த உள் மாற்றத்தினால் நாம் அழிந்து புதிய உதயமாகி விடுவோம். 'உண்மையை' உணர ஒரு நொடி போதும் என்கிறது தந்திரா. இதற்குப் பாதை தேவையில்லை, 'இல்லாத பாதை'தான் அணுகுமுறை என்கிறது தந்திரா. முயற்சி என்கிறது யோகா, முயற்சியின்மை என்கிறது தந்திரா. முயற்சி அகந்தையை உண்டுபண்ணும், முயற்சி செய்வ தானால் நமது சக்தியைக்கொண்டு முழுமையோடு போராட வேண்டும், எதிர்ச்செயல் அகந்தையை உண்டுபண்ணும் எனத் தந்திரா கூறுகின்றது. இயற்கையை எதிர்த்துச் சென்றால் அகந்தை வலிமைபெறும். அதனால்தான் மக்கள் எதிர்ச் சவால்களைப் பெரிதும் விரும்புகிறார்கள். தந்திரா என்பது இயல்பான வழி இயல்பாகவும், நெகிழ்வோடும் இருப்பதுதான். ஆற்றின் வேகத்தை எதிர்க்க வேண்டாம் ஆற்றோடு மிதந்து செல்லுங்கள். ஆற்றோடு சேர்ந்து ஆறாகவே மாறுங்கள் என்கிறது தந்திரா. 'எளிமையே சரியானது' என்பது தந்திராவின் போக்கு. 'கடினமே சரியானது' என்பது யோகாவின் போக்கு.

இயல்பாகவும், நெகிழ்வாகவும், இயற்கையாகவும் இருப்பவர் 'இவ்வுலகம்', 'அவ்வுலகம்' என்ற வித்தியாசம் அற்றவர். அவர் வாழ்கிறார், மகிழ்கிறார் அப்போது நிகழும் கணம் மட்டுமே அவருக்குத் தெரியும். எதிர்காலம் வரும்போது அதுவும் அந்தக் கணநேர வாழ்வாக அவருக்கு மாறிவிடும். அதனால் எதிர்காலம் வந்துசேரும்போது அதை அனுபவிப்பார்.

பௌத்தத்தில் ஹீனஞானம், மஹாஞானம் என இருவகை உண்டு. ஹீனஞானம் என்பது சிறு படகு போன்றது, ஒருவர் மட்டுமே சென்றடைய முடியும். மஹாஞானம் என்பது பெரும் படகு போன்றது. ஒரே நேரத்தில் பலர் சென்றடையலாம். யோக மார்க்கம் ஹீனஞானம் போன்றது, தந்திரா மஹாஞானம் போன்றது. திலோபா போன்றவர்கள் மஹாஞானம் போன்றவர்கள். தந்திரா மார்க்கம் எல்லோருக்கும் உரியது. அதைப் பலரும் புரிந்துகொள்ள முடியாமல் போயிற்று. தந்திரா இயல்பை, நெகிழ்வை போதித்தது. அது எந்தவிதமான கடின முயற்சிகளைக் கூறவில்லை. அதனால் அதைப் பலரும் புரிந்துகொள்ள முடியாமல் போயிற்று. 'இயற்கை' மனிதரை நம்புகிறது. 'இயல்பு' மனிதரை நம்புகிறது. 'நெகிழ்வு' மனிதரை நம்புகிறது. மனிதர்கள் இயற்கையை, இயல்பை, நெகிழ்வை ஏற்கவேண்டும். இவைகள் எந்தக் கட்டுப்பாடும் மனிதர்களிற்கு விதிக்கவில்லை. இஸ்லாமிய அருளாளரான ஜூன்னாய்ட் கூறுகிறார், எனது அயல் வீட்டுக்காரன் மிகவும் தீயவன், அவனை இக்கிராமத்திலிருந்து விரட்டிவிடு என்று பிரார்த்தித்தேன். எனக்கு ஒரு குரல் கேட்டது. 'நான் அவரை ஏற்கிறேன்' என்று. அதன் பின்பு அப்படியான பிரார்த்தனைகள் நான் செய்வதில்லை என்கிறார். முழுமையிலிருந்து பிளவுபடாத இயல்பான நிலையையே மகாமுத்திரை என்கிறார் திலோபா. இதை விளங்கிக்கொள்ள இலகுவான உதாரணத்தில் பார்ப்போம். ஆணும் – பெண்ணும் உறவிலிருக்கும்போது ஒருவர் இன்னொருவருக்குள் உருகிவிடுகிறார்கள். அங்கு ஆணுமில்லை, பெண்ணுமில்லை. தங்கள் தனித்தன்மையை மறந்து விடுகிறார்கள், தங்கள் அடையாளங்களை இழந்து விடுகிறார்கள். தங்களை முழுமையாக மறக்கும் இந்த நிலை போன்றதே மகாமுத்திரை எனத் தந்திரா விளக்குகிறது.

*சிறு உபதேசங்கள், சிறு செயலுக்கு அழைத்துச்செல்லும். மகா உபதேசங்களைப் பின்பற்றுங்கள் என்கிறார் திலோபா.*

ஏன் அப்படிக் கூறுகிறார்? சிறு உபதேசங்கள், வெளி அழகுப் பூச்சைப் போன்றது. சைவ உணவு சாப்பிடுதல், விடியற்காலை பிரம்மமுகூர்த்தம், வெள்ளிக்கிழமை ஆலய வழிபாடு, விரதம், உபவாசம், தொண்டு இவைகள் எல்லாம் பழக்கங்களினால் அமைகிறது. இவைகள் எல்லாம் வெறும் செயல்களே ஆகும். மரணபயம்தான் இதன் அடிப்படைக் காரணம். மகா உபதேசம் அப்படியல்ல, மகா உபதேசம் என்பது உள்ளேயிருந்து, மையத்திலிருந்து பரவுதல். நாமே நமக்கு இலக்கு. வெறுப்பும் நேசிப்பும் வேறல்ல, வன்முறையும் அஹிம்சையும் இரண்டல்ல, கோபமும் கருணையும் வெவ்வேறானவை அல்ல. இவை எல்லாம் ஒன்றே என்கிறது தந்திரா. நேசம்தான் வெறுப்பாக மாறுகிறது. இவை இரண்டும் வேறாக இருந்தால் அப்படி மாறமுடியாது, கோபம் கருணையாக மாறுகிறது, கருணை கோபமாகிறது. வெறுப்பு நேசிப்பாகிறது, நேசிப்பு வெறுப் பாகிறது. இதனால் தந்திரா கூறுகிறது ஒப்புக்கொள்ளுதல் மூலம் அதைக் கடக்க முடியும் என்கிறது. 'அரசனைப்போல இரு' என்பது காலம் காலமாகச் சொல்லப்படுகிறது. இதன் அர்த்தம் என்னவென்றால் அரசனுக்கு மேலே ஒருவர் இல்லை, அரசனுக்கு உத்தரவுபோட யாருமே இல்லை, அதிகாரம் செய்ய அங்கு யாருமே இல்லை. அதைப்போல நம்மை அதிகாரம் செய்ய நமக்கு மேல் யாரும் இருக்கமுடியாது. என்பதே அதன் பொருள். தந்திரா கூறுகிறது ''உனக்கு மேலும் நீதான்' என்கிறது.

புத்தர், இயேசு, நபிகள்நாயகம் மக்கள் மத்தியில் பேசினார்கள். ஆனால் திலோபா தனது சீடர் நரோபா ஒருவரிடமே பேசினார், சீடர் நரோபா பக்குவமடைய திலோபா மௌனமாகிவிட்டார், மௌனமாக உட்கார்ந் திருப்பார். அதுவே உயர்ந்த உபதேசமானது. திலோபா கூறுகிறார், 'கொடுக்கவும் வேண்டாம், பெற்றுக்கொள்ளவும் வேண்டாம், உலகத்தை உதாசீனம் செய்யவும் வேண்டாம், இயல்பாக இருங்கள்' என்கிறார். கொடுத்தலும் அது பெறலிற்குச் சமன் என்கிறார். புத்தரும் இதை வலியுறுத்தி யுள்ளார். வேண்டுபவர் எனவும் கொடுப்பவர் எனவும் இருபக்கமும் சாராது உடமை அற்ற நிலையிலிருக்க வேண்டும் என்கிறார் புத்தர். 'ஏற்றலிற்கும் விலக்குதலிற்கும் அப்பாற் பட்டது மகாமுத்திரை' என்கிறார் திலோபா. இயல்பாக

இருப்பதற்கு முயற்சி செய்தால் அந்த முயற்சி ஒரு செயலாகி விடும். அது செயற்கையாக மாறிவிடும் என்பதால் 'நெகிழ்வு இயல்பு' என்கிறார். லாசு கூறுகிறார்: மிகப் பழங்காலத்தில் உலகத்தில் மக்கள் இயல்பாக இருந்தபோது மதங்கள் இல்லை. சொர்க்கத்தைப் பற்றியும், நரகத்தைப் பற்றியும் பேச்சே இல்லை. நீதி நெறிப் பேச்சுமில்லை. சட்டம், விதிமுறைகள் என்று எதுவுமே இல்லை, மக்கள் இயல்பாகவும், இயற்கை யோடும் சேர்ந்து நெகிழ்வாக வாழ்ந்தார்கள், சட்டம் ஏற்பட்ட பின்பு மக்கள் குற்றவாளியாகிவிட்டார்கள். பண்பாடு தோன்றிய பின்பு பண்பாடு மீறப்பட்டுவிட்டது, ஒழுக்கம் வலியுறுத்தப் பட்ட பின்பு ஒழுக்கக்கேடு ஏற்பட்டது என்று அவர் கூறியுள்ளார். **எந்த விதியும் இல்லாமல் இருப்பதே விதி என்கிறார் லாசு அவர்கள்.**

நாம் இல்லாமலே உலகம் இயங்குகிறது, ஆறுகள் கடலை நோக்கிச் செல்கின்றன, விண்மீன்கள் அசைகின்றன, சூரியன் உதிக்கிறது, பருவங்கள் தொடர்கின்றன, மரங்கள் வளர்ந்து மலர்கின்றன, முழுமை எந்த உதவியுமின்றி இயங்குகிறது. நாம் முழுமையோடு இணைந்து இயல்பாக ஏன் செல்லக்கூடாது? என்கிறார் திலோபா. சோக்கிரடீஸ் தனக்கு ஒன்று மட்டுமே தெரியும், தனக்கு எதுவுமே தெரியாது என்பதே, தான் அறியாமைமிக்கவன் என்பதே தன்னிடமுள்ள ஒரே அறிவு என்றார். அதுவே ஒரு முழுமைதானே!

**உடம்பு மறையும், மனம் மறையும், பாதை மறையும், முடிவும் மறையும், 'இருப்பு' (Being) ஆகாயம் போன்று வெறும் இருப்பாக எப்போதும் இருக்கும். அதுவே மகா முத்திரை என்கிறார் திலோபா. அதாவது எங்கு தொடங்கினோமோ மீண்டும் அங்கேயே வந்துவிட்டோம் என்பதே அதன் பொருளாகிறது. இரமண மகரிசி அவர்கள் இதை 'உதித்த இடத்தில் ஒடுங்கியிருத்தல்' என்கிறார். அதாவது பயணம் முடிந்துவிட்டது, பயணித்தவரும் முடிந்துவிட்டார், பாதையும் முடிந்துவிட்டது என்று பொருள்படுகிறது. உங்களை நீங்கள் அறியாத ஒன்றிற்கு அழைத்துச் செல்லக்கூடியவராக இருப்பவரே குரு, ஆசான், வழிகாட்டி, ஞானி, யோகி, சுவாமி ஆவார்கள். திலோபாவும் அத்தகையவரே.**

■■

## அத்தியாயம் - 25

# புது மனிதனா? மேம்பட்ட மனிதனா?

ஒருவர் புது மனிதனாக வர அவனுக்குள் இருக்கும் பழைய மனிதன் இறக்க வேண்டும். நிக்கோடமஸ் என்பவரிடம் இயேசுநாதர் 'நீ மீண்டும் பிறந்தாலன்றி இறைவனின் இராச்சியத்துக்குள் நுழைய முடியாது' என்றார். ஒருவர் தனது இறந்த காலத்தைத் துறக்க வேண்டும், அப்போதுதான் புதிய உணர்வு நிலை ஜனனிக்கும் என்பது இதன் பொருளாகிறது. சோக்கிரட்டிஸ் புது மனிதனைப் பற்றித்தான் பேசினார். கிரேக்க நாட்டு மக்கள் உலகத்துக்கு முன்னோடியாக இருந்தவர்கள். அவர்களே சோக்கிரட்டிஸைக் கொல்லத் துணிந்தார்களே...? ஏன்? அவர் புது மனிதனைப் பற்றிப் பேசியதால்தானே!

மேம்பட்ட மனிதர்களைப் பற்றிப் பேசியவர்கள் எல்லாம் போற்றப்பட்டார்கள், வழிபடப்பட்டார்கள். அவர்கள் மரபுகளை சம்பிரதாயங்களை ஏற்றுக்கொண்டார்கள். அவர்கள் சொல்வது மக்களுக்கு சுகமாக இருந்தது. நாம் இன்றும் மேம்பட்ட மனிதர்களைப்பற்றி தொடர்ந்தும் கேட்டுக்கொண்டே இருக்கின்றோம். அது நமக்குப் பழக்கமாகிவிட்டது. மேம்பட்ட மனிதனின் பேச்சு சீர்திருத்தம்தான். புதிய மனிதனின் கோட்பாட்டை எதிர்நோக்கத் தைரியம் தேவை. வசதிகள் மேம்படுத்தப்படுவதுபோல் மனிதர்கள் மேம்பட்டவர்களாக மாறுகிறார்கள். கார்கள், சாலைகள், இயந்திரங்கள், இரயில்கள், தொழில்நுட்பங்கள் எல்லாமே மேம்படுத்தப்படுகின்றன. சிறந்த நாய்கள், அதிக பால் தரும் பசுக்கள் என்று எல்லாமே மேம்படுத்தப்படுகிறது. இன்று மனிதன் ஒரு கம்ப்யூட்டர்போல ஒரு பொருளாக மாறிவிட்டான். மேம்பட்ட பொருட்களை உருவாக்குதற்கும் மேம்பட்ட மனிதனை உருவாக்குவதற்கும் இடையில் அதிக வித்தியாசம் இல்லை.

புது மனிதன் மேம்பட்ட மனிதனாக இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. புது மனிதன் துடிப்புடன் இருப்பான். எதையும் எதிர்நோக்கும் உணர்வு அவனுக்கு இன்னும் அதிகமாக இருக்கும். எப்போதும் மகிழ்ச்சியாக வாழ்க்கையைக் கொண்டாடிக்கொண்டே இருப்பான். சமூக வாதிகள், அரசியல்வாதிகள், மதவாதிகள் இந்தப் புது மனிதனை எதிர்ப்பார்கள். புது மனிதன் போருக்குப் போகமாட்டான், கொலை செய்யமாட்டான், கோஷம் போடமாட்டான், எதற்கும் போட்டி போடமாட்டான். அவன் பிறரது உணர்ச்சிகளை, உணர்வுகளை தனக்கு மூலதனமாகப் பயன் படுத்தமாட்டான், யாரையும் தூண்டமாட்டான், புது மனிதனின் கண்ணோட்டமே வேறு. அவனது அணுகுமுறையில் அன்புதான் அதிகம் இருக்கும், புது மனிதனைப் பற்றிப் பேசுவது ஆபத்தானது. கடந்த காலத்தோடு இருக்கும் தொடர்பை அழித்துக்கொள்கிறான். நிகழ்காலத்தில் ஜனனித்து நிகழ்காலத்தில் தொடர்ந்து வாழ்வது புது மனிதனின் செயல். புது மனிதனை மேம்பட்டவர்கள் வெறுப்பார்கள். ஏனெனில் ஆயிரமாயிரம் வருடங்களாக ஒரே வழியில் வாழ்ந்து பழக்கப் பட்டதை அதுதான் ஒரே சௌகரியமான வாழும்வழி என்று மனங்களைத் தேற்றிக்கொண்டு வாழ்கிறார்கள். மதங்கள், தத்துவங்கள், மரபுகள், முறைகள் எல்லாமே மனிதன் பிறந்த காலத்திலேயே அப்படியே நிற்கின்றன. Old is Gold என்று சொல்லிப் பழக்கப்பட்டு விட்டார்கள். மனிதனைத் தன்னுணர்வுடன் விடவேண்டும். சமூகத்தின்மீது, சாட்டுக்களின் மீது, சந்தர்ப்பங்கள் மீது, மதத்தின் மீது ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருப்பவர்கள் தன்னுணர்வு இல்லாதவர்கள்.

நிலாவில் காலடி எடுத்துவைத்துக் காட்டினது அமெரிக்கா, உலகப் பார்வையில் தன்னை உயர்த்தியும் கொண்டது. அதற்குப் பொறுப்பான விஞ்ஞானிகளுக்கு உலகம் புகழாரம் சூட்டியது. பத்திரிகையாளர்களும், தொலைத்தொடர்பு சாதனங்களும் எல்லாம் விண்வெளி வீரர்களைச் சூழ்ந்து கொண்டு நிலாவில் காலடி வைத்ததற்குப் புகழாரம் சூட்டி எல்லோரும் ஒரே மாதிரியான கேள்விகளைத்தான் கேட்டார்கள். வாழ்த்துக்களும் புகழாரங்களும் ஒரே மாதிரி தான் அமைந்தன. ஒவ்வொரு நாட்டுத் தலைவர்களும், மத பீடத் தலைவர்களும் என்று பலர் வாழ்த்திக்கொண்டே

இருந்தார்கள். என்ன ஆச்சரியம் என்றால் அன்றும், இன்றும் கேட்காத கேள்வி ஒன்று இருக்கிறது. 'ஏன் நிலாவில் காலடி எடுத்துவைக்க வேண்டும்?' இந்தக் கேள்விக்கு அந்த விஞ்ஞானிகளிடமோ, அந்த விண்வெளி வீரர்களிடமோ அல்லது அமெரிக்காவிடமோ உரிய பதில் இருக்காது. ஆனால் எப்படி மற்றவர்களை இந்த ஆராய்ச்சியில் முந்தாமல் தோற்கடித்தோம் என்ற கேள்விக்கு அவர்களிடம் பதில் உண்டு. உலகப் பார்வையில் அமெரிக்கா தன்னை மேம்பட்டவர்களாகக் காட்டிக்கொண்டது.

புது மனிதன் வந்துவிட்டால் பழைய உலகம் ஓடிப் போய்விடும். பெரியவர்களும், மரியாதைக்கு உரியவர்களும், தலைவர்களும், மதபீடங்களும் மேம்பட்ட மனிதனைப் பற்றித்தான் புகழ்ந்துகொண்டே இருப்பார்கள். ஏனெனில் அவர்கள் பழக்கப்பட்டது அப்படித்தானே. கிட்டத்தட்ட 1000 வருடங்களுக்கு முன்பு ஒரு படைப்பாளி ஒரு புதிய மனிதனாகவே இருக்கவேண்டியதாக இருந்தது. கவிதையாக இருக்கலாம், காவியமாக இருக்கலாம், ஓவியமாக இருக்கலாம், முதலில் மனக்கட்டுத் திட்டங்களை உடைத்து எறிய வேண்டி இருந்தது. தனி மனிதனாக இருக்கும்போதுதான் எதையும் படைக்க முடியும், கூட்டமாகச் சேர்ந்துகொண்டு எதையும் உருவாக்க முடியாது. **ஒரு கூட்டத்தின், அல்லது ஒரு குழுவின் மனஇயல் படைப்புக்கு உகந்தது அல்ல. ஒரு கூட்டத்தின் மன இயல் பாசாங்கு வாழ்க்கை வாழத் துணை செய்யுமே ஒழிய நிலைத்து நிற்கும் படைப்புக்களை அதனால் உருவாக்க முடியாது. சமூக அந்தஸ்து, மரியாதை, கௌரவம், இவை எல்லாம் வேண்டும் என்றால் குறைந்தபட்சம் அப்படி இருப்பதுபோல் வேஷமாவது போடவேண்டும். நோபல் பரிசு கூடக் கிடைக்கலாம். ஒரு படைப்பாளியால் பழைய பழகிய பாதையில் போக முடியாது. அவர் தனக்கென்று பிரத்தியேகமாக ஒரு வழியைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். அவர் அதில் துணையில்லாமல் பயணிக்க வேண்டும்.**

கடந்த காலத்தில் ஓவியர்கள், நடனக் கலைஞர்கள், வேறு கலைஞர்கள், சிற்பிகள் போன்ற பல படைப்பாளிகள் சமூகம் கொடுத்த அங்கீகாரங்களை உதறித் தள்ளிவிட்டு மனம் போன போக்கில் ஒரு நாடோடியைப்போல் வாழ்ந்தார்கள். அப்படி

இருந்ததால்தான் படைக்க முடிந்தது. ஒரு தனி மனிதன் சமுதாயத்துக்கு எதிராகச் செய்யும் எழுச்சியும், கிளர்ச்சியும் என்று மதிக்கப்படுகிறதோ அன்றுதான் உண்மையான மானிடம் இந்த உலகில் தோன்றும். தானாக இருப்பதற்கு அவரை யாரும் அனுமதிக்கவில்லையென்றால் மானிடம் இந்த உலகத்தில் ஜனனிக்காமலேயே மரித்துவிடும். ஒவ்வொரு தனி மனிதனும் தன் விருப்பம்போல் வாழ்வதற்கும் தன் சுயத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்கும் உரிமையுடையவன். ஒவ்வொரு மனிதனும் அவரவர் வழியில் நடப்பதற்கு பரிபூரண சுதந்திரம் உடைய வர்கள்.

சுதந்திரம் மிக்க விழிப்புணர்வுடையது. கட்டுப்பாடு களிலும், தடைகளிலும் அச்சத்திலும் இருந்தால் சுதந்திரத்தின் மொழியைப் புரிந்துகொள்ள முடியாது.

சுதந்திர கோஷத்துடன் உலகில் தோன்றிய பல விடுதலை இயக்கங்கள் மண்ணோடு மண் அழிந்ததற்குக் காரணம் அந்த இயக்கங்கள் தங்கள் விருப்பம்போல் மக்கள் வாழவேண்டும் என்று ஆணையிட்டனர். மக்களைத் தாங்களாக இருக்க விடாமல் பல தடைகளைப் போட்டார்கள். அதை மீறியவர் களை பொதுமக்கள் மத்தியில் கொலை செய்து மக்களை அடிமையாக்கினர். மக்களின் 'தன்னுணர்வை', 'சுயத்தை' மழுங்கடித்தனர். மக்களைத் தங்களுக்கு இசைவாக்கமாக மாற்றினர். சுதந்திரம் என்ற பெயரில் அத்துமீறல்களும் யாரும் யாருடைய சுதந்திரத்திற்கு குறுக்கிடுதலும் கூடாது. சமுதாயம் நேர்முகமாகவும் மறைமுகமாகவும் மூக்கை நுழைத்து பாடாய்ப் படுத்துவதில் மகிழ்ச்சிகொள்கிறது.

புரட்சியாளர் என்று கூறுபவர்கள், விடுதலை இயக்கம் என்று அடையாளப்படுத்துபவர்கள் மக்களுக்கு பீதி ஏற்படுத்தி 'ஆமாம்' போடுபவர்களாக மாற்றுவதற்கு யுக்திகள் பிரயோகித்த படியே இருப்பார்கள். மக்களைப் பலவீனமாக வைத்துக் கொள்வார்கள். இல்லாவிடில் மக்கள் ஒன்றுசேர்ந்து மக்கள் புரட்சி தங்களுக்கெதிராக திரும்பாமல் பார்த்துக்கொள்வார்கள். புது மனிதன் 'ஆமாம்' போடும் கூட்டத்தில் அங்கத்தவராக மாட்டான். பெண்கள் கற்பழிப்பு என்று கூறும் அசிங்க அரசியலில் நாட்டமில்லாதவர்கள்.

சமூகமும் கடவுளை விஷமத்தனமான சிறுவனாகத்தான் சித்திரிக்கிறது. நீங்கள் செய்யும் விஷயங்களைக் கவனமாகப் பார்த்துக் கொண்டிருப்பார். கீழ்ப்படியாதவர்களைத் தண்டிப்பார், நோய் கொடுப்பார் என்று கதை கட்டி விட்டுள்ளது. அன்பு மயமான இறைவனை இதைவிடக் கீழ்த்தரமாக அவமதிக்க முடியாது. கடவுளைத் துப்பறியும் நிபுணராக்கிவிட்டார்களே என்பதுதான் என் கவலை.

கடவுளுக்கும் மதத்துக்கும் தொடர்பு இல்லை,
ஆன்மிகத்துக்கும் மதத்துக்கும் தொடர்பு இல்லை,
கோவில்களுக்கும் ஆன்மிகத்துக்கும் தொடர்பு இல்லை.

**தனி மனிதனின் வாழ்க்கைமேல் ஆதிக்கம் செலுத்தாததாக மதம், சமுதாயம் இருக்கவேண்டும். அப்போது யாருக்குமே மன இறுக்கம் இருக்காது. எந்தவித குறுக்கீடும் இல்லாமல் இயல்பான வாழ்க்கை வாழ்வார்கள். தனிமனிதன் மலரும்போது அதில் இருந்து வரும் நறுமணம்தான் படைப்பாற்றல். சோக்கிறற்றீஸ் ஒருமுறை சொன்னார், 'எனக்கு நிச்சயமாகத் தெரிந்தது ஒன்றே ஒன்றுதான், எனக்கு ஒன்றும் தெரியாது என்பதுதான் அது.' இதுதான் உண்மையான ஒழுங்கு (Discipline). ஒழுங்கு என்ற சொல் அடுத்தவர்களுக்கு அறிவுரை சொல்லும்போது அதிகம் பயன்படுத்தப்படுகிறது. அதைச் செய்யுங்கள். இதைச் செய்யாதீர்கள் அப்போதுதான் உங்கள் வாழ்க்கை ஒழுங்காக இருக்கும் என்று சொல்லத் தொடங்கிவிட்டார்கள். இப்படிச் செய், அப்படிச் செய்யாதே என்று ஆயிரக்கணக்கான ஆணைகள் மனிதன்மேல் திணிக்கத் தொடங்கிவிட்டார்கள். இப்படித் திணிக்கப்பட்ட ஆணைகளுடன் வாழும்போது யாராலும் எதையும் படைக்க முடியாது. அப்படி வாழும் மனிதன் சிறைக் கைதியாகத்தான் வாழ்வார். எந்தப் பக்கம் போக முயன்றாலும் அங்கே ஒரு சுவர் அவர் போவதைத் தடுக்கும்.**

ஒரு படைப்பாளி தன் மேல் திணிக்கப்பட்ட ஆணைகளை அழிக்க வேண்டும், படைப்பாளிக்கு சுதந்திரம் வேண்டும். அப்போதுதான் தன்னிச்சையாக படைக்க முடியும், ஆற்றலை வெளிப்படுத்த முடியும். ஒவ்வொரு நொடியிலும் அறியாதவராக விருந்து அறிவைப் புதுப்பித்துக்கொள்ள முடியும். ஒழுங்கு

உங்களுக்குள் இருந்து வர வேண்டும், அது வெளியிலிருந்து வரக்கூடாது. உள்ளேயிருந்து வரும் ஒழுங்குக்கும் வெளியேயிருந்து வரும் ஒழுங்குக்கும் நிறைய வேறுபாடுகள் இருக்கின்றன. வெளியிலிருந்து வரும் ஒழுங்கு என்பது அது அடுத்தவர் தனது உடல் அமைப்பிற்கு ஏற்ப தைத்த சட்டை போன்றது, அது உங்களுக்குப் பொருந்தாது. ஒழுங்கு உங்களுக்குள் இருந்துவந்தால் அது உங்களுக்கென்றே தைத்த சட்டைபோல் பொருந்தும். வாழ்க்கையில் ஒவ்வொரு நொடியும் எழுப்பும் ஆயிரமாயிரம் கேள்விகளுக்கு அந்த நொடியில் புதிய விடைகளைத் தேடவேண்டும். யாரோ எப்போதோ தயாரித்துக் கொடுத்த பதில்களை வைத்துக்கொண்டு வாழ்க்கையின் கேள்விகளைச் சந்திப்பது அபத்தத்திலும் அபத்தம். வாழ்க்கை எப்போதும் உயிர்த்துடிப்புடன் மாறிக்கொண்டிருக்கும். இந்த வினாடியில் சரியாக இருப்பது அடுத்த வினாடியில் சரியாக இருக்காது. ஒவ்வொரு நொடியையும் அந்த நொடிக்கு ஏற்ப வாழ வேண்டும். இந்த நொடியை இந்த நொடியின் சூழலில் வாழுவோம். அந்த முழுமைதான் அழகு. அந்த முழுமைதான் படைப்பாற்றல். ஏற்படும் மாற்றங்களையும் முரண்பாடுகளையும் ஏற்றுக்கொள்ளும் இரசிக்கும் மனநிலையை வளர்த்துக் கொள்வோம்.

பல்லாயிரம் ஆண்டுகளாக மனிதர்கள் மந்தை போல வாழ்ந்திருக்கிறார்கள். சொந்தமாகச் சிந்திக்காமல் அந்தக் கூட்டம் ஏற்படுத்திய மரபுகளை சம்பிரதாயங்களை பழக்க வழக்கங்களை கண்மூடித்தனமாகப் பின்பற்றிக்கொண்டு வாழ்க்கை என்ற பெயரில் பொழுதைக் கழித்திருக்கிறார்கள். அந்த வாழ்க்கைமுறை பொருந்தாது என உணர்ந்து இயற்கையுடனும் இயல்புடனும் வாழும் புது மனிதன் சமூகத்துக்கு எதிரானவனாகத் தெரிவான். மதம் சமுதாயம் நாகரிகம் என்பன தன்னுடைய வாழ்க்கையைப் பாதிக்காமல் தனது வாழ்க்கை முறையில் குறுக்கிடாமல் பார்த்துக் கொள்வான். சமுதாயத்தைச் சரியாகப் புரிந்து கொண்டவ னாகையால் சமுதாயம் புது மனிதனுக்கு சம்பந்தம் இல்லாததாகி விடுகிறது. அவன் தான்மட்டும் சுதந்திரமாக வாழாமல் மற்றவரும் வாழ உதவி செய்வான். வேறு யாரையும் தன் வாழ்க்கையில் குறுக்கிட அனுமதிக்காததுபோல் அவனும் வேறு யார் வாழ்க்கையிலும் குறுக்கிடமாட்டான். தனது

சுதந்திரத்திற்காக எவ்வளவு பெரிய இழப்பையும் சந்திக்க தயாராக இருப்பான்.

**புது மனிதன் தற்காலத்தவன். கூட்டம், குழாம் கடந்த காலத்தைச் சேர்ந்தது. மதங்களும் சம்பிரதாயங்களும் கலாச்சாரங்களும் நீங்கள் அவற்றின் போட்டோக் கொப்பியாக இருக்கவேண்டும் என்று விரும்புகிறது. இவற்றில் எவையும் நீங்கள் தனி மனிதனாக இருக்க அனுமதிப்பதில்லை. புது மனிதன் இதுவரை தான் அறியாதது விடும் சவாலை ஏற்றுக் கொள்கிறான். வருங்காலம் ஒருபோதும் இறந்த காலத்தைப் போல இருப்பதில்லை. 'நேற்று' என்றும் நாளையாகாது, 'நாளை' ஒருபோதும் நேற்றையைப்போல் இருக்காது, நேற்று நடந்ததை வைத்துத்தான் நாளைய வாழ்க்கைக்கு தயார்ப்படுத்திக் கொள்ளாதவன் இந்தப் புதிய மனிதன்.**

புரட்சிக்காரன் கடந்த காலத்தில் கட்டுண்டு கிடக்கிறான். அவனை மதங்கள் கட்டுப்படுத்தாமல் இருக்கலாம். ஆனால் புரட்சிகர நூல்கள், எழுத்துக்கள் அவனைக் கட்டுப்படுத்து கின்றன. அவன் மத நூல்களைத் தூக்கி எறியலாம். ஆனால் அதற்குப் பதிலாக புரட்சிநூல்களைக் கையில் எடுத்துக் கொள்கிறான். மதவாதிகள் புனிதப் பிரதேசங்களாக சில இடங்களைக் கருதுவதுபோல் புரட்சிக்காரன் சில தேசங்களைப் புனித பூமியாகக் கருதுகிறான். மதவாதிகள்போல் இந்தப் புரட்சிக்காரனும் ஏதோ ஒரு வெளிக் கோட்பாட்டின்படி வாழ்கிறான். அவனுடைய மனச்சாட்சியும் அடுத்தவர்கள் உருவாக்கியதுதான். புரட்சிக்காரன் ஒரு சமுதாயத்தை எதிர்க்கலாம். ஆனால் அவன் இன்னொரு சமுதாயத்தை ஆதரிக்கிறான். அவன் ஒரு கலாச்சாரத்தை எதிர்த்துக் கலகம் செய்யலாம். ஆனால் மற்றொரு கலாச்சாரத்துக்கு அடிமை யாகிறான். பழைய விலங்குகளைக் கழட்டிவிட்டு புதிய விலங்குகளை மாட்டிக்கொள்கிறான். உண்மையான புரட்சி 'ஒருவர் தன்னை உணர்ந்துகொள்ளுதலில்' மட்டும்தான் இருக்கிறது. தன்னை வெல்லுதல்தான் உண்மையான வெற்றி. தேசங்களைப் பிடித்தல் வெற்றியல்ல. புதிய மனிதன் தன்னை வென்றவனாவான். புது மனிதன் பிறரது அபிப்பிராயங்களி லிருந்து சுதந்திரம் பெற்றவன். பொய்யாக உண்மையாக இருப்பதைவிட உண்மையற்றவராக இருப்பது சிறந்தது.

ஏனெனில் உண்மையற்ற தன்மைக்குள்ளே உண்மைத் தன்மை இருக்கிறது என்பதை உணர்ந்தவன். பிறர் கண்களில் உண்மையாகக் காட்சியளிக்கையில் பொய்யாக உண்மைபோல் இருக்க விரும்பாதவன் இந்தப் புது மனிதன்.

புதிய மனிதன் தனது கடைசி மூச்சு வரை அவன் புதுமையானவனாக இருக்கிறான். பழைய அனுபவத்தின் அடிப்படையில் எந்தப் புது நிகழ்வுகளையும் அவன் எதிர்கொள்ளமாட்டான். ஒவ்வொரு நிகழ்வையும் அவனது நிகழ்கால உணர்வு நிலையின் அடிப்படையில்தான் எதிர் கொள்வான். மேலோட்டமாகப் பார்த்தால் அவனுக்கு ஒவ்வொருவரும் சுதந்திரமான மனிதனாகத்தான் தெரியும். புது மனிதன் தனது கடந்த காலத்தைத் தூக்கி எறிகிறான். மகான்கள் இப்படிச் சொன்னார்கள் என்று அவன் மேற்கோள்கள் காட்டுவதில்லை. இவன் தன் வழியில் வாழ்கிறான். இந்த மானிடம் தழைக்கப் புதிய மனிதர்கள் நிறையத் தேவை. மனிதனின் வளர்ச்சிக்கு இடையூறு விளைவிப்பவைகளை நீக்கிவிடுவான்.

மனித இனம் எவ்வளவோ இன்னல்கள், துன்பங்கள், அழிவுகள், போர்கள் எல்லாம் சந்தித்து, இனி எதையும் தாங்க முடியாதென்று வந்துவிட்டது. மக்களைக் காப்பாற்ற வருவேன், அக்கிரமம் தலை தூக்கும்போது தோன்றுவேன், மீண்டும் பிறப்பேன், போன்ற வசனங்கள் அழகானவைதான். ஆனால் இந்தக் கூற்றுக்கள் மனித இனத்தை மதிப்பதாகத் தெரிய வில்லை. இந்தப் புது மனிதன் அனைத்தையும் மதிக்கிறான், மானிடத்தை மதிக்கிறான், சுவாசிக்கும், உயிர்வாழும், வளரும் எல்லா உயிரினங்களையும் மதிக்கிறான். மனிதர்களை விட மேலான நிலையில் நின்றுகொண்டு மக்களைப் பார்ப்பதில்லை. யானை மீது உட்கார்ந்துகொண்டு சுண்ணாம்பு கேட்பதில்லை. மக்களில் ஒருவனாகத்தான் தன்னைப் பார்க்கிறான். இந்தப் புது மனிதன் ரொம்பத் துணிச்சல் உள்ளவன். 'நான் இருக்கப் பயம் ஏன்?' போன்ற கவர்ச்சி வசனங்கள் பேசமாட்டான், அவன் உங்களுக்குத் தலைவனாக இருக்கமாட்டான். உங்களுக்குள் இருக்கும் 'தைரியம்தான் உங்களுக்கு தலைவனாக' இருக்க முடியும் என்கிறான் புது மனிதன். உங்களுக்குள் இருக்கும் 'உன்னை' கண்டறி என்கிறார்.

மக்களின் உதவியற்ற பரிதாப நிலையை தங்களுக்கு சாதகமாக்கிக்கொள்ளும் அரசியல்வாதிகள், மதவாதிகள், விடுதலை என்று வெற்றுக் கோஷங்கள் போடுபவர்கள் போல் நடந்து கொள்ளமாட்டான். புது மனிதன் எப்போதும் சமச்சீர் நிலையிலேயே இருக்கிறான், விழிப்புணர்வு, கருணை, இல்லாமல் அந்த நிலையில் இருக்க முடியாது. அவன் செயல்கள் எதிர்ச்செய்கள் அல்ல. அவன் செயல்களைச் செய்வதற்காக செய்வதில்லை, எல்லாம் இயல்பாக நடக்கின்றன. தனக்குச் சரி என்று தோன்றிய வழியில் அவனது செயல்கள் செல்கின்றன, வாழ்க்கை விடும் சவால்களை ஏற்றுக் கொள்கிறான். அவன் தனக்கு மட்டுமே வழிகாட்டி. தனக்குத்தானே குரு, பிறருக்கு வழிகாட்டியாகவும் குருவாகவும் இருக்க மாட்டான். யாரோடும் ஒத்துப்போகாதவனும் ஒரு வகையில் சமுதாயத்தின் அடிமைதான். ஆனால் இந்த சமுதாயத்தால் ஒருபோதும் ஒரு புது மனிதனை அடிமையாக்க முடியாது. அவன் எப்போதும் எதிர்ச்செயல்களில் ஈடுபடுவதில்லை, மனித இனம் எப்படி இருக்கவேண்டும் என்று அவனுக்கு என்று ஒரு பார்வை இருக்கிறது. அதன்படிதான் அவன் நடந்துகொள்வான். அவன் பார்வை எல்லாம் அவனது ஆற்றலில்தான் இருக்கிறது. தன் சுதந்திரம்போல் மற்றவர் சுதந்திரத்தையும் உணர்வையும் மதிப்பான். அவனது செயல்களெல்லாம் அவற்றின் அடிப்படையிலேயே இருக்கும்.

*எதிலிருந்து விடுதலை? ஏன் இந்த விடுதலை? எதற்காக இந்த விடுதலை? யாருக்காக இந்த விடுதலை? விடுதலைக்கு அடுத்தது என்ன? என்பனவற்றிலும் தெளிவானவன் இந்தப் புது மனிதன். புது மனிதன் தான் பாவிக்கும் சொற்களிலிருந்தும் விடுதலை அடைகின்றான்.*

*பாவிக்கும் சொற்கள் மூலம்:*

*அறியாமையிலிருந்து,*

*பொய்யிலிருந்து,*

*போலியிலிருந்து,*

*விடுதலை அடைகிறான்.*

- *பாவிக்கும் சொற்கள் அவனுக்குத் தளைகளைப் போடாது,*
- *பாவிக்கும் சொற்கள் அவனைச் சிறைப்படுத்தாது.*
- *தனக்குத்தானே விடுதலை கொடுத்து அந்த விடுதலையை அனுபவிப்பான்.*
- *அவன் தனது சுதந்திரத்தில் இருப்பது போலவே மற்றவர்களது சுதந்திரத்தையும் மதிப்பான்.*

*உலகில்:*

*மதமற்ற மதம் உதயமாகட்டும்!!*
*அரசு அற்ற அரசு உதயமாகட்டும்!!*
*மக்களை யாரும் ஆளாத (Govern) உலகமாகட்டும்!!!*

**அவன் எந்த வழியில் செல்லவேண்டும் என்பதை அவனது தன்னுணர்வு நிலை தான் தீர்மானிக்கிறது. புதிய மனிதன் நீங்கள் எதையும் படைப்பதற்கான விடுதலை, நீங்கள் இருப் பதற்கான விடுதலை, நீங்கள் எதையும் வெளிப்படுத்து வதற்கான விடுதலை, எல்லாவற்றிற்கும் மேலாக 'நீங்கள் நீங்களாக இருப்பதற்கான' விடுதலையில் அக்கறை கொண்டவன்.**

**புதிய மனிதனது:**

**விழிப்புணர்வே அவனது வழிகாட்டி,**
**தன்னுணர்வுடனானதே அவனது செயல்கள்,**
**இயல்பு, இயற்கை, நெகிழ்வே அவனது துணை,**
**இல்லாத பாதையே அவனது பாதை.**

**தந்திரா புது மனிதனைத் தேடுகிறது, அந்தப் புது மனிதன் வேறு யாருமல்ல, அது நீங்கள்தான், நாம் ஒவ்வொருவரும் புது மனிதனாக மலர்ந்து உலகுக்கு அழகு சேர்ப்போமாக.**

**'யாதும் ஊரே யாவரும் கேளிர்'**

**மனித நேயத்துடன் வணக்கம்.**





இந் நூலாசிரியர் எஸ்.குருபாதம்

**தந்திரா ஞானம் :**

**(The Quintessence of Tantra) :**

- ☐ இது உடலைப்பற்றிய தெளிவான பார்வையைக் கொண்டது.
  (It has a clear vision and understanding of the body)
- ☐ இது வாழ்வில் ஏற்படும் முடிச்சுக்களை அவிழ்க்கிறது.
  (It solves the day to day problems in life)
- ☐ இது பல சிக்கல்களை இலகுவாக தீர்க்கிறது.
  (It finds solutions to any matters easily)
- ☐ இது உன்னத வாழ்வுக்கு வழிகாட்டுகிறது.
  (It paves the path to ethical life)
- ☐ இது உள்ளார்ந்த பேரானந்தத்திற்கு அழைத்துச்செல்கிறது
  (It leads the life to the inner most Joyfulness)
- ☐ இது வாழ்வியலில் ஏற்படக்கூடிய பல சந்தேகங்களைத் தீர்க்கும் ஒரு அகராதி.
  It clears the doubts in life like an encyclopaedia
- ☐ இது ஒரு மானிடவியல் விஞ்ஞானம்
  It is a human - science